# பூவே,
# இளம் பூவே!

அரசு மணிமேகலை



நர்மதா பதிப்பகம்
16/7, ராஜாபாதர் தெரு, பாண்டி பஜார்,
தியாகராய நகர், சென்னை-600 017.

# நன்றி நவிலும் நேரம்



என் அன்புக்குரிய தோழி விசாலாட்சி அவர்களும், அவர் கணவர் வேணுகோபால் அவர்களும் என் மீது மிகுந்த அன்புடையவர்கள்; தக்க நேரத்தில் உதவி செய்பவர்கள்; என் குழந்தைகள் மீது பாசமும், பரிவும் உடையவர்கள்.

அது மட்டுமல்ல- எல்லாப் பத்திரிகைகளிலும் வருகிற நல்ல சிறுகதைகளைப் படித்துவிட்டு அதைப் பற்றி விவாதிக்கிற என் தோழி விசாலாட்சி தமிழ்த்துறைப் பேராசிரியர், படைப்பிலக்கியத்தின் மீது ஆர்வம் இருப்பது இயற்கை.

எம்.எம்.சி. ஃபார்மகாலஜி பேராசிரியரான திரு. வேணுகோபால் அவர்களை வீட்டில் எப்போதும் புத்தகமும் கையுமாகத்தான் பார்க்க முடியும்... அந்த அளவுக்கு இலக்கிய ஆர்வம். மனமொத்த தம்பதிகளான இருவரும் நீண்ட நெடுங்காலம் உடல் நலத்தோடும், உற்சாகத்தோடும், மகிழ்ச்சியோடும் வாழ வேண்டும் என்கிற வாழ்த்தோடு இந்த நூலை இருவரின் அன்புள்ளங்களுக்கும் காணிக்கையாக்குகிறேன்.

17-4-94

அரசு மணிமேகலை

# பூவே,
# இளம் பூவே !

## 1

சொர்ணா அவசர அவசரமாகத் தலையை வாரிக் கொண்டிருந்தாள். இடுப்புக்கும் கீழே திமிறிக் கொண்டு இறங்கியிருந்த அந்தக் கருமேகக் கூந்தல் அவளைப் பாடாய்ப் படுத்தி வைத்தது.

எரிச்சலோடு சீப்பைத் தரையில் வீசி எறிந்தாள். ''அம்மா! வாம்மா, எனக்குக் காலேஜுக்கு டைம் ஆயிட்டுது, ஒரு பின்னல் போட்டுட்டுப் போன்னா, ரொம்பத்தான் பண்ணிக்கிறியே!''

''கொஞ்சம் இரு. பறக்காதே. இட்லித் தட்டை வெச்சுட்டு வந்துடறேன்...''

வசந்தி அவசரமாக மாவை இட்லித் தட்டில் ஊற்றி விட்டு, பரபரப்புடன் வெளியே வந்தாள். இன்னும் ஐந்து நிமிடத்தில் அப்பாவுக்கும் பெண்ணுக்கும் டிபன் வைத்து விடலாம்...சொர்ணா ரெடியாகிக் கிளம்பிவிட்டாள் என்றால், தை தை என்று ஆடுவாள்.

இட்லியாவது, தோசையாவது... ஒன்றையும் சாப்பிடவும் மாட்டாள்; எடுத்துக்கொள்ளவும் மாட்டாள். ஓட்டமாய் ஓடிவிடுவாள்.

ஆமாம், அப்படிக் கத்திக்கொண்டிருந்தாளே, இப்போது என்ன சத்தத்தையே காணோம்?

தயக்கத்துடன் சமையல் அறையிலிருந்து எட்டிப் பார்த்தாள். அட, பாரேன்! இந்த மனுஷர் என்ன மாய்ச் சிக்கெடுத்து விடுகிறார் பாரேன்...

''ஏண்டா சொர்ணா, இவ்வளவு சிக்கிருந்தா எப்படிப் பின்னல் சரியா வரும்? ரெண்டு நிமிஷம் ஆகுமா? கடகடன்னு சிக்கெடுத்துட்டுப் பின்னிக்கக் கூடாதா?''

''கை வலிக்குதப்பா...'' கொஞ்சினாள் சொர்ணா. வசந்தி சிரித்தாள்.

''அடேயப்பா! அண்டங்காக்கா கர்ருன்னிச்சாம். ஆம்படையானைக் கட்டிப் பிடிச்சிக்கிட்டாளாம். ஒரு பொண்ணுக்குச் சிக்கெடுக்கறதுக்குள்ளே கையை வலிச்சிடுமாக்கும்... அவ்வளவு நாசூக்கா?''

''நீ சும்மா இருடி சொர்ணா! உங்கம்மாவுக்குப் பொறாமை. உனக்கு நான் சிக்கெடுத்து விடறேன்னு. இவ தலையை நான் தொட்டதுகூட இல்லே இல்லியா. அதுதான், பழமொழில்லாம் இழுத்து விட்றா. அண்டங்காக்காயாம். கர்ருன்னிச்சாம்... ஆளைப் பாரு ஆளை!''

''ஆமாம்ப்பா... அம்மாவுக்குப் பொறாமைதான்.''

''சொர்ணா, என்னமோ பழமொழி சொன்னாளே உங்கம்மா. அதும்படி, அண்டங்காக்கா கர்ருன்னதும், ஆம்படையானை இவதான் கட்டிப் பிடிச்சிக்கிட்டா. எப்போ தெரியுமா? எங்க கல்யாணம் ஆன அடுத்த நாளே...''

ராஜலிங்கம் பெண்ணைப் பார்த்துக் கண்ணடித்துச் சிரித்தார்.

வசந்தியின் முகம் சிவந்து போயிற்று. அட! வாய் தவறி ஒரு பழமொழி சொல்லி விட்டதற்காக இப்படியா? எதைத்தான் மகள் எதிரில் பேசுவது, எதைப் பேசக்கூடாது என்று ஒரு விவஸ்தையே இல்லையா? இந்த மனுஷர் ஒரேயடியாகத்தான் ஆடுகிறார்...

கணவனைப் பார்த்து முகம் சுளித்தவள், ஏதும் பேசாமல் சமையல் அறைக்குள் போய் நுழைந்து கொண்டாள். இந்தப் பெண் இதையே சொல்லிச் சொல்லிக் கிண்டல் பண்ணுவாள்...

''சொர்ணா, இந்த வருஷத்தோட உன் படிப்பு முடியுதுடா. என்ன மாதிரியான மாப்பிள்ளை வேணும்? என்கிட்டே சொல்லு''

''எனக்கு மேற்கொண்டு எம்.ஏ. படிக்கணும்னு இருக்குதுப்பா.''

'படிடா. படி. கல்யாணம் ஆன பிற்பாடு படி. யார் வேணாம்னது? அது சரி, என்ன மாதிரியான மாப்பிள்ளை வேணும்? டாக்டரா? எஞ்சினியரா? பாங்க் ஆபீசரா? இல்லே ஃபாரின்லே வேலை பார்க்கறவரா?''

''என்ன வேலையிலே இருந்தாலும் சரிப்பா. ஆளு மட்டும் நிச்சயமா, குணத்துலே உங்களை மாதிரி இருக்கணும்.''

''நானா! நான் என்னடா பிரமாதம்?''

''ஆமாம்ப்பா... உங்களோட பாசமான மனசு, அம்மா மேலே உங்களுக்கு இருக்கிற கொள்ளைப் பிரியம், பொறுப்பா ஒண்ணு ஒண்ணையும் பார்த்துப்

பார்த்துச் செய்ற அந்த அன்பு, பொறுமை, சிரிச்ச முகம்—எல்லாம் இருக்கணும்ப்பா..."

ஒரு தந்தையின் மிகப் பெரிய சந்தோஷ நிமிஷங்கள் இவை...

ஒரு மகள் இப்படிச் சொல்லி, ஒரு தகப்பன் அதைக் கேட்பதென்றால், ஓ! அவன் போன ஜென்மத்தில் புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

ராஜலிங்கம் பெருமிதத்துடன் வசந்தியைப் பார்த்துச் சிரித்தார். வசந்தி மகளைப் பார்த்துப் புன்னகைத்தாள்.

''போதும், போதும். அப்பா பெருமைதான் வீடு கொள்ளலை. ஒரு தடவை சிக்கெடுத்து விட்டதுக்கே இவ்வளவு பாராட்டா? ம்! நானும் காலையிலிருந்து ராத்திரி வரைக்கும் இந்தக் குடும்பத்துக்காகப் பாடாப் படுறேன். உழைப்பா எடுக்கறேன்... ஆனாலும் என்ன? உங்க கழுத்துக்குத்தான் மாலையா வந்து விழுது...ம்...''

பொறாமைப்பட்டவளைப் போலப் போலிப் பெருமூச்சுடன் தட்டெடுத்து வந்து வைத்த அம்மாவைப் பார்த்துச் சிரித்தாள் சொர்ணா.

''ஹாங்... அப்பா! ஒண்ணு மறந்துட்டேனே. அந்தப் பையனுக்கு அப்பப்ப பழமொழி சொல்லத் தெரிஞ்சிருக்கணும்...''

''ஓ! அப்படியா?''

திரும்பி மனைவியைப் பார்த்த ராஜலிங்கம், கிண்டலாகச் சிரித்து விட்டு, மகளைப் பார்த்துக் கண்ணடித்தார்.

''என்ன மாதிரிப் பழமொழிம்மா?''

"அதுதாம்ப்பா... 'வித்தாரக்கள்ளி விறகு வெட்ட போனாளாம்; கத்தாழை முள்ளு கொத்தோட குத்திக் கிச்சாம்.' அப்புறம்மா...இருக்கவே இருக்குது நம்ப 'அண்டங்காக்கா.'"

"திமிருடி உனக்கு... வரேன். வந்து நாலு போட்டறேன்."

செல்லமாய்க் கோபித்துக் கொண்ட வசந்தி இட்லி, சட்னி, மிளகாய்ப் பொடி, எண்ணெய் எடுத்து வந்து வைத்தாள்.

அப்பாவும் பெண்ணுமாய்ச் சிரித்துக் கொண்டே சாப்பிட ஆரம்பித்தார்கள்.



ராஜலிங்கம் கல்லூரியில் இறக்கிவிட்டார்.

"அப்பா...டாட்டா..."

"வரேம்மா..."

கார் கண்ணை விட்டு மறையும்வரை பார்த்துக் கொண்டே நின்றிருந்தவள், பிறகே கிரவுண்ட் பக்கமாய் நடக்கத் தொடங்கினாள்.

"அதோ வரா பாருப்பா சொர்ணா..."

"என்ன சொர்ணா, ஏன் இவ்வளவு லேட்?"

கல்யாண விஷயமாய் அப்பா பேசிக் கொண்டிருந் தார் என்றால், தோழிகள் ஒரேயடியாகக் கலாட்டா செய்வார்கள். சொர்ணா அதை மறைத்துவிட்டுச் சொன்னாள்,

"ஒரே அரட்டைப்பா... அப்பா ஒரே கிண்டலும் கேலியுமா, கலாட்டா பண்ணிட்டாரு. அப்புறம் பாத்தா, ரொம்பவே லேட்டாயிட்டுது. அதை அட்ஜஸ்ட் பண்ண

வேகமா டிரைவ் பண்ணிட்டு வந்தாரு. தேவைதானா? ஹாங்... 'பர்ஸ்ட் அவர்' சார் வரலியா?''

''ம். வந்தாரு... அட்டெண்டன்ஸ் எடுத்து முடிச்சதும் திரும்பி, போர்டுலே என்னமோ எழுதினாரு பாரு, நாங்க எல்லாரும் ஓடியே வந்துட்டோம். ஒரு ஈ, காக்கா இல்லே கிளாஸ்லே. ஆனாலும், அவர் பாட்டுக்கு என்னமோ பேசிக்கிட்டே தான் இருக்கிறாரு...''

''இருக்கட்டும் பாவம்... 'நெக்ஸ்ட் அவர்' ஜி.கே. சார் கிளாஸ். நல்லா எடுப்பாரு. போயிடுவோம். ஆமாம், ஏன் நளினி, இந்த விஜய், சங்கர், குரு இன்னிக்கு வரலியா?''

''வந்திருக்கானுங்களே... நேத்து ஒரு காலேஜ்லே பேச்சுப் போட்டியாம். இவனுங்க போயிருக்கானுங்க...''

''போயி...''

''போயி, பொளந்துட்டு வந்திருக்கானுங்க...''

''அட! இவனுங்க அவ்வளவு நல்லாப் பேசுவாங்கன்னு எனக்குத் தெரியாதே...''

''நீ ஒண்ணு சொர்ணா, இவனுங்க நிஜம்மாவே பொளந்துட்டு வந்திருக்கானுங்கன்னா...''

''என்ன நளினி?''

''ஆமாம் சொர்ணா! கலாட்டா பண்றதுக்கே அந்தக் காலேஜுக்குப் போயிருக்கானுங்க. சரி... வந்தது வந்துட்டோம்னு ஒரு கதவை நிஜமாவே பேத்துப் போட்டுட்டு வந்திருக்கானுங்க... அதோ வராங்க பார்...''

''ஹாய் சொர்ணா...''

விஜய், குரு, சங்கர் மூன்று பேரும் சிரித்த முகத்துடன் வந்து நின்றார்கள்.

"ஹாய்... ஆமாம், நளினி சொல்றது நிஜமா என்ன?"

"அதை ஏன்ப்பா கேக்கறே? கதவைப் பேத்துக்கிட்டு இருக்கிறேன், 'என்னடா இப்படிப் பண்ணிட்டீங்க?'ன்னு ஒரு சார் வந்து எகிறினார் பாரு. எனக்குக் கோவம்னா கோவம். 'நீ என்னய்யா பெரியா பிஸ்தா? எங்களை அதட்டறே? தில் இருந்தா உன் காலேஜ் ஸ்டூடண்ட்ஸ அதட்டுய்யா,'ன்னேன் பாரு. அவரு லபோதிபோன்னு கத்தறாரு..."

"ஏன், அவருக்கென்ன வந்ததாம்?"

"அட! அவரு நம்ம காலேஜ் சார்தானாம். 'அடப் பாவிங்களா, நான் ரெண்டு வருஷமா உங்களுக்குப் பாடம் எடுத்துக்கிட்டு வரனே. என்னையாடா தெரியலே உங்களுக்கு?' அப்படின்னு ஒரே அலம்பல் பண்ணிட்டாரு...ச்சே!"

"யாரு தலைவா அவரு?"

"நமக்கு ஆன்சிலரிக்கு வருவாரே, அவருன்னு நெனக்கிறேண்டா. எங்கடா...பாடம் ஆரம்பிச்சவுடனே தான் நம்பளுக்குச் சொக்கிக்கினு வந்துடுது...யாரைன்னு கண்டோம்?"

"ஒரு நாளைக்குப் பாரு மவனே, பட்டாஸ் வெடிக்கப் போறேன் கிளாஸ்லியே..."

"வேணாம்டா. கட்டிடம் ரொம்ப வீக்கா இருக்குது. அப்படியே உள்ளே வாங்கிக்கும். ஆமாம்."

"ஏன் விஜய்... இந்தக் கெமிஸ்ட்ரி பையனுங்க அன்னிக்குச் சொல்றானுங்க. அவனுங்க கிளாஸ் பொண்

னுங்கதான் அழகுன்னா அழகாம். கொள்ளை அழகாம்.''

''என்ன பண்றது தலைவா? அந்த மாதிரிப் பெருமை அடிச்சிக்கிற பாக்கியத்தை ஆண்டவன் அவங்களுக்குக் குடுத்திருக்கிறாரு. ம்...நாம்ப பொறாமைப்பட்டா முடியுமா? நமக்கு அந்தப் பாக்கியமே நஹி...நஹி...''

''யூ... உங்களை...''

ஆத்திரத்தில் சொர்ணாவும், நளினியும் கீழே கிடந்த கற்களைப் பொறுக்கி எறிந்தார்கள்.

''பாத்தியா தலைவா? எல்லாம் பாரு, டார்வின் தியரியை மெய்ப்பிக்குதுங்க... நான் அப்பவே சொன்னனில்லே...''

நளினி ஆத்திரத்துடன், ''ஏய்! ஸ்டாப் இட்... உங்க மூஞ்சியைக் கண்ணாடியிலே பார்த்ததே இல்லியா?'' என்று கத்தினாள்.

சொர்ணா சண்டையை விலக்கி வைத்தாள். ''ஏய் நளினி, விடுப்பா. அவங்க்வங்க கொடுத்து வெச்சது அவ்வளவுதான். கெமிஸ்ட்ரி பையனுங்க என்ன மாதிரி டிரெஸ் பண்றானுங்க? ஆளும் எப்படி இருக்கிறானுங்க? நம்ம கிளாஸ்லேயும் இருக்குது பாரு, ஒண்ணொண்ணும் வத்தலும் தொத்தலுமா, பஞ்சத்திலே அடிபட்ட பனாதிங்க மாதிரி...''

விஜய், குரு, சங்கர் தொலைவில் போய்க் கொண்டிருந்தார்கள்—முகத்தைத் துடைத்தபடி.

பியூன் ஆறுமுகம் அரக்கப் பரக்க ஓடிவந்தான்.

''சொர்ணம்மா...சொர்ணம்மா...''

''என்ன ஆறுமுகம்?''

''அய்யோ....நான் என்னன்னு சொல்லுவேன்?'' பதறினான் அவன்.

# 2

கையை உதறிக்கொண்டு, சொர்ணா எழுந்திருந்தாள். அவளுக்குத் தலையைச் சுற்றியது. விபரீதக் கற்பனைகள் அவளைச் சுற்றிலும் கைகொட்டி நின்றன.

சொர்ணாவால் நிற்க முடியவில்லை; தள்ளாடினாள். என்ன விஷயமாக இருக்கும்?

அப்பாவுக்கு ஏதாவது? ம்கூம்... அம்மாவுக்கு...? அவளுக்கு யோசிக்கிற தெம்பில்லை. ஆறுமுகம் ஏன் நடுங்குகிறான்?

ஆறுமுகம் முகம் வியர்த்திருந்தது. பரபரப்பாக, கால் மாற்றி நின்று கொண்டிருந்தான்.

''என்ன? என்ன ஆறுமுகம்? ஏன் இப்படி நடுங்குது உனக்கு. என்ன விஷயம்?''

அவள் தவிப்பை நின்று நிதானித்து ரசித்த ஆறுமுகம், புன்னகையோடு தன் முகபாவத்தை மாற்றிக் கொண்டு பவ்வியமாகச் சொன்னான்:

''சொர்ணம்மா, பாட்டுப் போட்டியிலே நீங்க கலந்துக்கணுமாம். வைஸ் பிரின்சிபால் கூப்பிடறாரு...''

சொல்லிவிட்டு அப்பாவியாகப் பார்த்தான். சொர்ணா திகைத்தாள். இதற்கா அப்படி ஓடிவந்தான்? என்னவோ முக்கியமான விஷயம் சொல்ல வந்தவன் போல, நெகிழ்ந்து நின்றான். உடல் கூட நடுங்கியதே?

''இந்தா ஆறுமுகம், இதுக்கா நீ அப்படி ஓடிவந்தே? நான் என்னமோ ஏதோன்னு நினைச்சி...''

"நினைச்சி..."

"பயந்தே போயிட்டேன்... என்ன ஆளு நீ? சே! இந்த விஷயத்தைச் சொல்ல இப்படியா ஓடி வர்றது? நடந்து வந்து சொல்றதுக்கென்ன கேடு? மண்டையிலே மசாலாவே கிடையாதா ஆறுமுகம்?"

"அப்படின்னா... சொர்ணம்மா, நீங்க பயந்துட்டீங்க."

"ஆமாம்யா... ஆமாம்."

"நல்லாவே பயந்துட்டீங்க..."

ரசித்துச் சிரித்தான் ஆறுமுகம்.

"அட, ஆமாம்யா..."

"ம்ம்... அப்படித்தானே இருந்திருக்கும் அன்னிக்கு எனக்கு? என்னை எப்படி மாட்டி விட்டீங்க! அதுதான் பழிக்குப் பழி. எப்படிம்மா என் நடிப்பு?"

ஆறுமுகம் காலரை நிமிர்த்தி விட்டுக் கொண்டான்.

"உன் நடிப்புத் தலையிலே இடி விழ! வா, பிரின்சிபல்கிட்டயே புகார் பண்றேன்..."

"தாராளமாப் பண்ணுங்க. 'ஏண்டா ஆறுமுகம் இப்படிப் பண்ணே?'ன்னு கேட்டா, அன்னிக்கு நீங்க பண்ணதையும் சொல்லிட்டுப் போறேன்..."

சொர்ணா, வாய் அடைத்து நின்றாள்.

அவளும் நளினியும் பத்து நாட்களுக்கு முன்னால், பிரின்சிபல் அறைக்கு ஏதோ வேலையாகப் போனார்கள். ட்யூன் முனகிக்கொண்டே நடந்த சொர்ணாவின் பார்வையில் ஆறுமுகம் பட்டது பாவம், போதாத வேளை என்றுதான் சொல்லவேண்டும். அவனையே பார்த்தாள் சொர்ணா.

ஆறுமுகம் நிம்மதியாக ஸ்டூலில் உட்கார்ந்து தூங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்ததும், சொர்ணா ஓர் உல்லாசத் துள்ளல்...

அவசரமாய்த் தூக்கத்தில் இருந்து ஆறுமுகத்தை எழுப்பி விட்டவள், அதே வேகத்தில் காதுக்குள் முணு முணுத்தாள்.

"லாங் பெல்... லாங் பெல் கொடுக்கச் சொல்றாரு பிரின்சிபல்...லாங் பெல்..."

நித்திராதேவியின் அணைப்பிலிருந்து யாரோ தன்னை உலுக்கிவிட்ட அதிர்ச்சியில், காதில் ஒலித்த ஆணையைச் சிரமேற்கொண்டான் ஆறுமுகம்.

வந்தது விபரீதம்... என்னவோ ஏதோ என்று மாணவ மாணவியர் வகுப்பை விட்டு வெளியேற, பேரா சிரியர்கள் திகைப்புடன் முதல்வர் அறைக்கு ஓடிவர, பிரின்சிபல் கடுமையாக அரை மணி நேரம் ஆறுமுகப் பெருமானுக்கு அர்ச்சனை நடத்தினார்.

ஒளிந்திருந்த இடத்திலிருந்து எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த சொர்ணா விழுந்து விழுந்து சிரித்தபடி வீட்டுக்கு நடையைக் கட்டினாள்.

பாவி! எப்படியோ நான்தான் என்று தெரிந்து கொண்டிருக்கிறான்... அதற்காக இப்படியா? வா வா! உனக்குக் கச்சேரி வைக்கிறேன்.

குரலைத் திடீரென்று தழைத்துக் கொண்டாள். "அதுக்குன்னு இப்படியா நீ சம்சாரத்தை அடிக்கிறது? பாவம் இல்லே..."

"என்ன சொர்ணா, என்ன விஷயம்?"

தன் பின்னே ஆறடி உயரத்தில் நின்ற அந்த மனிதரைப் பார்த்ததும், ஆறுமுகத்துக்குத் தீயை மிதித்தாற் போலச் சுரீல் என்றிருந்தது.

அய்யோ ..பிரின்சிபால் அய்யாவா? இவர் எப்போது வந்தார்?

''அது சார்... ஆறுமுகம் கிட்டே உன் சம்சாரம் நல்லா இருக்காங்களான்னு கேட்டுக்கிட்டு இருந்தேன். பாவம், அவர் சம்சாரத்தை ஆஸ்பிடல்லே முந்தாநாள் பார்த்தேன் சார்.''

''என்ன ஆறுமுகம்? என்ன ஆச்சு?''

''ஹாங்... சார்... அது... நல்லாத்தான் சார்...''

திணறினான் ஆறுமுகம். என்னத்தைச் சொல்வது? அவள் குத்துக்கல்லாட்டம் நன்றாகத்தானே வீட்டில் இருக்கிறாள்? நேற்றுகூட ஒரு சண்டையில், கன்னத்தில் ஓர் இடி.

''ஒட்டகத்தைக் கட்டிக்கோ...'' இடித்தாளே மகராசி... முகமே அல்லவா முதுகுப் பக்கமாய்த் திரும்பிக் கொண்டது? ம்கூம்! இந்தச் சொர்ணா பொண்ணு எதிலோ மாட்டிவிடத்தான் ஆரம்பித்திருக்கிறது.

''பாருங்க சார், இந்த ஆறுமுகம் மென்னு முழுங்கறதை. குழம்பிலே உப்புக் குறைஞ்சா என்ன சார்? எடுத்துப் போட்டுக்கிட்டா, சரியாப் போயிடப் போவுது அதுக்காக, சம்சாரத்தை அடிச்சு நொறுக்கறதா?''

ஜாடையாக ஓரக் கண்ணால் முதல்வரைப் பார்த்தாள். அவரின் மீசை துடித்துக் கொண்டிருந்தது. முகம் செவசெவ என்று நிறம் மாற ஆரம்பித்தது. பெண்களை

இழுத்துப் போட்டு அடிக்கிறவன் மனிதனே இல்லை என்று அடிக்கடி கூட்டத்தில் சொல்பவர்.

நாசுக்காகப் பார்வையைத் திருப்பிக் கொண்டாள். "பாவம் சார்! ஆறுமுகம் பேர்லே தப்பு இல்லே. பொண் டாட்டி புள்ளைங்கன்னு ஆசையா இருக்கிறவர்தானே? அன்னிக்கு என்னவோ கொஞ்சம் ஓவர் போல... நாட்டுச் சரக்கோ என்ன கண்றாவியோ. விட்டுடுங்க சார்!"

ஆறுமுகம் தொபீர் என்று அப்படியே புல்வெளியில் உட்கார்ந்து விட்டான்.

நானாவது மனைவியை அடிக்கிறதாவது? கையை உயர்த்துகிற அளவுக்கு எனக்கேது தைரியம்?

ஓரக் கண்ணால் சொர்ணாவைப் பார்க்க, அவள் அப்பாவியாய் ஒரு பார்வை நல்கினாள்.

"ஏன்யா உனக்கு அவ்வளவு மப்பு ஏறிடிச்சா? தண்ணி போடற அளவுக்குப் பெரிய மனுஷன் ஆயிட்டியா? பொழுதுக்கும் உழைக்கிறியே... நல்ல ஆளுன்னு நினைச்சி, உனக்கு ஒரு ஸ்பெஷல் இன்கிரி மெண்ட் போடலாம்னு நெனச்சேன் பாரு. பொண்டாட் டியை அடிக்கிறவன் ஒரு மனுஷனா? முட்டைக் கண்ணை வெச்சிக்கிட்டு உருட்டி உருட்டி முழிக்கிறியே! சொல்லேன்!"

அவர் காய்ச்சு காய்ச்சு என்று காய்ச்சத் தொடங்கி னார். ஆறுமுகம் சுருண்டு போய், வறண்டு போய், திணற ஆரம்பித்தான்.

"அது... நான் அடிச்சதே இல்லை சார்!"

"பொய் வேறயா? திறக்காதே வாயை!"

பிரின்சிபல் பீதாம்பரம் கோபமாகத் திட்டியவாறே நடக்க, ஆறுமுகம் பேந்தப் பேந்த விழித்தவாறு பின் தொடர்ந்தான்.

சொர்ணா உதட்டைக் கடித்துச் சிரிப்பை அடக்கிக் கொண்டாள். ம்ம்... இப்பத் தெரிஞ்சுதா? என்கிட்டயா மோத நினைக்கிறே?

கிண்டலாகச் சிரித்தவாறே நடையைக் கட்டினாள். பெரிய இவரு... நடிச்சாராமில்லே...

**''அலை கடலும் ஓய்ந்திருக்க**
**அகக் கடல்தான் பொங்குவதேன்?**
**நில மகளும் துயிலுகையில்**
**நெஞ்சகம்தான் விம்முவதேன்?''**

உணர்ச்சித் தவிப்போடு, தன்னை மறந்து உள்ளம் உருகப் பாடினாள் சொர்ணா. அவள் முகத்தில் பல வேறு உணர்ச்சி 'பா'வங்கள்... இசை தேன் பாகாய், சோகத் தளும்பலாய்க் கசியத் தொடங்கியது.

ராஜலிங்கமும், வசந்தியும் கிறங்கிப் போய் உட்கார்ந்திருந்தார்கள். முகங்களில் ஓர் இன்பப் பரவசம்...

சிணுங்கினாள் சொர்ணா.

"என்னப்பா நீங்க? நான் பாடி முடிச்சிட்டு நீங்க சொல்லப் போற வார்த்தைக்காகக் காத்துக் கிட்டு நிக்கறேன். நீங்க என்னன்னா... போங்கப்பா... ஒண்ணுமே சொல்லாமே, உக்காந்திருந்தா எப்படி?"

''நீ பாட்டை முடிச்சிட்டியாடா? ம்கூம்... இன்னும் என் காதிலே உன் பாட்டு ஒலிச்சிக்கிட்டே இருக்கு தும்மா. அடாடா! பாரதியார் அனுபவிச்சுத்தான்

சொல்லியிருக்காரு. 'பாட்டினைப் போல் ஆச்சரியம் பாரின்மிசை இல்லையடா,'ன்னு...''

''நல்லா பாடினேனாப்பா? ஏம்மா?''

''நல்லா இருந்ததாவா? சும்மா ஜிலுஜிலுன்னு, குற்றால அருவியிலே குளிச்சிட்டு வந்தாப்பலே இருந்ததும்மா. உன் குரலும், நீ பாடின விதமும், உணர்ச்சி கொப்பளிக்கிற அந்தப் 'பா'வமும்! ஓ! சூபர்ப்...''

''அப்ப பரிசு எனக்குக் கிடைக்கும்னு சொல்றீங்க?''

''ஷ்யூர்... பர்ஸ்ட் பிரைஸ் மிஸ். சொர்ணா ராஜலிங்கம்...'' அறிவித்தார் மகிழ்ச்சியோடு.

''எல்லாம் சரிங்க. இந்த ஆட்டம் பாட்டம், வால்தனம் எல்லாம் விட்டுட்டு, பொண்ணா லட்சணமா அடக்க ஒடுக்கமா நடந்துக்கச் சொல்லுங்க...'' என்றாள் வசந்தியின் அம்மா.

''என்ன வசந்தி, புதுப் புகார்?''

''காலேஜ்லே உங்க மக அடிக்கிற கூத்துக்கு அளவே இல்லையாம். போன வாரம் இவ காஜேஜ் பியூன் ஆறுமுகத்தைப் பார்த்தேன். அவன் சொன்னான்...''

''அண்டங்காக்கா கர்ருன்னிச் சின்னானா?''

''பார்த்தீங்களாங்க அவ திமிரை?''

''ஏன் வசந்தி கோபப்படறே? விஷயத்தைச் சொல்லு...''

வசந்தி விவரித்தாள்.

ராஜலிங்கம் 'டை' முடிச்சைச் சரி செய்து கொண்டார். புன்னகை பூத்துவரத் தருணம் பார்ப்பது சொர்ணாவுக்குப் புரிந்தது; அந்தப் புன்னகையைத் தந்தை அடக்கி வைக்கிறார் என்பதும் புரிந்தது.

"இதோ பார்டா சொர்ணா! யார் மனசையும் நாம புண்படுத்தக் கூடாது. அது முக்கியம். நீ விளையாடு. ஆனா, ஓர் அப்பாவிக்குப் பிரச்னை வரக்கூடாது. உங்க பிரின்சிபல் அவனைப் பத்தி என்ன நினைப்பார்? நீ இன்னிக்குப் போறே... பிரின்சிபல்கிட்டே நடந்ததைச் சொல்றே. ரைட்? ஏழை பாவம்... ஓர் இன்கிரிமெண்ட் கிடைக்கலைன்னா எவ்வளவு வேதனைப்படுவான்? எவ்வளவு சபிப்பான்? வேணாம்மா யார் சாபமும் உன் வழியிலே நிற்கக் கூடாதுடா!"

"சரிப்பா... சாரி!"

"தட்ஸ் குட்..."

மகள் வாழ்க்கையில் அவள் பாதங்களுக்குப் போடப் படுகிற பாதையாக மலர்களே இருக்க வேண்டும் என்று விரும்பிய அந்தத் தந்தை உள்ளத்துக்கு, முட்களும் இருந்து பாதங்களைக் கீறிக் கிழிக்கிற வாய்ப்புண்டு என்பது அந்த நேரத்தில் தெரியாமல் போனது.

# 3

சொர்ணா பாட்டுப் போட்டியில் கலந்து கொள்ள பகல் ஒரு மணி அளவிலேயே கிளம்பினாள்.

"ஸாரி சொர்ணா! இன்னிக்கு என்னாலே உன்கூட வரமுடியாதுப்பா. அம்மா சீக்கிரமா வரச்சொல்லி இருக்கிறாங்க. பெஸ்ட் ஆஃப் லக். நல்லாப் பாடி, முதல் பரிசை வாங்கிட்டு வரணும். என்ன சொர்ணா?"

அவளைப் போலவே விஜய் பழித்துக் காட்டினான்.

''ஆமாம் சொர்ணா! பிரைஸ் ஒருவேளை கிடைக்கலைன்னா, கடையிலேயாவது வாங்கிட்டு வந்துடணும். புரியுதா?''

''விஜய், அது உன்னை மாதிரி ஆளுக்குப்பா. சொர்ணா பாடி, என்னிக்காவது பிரைஸ் கிடைக்காமப் போயிருக்குதா?''

நளினி பதிலடி கொடுத்தாள். சிரித்துக்கொண்டே சொர்ணா கிளம்பினாள்.

விஜய் கேட்டான். ''நாங்க வேணும்னா வரட்டுமா?''

''வேணாம் சாமி, நான் தனியாவே போய்க்கிறேன்.'' ஒரு கும்பிடு போட்டுவிட்டு, சொர்ணா நகர்ந்தாள்.

போட்டி நடக்கும் இடம் திருவிழாக் கோலம் பூண்டிருந்தது. எள் விழ இடமில்லை. அப்படி ஒரு கூட்டம்.

பாட ஒரு பையன் வருகிறான் என்றால், அவன் கல்லூரியிலிருந்து எப்படியும் முப்பது, நாற்பது பேர் கூட வருவது என்பது ஒரு பேஷனாகி விட்டது.

எதற்கு இந்த முப்பது நாற்பது பேர்? தங்கள் கல்லூரியின் பெயரைச் சொன்னதுமே, மண்டபம் அதிரும்படி கைதட்ட வேண்டுமே, அதற்காகத்தான்!

அது கூடப் பரவாயில்லை. இன்னொரு கல்லூரியின் பெயரைச் சொன்னதும், கிண்டலும் கேலியுமாக ஏதேதோ கத்துவது, சீட்டியடிப்பது... இத்துடன் நிறுத்திக் கொண்டாலும் பரவாயில்லையே!

தங்கள் கல்லூரியைத் தவிர, வேறு எந்தக் கல்லூரி மாணவனோ, மாணவியோ பாடினாலும் பாடவே அனுமதிக்காமல், கூடவே கத்தி, ஊளையிட்டு அவனைத் தடுமாறச் செய்வது, பாதிப் பாடலிலேயே வெட்கமும், வேதனையுமாக மேடையில் இருந்து இறங்க வைப்பது...

இந்தக் கொண்டாட்டங்களைச் சொர்ணா முதன் முதலில் பார்க்க நேர்ந்தபோது, பயந்துதான் போனாள். பெண்கள் கல்லூரிகளிலேயே பழகி வந்தவளுக்கு இது பெரும் அதிர்ச்சியாகத்தான் இருந்தது.

பெண்கள் கல்லூரியில் போட்டி நடந்தால், அதன் போக்கே தனி.

அமைதி கொலு வீற்றிருக்க, உரக்கப் பேசினாலே அந்த அமைதிக்குப் பழுது நேர்ந்து விடுமோ என்று தயங்கித் தயங்கிப் பெண்கள் மெல்லப் பேசும் சூழ்நிலையில் பாட வருவோர் எந்தவிதமான பிரசினையும் இல்லாமல், ஒன்றுபட்ட சிந்தனையுடன் நிம்மதியாகப் பாடுவதுதான் வழக்கம்.

சொர்ணா முதன் முதலில் ஆண்கள் கல்லூரி ஒன்றிலே மேடையேறியபோது, பூனைகள் 'மியாவ் மியாவ்' என்று மெல்ல ஆரம்பித்து. கர்ண கடுரமான குரலில் ஒன்றையொன்று விழுந்து பிறாண்டிக் கொண்டன.

பக்க வாத்தியம் போல் நாய்கள் ஊளையிட்டன. காகித அம்புகள் எறியப்பட்டன. ஒரு மாணவன் தன்னை இசையமைப்பாளனாகப் பாவித்துக் கொண்டு, எதிரிலே நின்று கொண்டதோடு அல்லாமல், கைகளை வேறு படு சீரியஸாக மேலும் கீழுமாக ஏற்றி இறக்கிக் கொண்டிருந்தான்.

இன்னொருவனுக்குப் பிரபுதேவா என்று நினைப்பு. நூற்றியெட்டு விதமாக உடம்பை வளைத்தும், நிமிர்த்தும் அவன் பாட்டுக்கு ஆடிக் கொண்டிருந்தான்.

பூனைகளின் பாய்ச்சல், நாய்களின் ஊளை இசையமைப்பாளரின் அபிநயம், கதாநாயகனின் நடனம்.

பயந்து நடுங்கியவாறே சொர்ணா ஒரு வழியாகப் பாடி முடித்தாள். ச்சீ! இந்த ஆண்கள் கல்லூரிக்கு வரவே கூடாது.

அவள் தீர்மானத்தைத் தகர்த்தெறிய வைத்தது அன்று கிடைத்த முதற் பரிசு.

"முதற் பரிசு மிஸ். சொர்ணா ராஜலிங்கம்." அறிவிப்பாளரின் கம்பீரமான குரலில் முடிவு தெரிவிக்கப்பட்ட போதும் பழையபடியே பூனைகள் பிறாண்டின; நாய்கள் ஊளையிட்டன.

சத்தம் சற்று அடங்கியதும், ஒரு குரல் தனியே ஒலித்தது.

"சொர்ணா! உன் இசை என்னும் இன்ப வெள்ளத்தில் மூழ்குவதற்கு ஓடோடி வந்த என்னை ஏமாற்றி விடாதே சொர்ணா... பாடு சொர்ணா, பாடு!"

காதல் மன்னனாகத் தன்னைக் கருதிக் கொண்ட ஒரு மாணவரின் குரல் அவையோரைக் குலுங்கிக் குலுங்கிச் சிரிக்க வைத்தது.

அதற்குள் இன்னொரு குரல் எம்.ஆர். ராதா மாதிரி மிரட்டியது.

"அடி காந்தா... நீ பாட்டுக்குப் பாடி பிரைஸ் வாங்கிட்டுப் போறியே! இது நியாயமா? என்னைக் கொஞ்சம் பார்க்கக் கூடாதா? கொஞ்சம் கவனிக்கக் கூடாதா?"

குரல் உச்சஸ்தாயிக்கும் கீழ் ஸ்தாயிக்கும் மாறி மாறி சஞ்சரித்தது. பையன்கள் ஓவென்று சிரித்தார்கள்.

சொர்ணாவுக்கு மெல்ல பயம் விலக ஆரம்பித்தது. அதற்குப் பிறகு பத்துப் பதினைந்து போட்டிகளில் பாடிப் பரிசுகள் வாங்கிவிட்டாள்.

இப்போது இந்தக் கலாட்டாக்கள் பழகி விட்டன.

அதோ, நடுவர்கள் வந்து அமர்கிறார்களே...

சொர்ணா பழைய நினைவுகளிலிருந்து மீண்டாள். பக்கத்தில் இருந்த ஒரு பெண் தன் தோழியிடம் மெல்ல முணுமுணுத்தாள்.

"இவ வந்துட்டா இல்லே? நிச்சயம் இவளுக்குத் தாண்டி பர்ஸ்ட் பிரைஸ். நாம என்னதான் கரடியாக் கத்தினாலும் பிரைஸ் கிடைக்காது."

அந்தக் குரலில் குரோதம் தெறித்தது. சொர்ணா வுக்குச் சிரிப்பாக இருந்தது.

கரடியாகக் கத்தினால், பரிசு கிடைக்காது பெண்ணே. குயிலாகக் கீதம் இசைக்க வேண்டும். அப்போதுதான் பரிசு கிடைக்கும்.

குலுக்கலில் தனக்கு வந்த எண் என்னவென்று யோசித்தாள். ஓ, ஏழு! நல்ல வாய்ப்புத்தான்! முதலா வது, இரண்டாவது என்றால் கூட அவையோரின் ஏகோபித்த கைத்தட்டலைப் பெற முடியாது.

ஆறு பேர் ஆறு விதமாகப் பாடிவிட்டுப் போன பிறகு, தன்னம்பிக்கையுடன் மேடையேறி, ஒரு சில நொடிகள் மவுனமாக நின்று, தன்னைச் சரிப்படுத்திக் கொண்டு, பிறகு கவனமாக ஆரம்பித்தால் எல்லோர் உள்ளத்தையும் அள்ளிக்கொண்டு போய் விடலாமே!

சொர்ணா நம்பிக்கையோடு நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

''அம்மா, பர்ஸ்ட் பிரைஸ்...''

கத்திக் கொண்டே உள்ளே நுழைந்தாள்.

''வா சொர்ணா! அத்தை வந்திருக்காங்க, பாரு.''

மாதங்கிப் பட்டினத்திலிருந்து காந்திமதியம்மாள் வந்திருந்தாள்.

''ஹாய், அத்தை! எப்போ வந்தீங்க?''

''காலையிலேதாம்மா. நீ காலேஜுக்குப் போனதுமே வந்துட்டேன். ஆமாம், நல்லாயிருக்கியா? போன தடவை பாத்ததுக்கு இளைச்ச மாதிரி இருக்கியேம்மா.''

''அத்தை! நீங்க கண்ணாடி மாத்தி ரொம்ப நாளாச்சின்னு நெனைக்கிறேன்! நானா இளைச்சிருக்கிறேன்?''

''ஆமாம் பொண்ணே! அது சரி வசந்தி! நீயும் தம்பியும் சொர்ணாவைக் கூட்டிக்கிட்டு ஒரு நடை வந்து போகக் கூடாதா? அம்மன் திருவிழா என்ன விமரிசையா நடக்கும் தெரியுமா? நீங்கதான் வந்ததே கிடையாதே...''

காந்திமதியம்மாள் குறைப்பட்டுக் கொண்டாள்.

இவ்வளவுக்கும் காந்திமதியம்மாள் நெருங்கிய சொந்தம் கூட இல்லை. ராஜலிங்கத்துக்குத் தூரத்து உறவு.

நிலம் சம்பந்தமான வழக்கு ஹைகோர்ட்டில் நடக்கிறது. அதற்காக மாதம் இரண்டு நடை

சென்னைக்கு வருவாள். வரும்போதெல்லாம் இவர்கள் வீட்டில்தான் தங்குவாள்.

''என்ன வசந்தி? என் புள்ளை கூட, ''என்னம்மா, மாமா வீட்டுலே ஒரு தடவை கூடத் திருவிழாவுக்கு வர்றதில்லை?'ன்னு தொளச்சி எடுக்கிறான். வந்தா, போனாத்தானே சொந்தமே...''

''எங்கேங்க? வேலை சரியா இருக்குது.''

''இப்படியே சொல்லிடுங்க. வராதீங்க.''

மனத்தாங்கலுடன் சொன்ன காந்திமதியம்மாளைப் பார்க்க, சொர்ணாவுக்கு என்னமோ போல் இருந்தது.

''இந்த வருஷம் பெரிய லீவுக்கு நாங்க நிச்சயம் உங்க ஊருக்கு வர்றமா இல்லையான்னு பாருங்க. அப்புறம் பேசுங்க அத்தை.''

''ஆகா, அது சரி! இடிதான் இடிக்கும். மழைதான் ஊத்து ஊத்துன்னு ஊத்தும். நீங்க வந்துட்டா எல்லாமே தலைகீழாயிடாதா?''

சொர்ணாவின் கன்னத்தை இழைத்த காந்திமதியம்மாள் குளிக்கக் கிளம்பினாள்.

''ஏன் அத்தை, உங்க ஊர்ல சுத்திப் பார்க்க அப்படி என்னதான் இருக்குது?''

''என்ன சொர்ணா அப்படிக் கேட்டுட்டே? நீ வந்து தான் பாரேன். ஏரியும் கோயிலும் பச்சைப் பசேல்னு வயலுங்களும், ஒரு தடவை பார்த்தீன்னா பிரமிச்சுப் போயிட மாட்டியா! அட, எங்க ஊரு புள்ளை எவனுக்காவது முடியுதுன்னு வெச்சுக்கோ, எங்க ஊருக்கு வாழ வரமாட்டே போலிருக்குதே!''

காந்திமதியம்மாள் பூடகமாகப் பேசுவதைப் புரிந்து கொண்ட வசந்தி புன்னகைத்தாள்.

"யாருக்கு எங்க முடி போட்டிருக்குதோ! அதது விதிப்படிதானுங்களே புருஷன் அமையறது..."

"சொர்ணாக்கு என்ன? அதிர்ஷ்டக்காரி! பொறந்த வீட்டிலும் சரி, புகுந்த வீட்டிலும் சரி கலசம் கட்டி வாழப் போறா பாரு. ஆமாம் வசந்தி! அவளுக்குன்னு நகை, நட்டெல்லாம் செய்து வெச்சிருக்கதானே?"

பேசிக் கொண்டே உள்ளே போனார்கள்.

சொர்ணா சிரித்துக் கொண்டாள்.

அப்பா ஐ.ஏ.எஸ்ஸா, ஐ.பி.எஸ்ஸா என்கிறார். அத்தையானால் கிராமத்துக்கு இழுத்துப் போக நினைக்கிறாள்!

அப்பா யாரை மணமகனாகத் தேர்ந்தெடுப்பார்? கனவுக் குவியலில் முழுகிப் போனாள் சொர்ணா.

வெண்புரவிகள் பூட்டிய மாணிக்கத் தேரில் கம்பீரமாக உட்கார்ந்திருக்கிறான் 'அவன்'. மெல்லிய புன்னகையோடு அவளைப் பார்த்து, இரண்டு கைகளையும் நீட்டினான்; வாவென்று தலையசைத்தான்.

நிமிர்ந்து பார்க்க முடியாமல் நாணம் சொர்ணாவுக்குத் தடை விதித்தது. ஊர்வலம் வந்த வானத்துத் தேவதைகள் அவளை அழைத்து வந்து தேர் அருகில் நிறுத்தினார்கள்.

'அவன்' கை கொடுத்துத் தூக்கித் தன் பக்கம் அமர்த்திக்கொண்டான்.

சொர்ணாவின் செக்கச் சிவந்த கன்னம் அந்தி வானம் போல அழகு ஜாலம் காட்டியது.

'அவன்' அவள் முகத்தைத் தன் பக்கம் இழுத்து, மிருதுவான அந்தக் கன்னத்தில் அதரம் பதித்தான். ஓ! சொர்க்கத்தின் வாசல் திறந்து கொண்டதோ?

கண்கள் கிறங்க, 'அவன்' தோளில் சாய்ந்தாள். பரிவுடன் அவளை அணைத்துக் கொண்டான் 'அவன்'.

ஓ, இது என்ன? புரவி தறிகெட்டு ஓடத் தொடங்குகிறது? சொர்ணா தவிக்கிறாள்; திகைக்கிறாள். பிடரி மயிர் காற்றில் பறக்க, வெறித்தனமான வேகத்தோடு குதிரை காடு மேடெல்லாம் பறக்கத் தொடங்குகிறது.

"சொர்ணா... சொர்ணா..."

அப்பா குரல் எங்கிருந்து கேட்கிறது? சொர்ணா பரிதவிக்கிறாள். காற்றைக் கிழித்துக் கொண்டு குதிரை பறக்கிறது.

# 4

சுறுசுறுப்பான முற்பகல் வேளை. சொர்ணா தன்னை மறந்து தமிழ் மேடத்தின் வகுப்பில் லயித்திருந்தாள்.

"வள்ளுவர் ரொம்பவே பரிதவிக்கிற ஒரு காதலனைக் காட்றாரு. என்ன சொன்னாலும், ஊடல் கொள்றா தலைவி. பாவம், என்ன சொல்லிதான் சமாதானம் பண்ணுவான்?

"இந்தப் பிறவியிலே உன்னைப் பிரிய மாட்டேன் கண்ணே..." அப்படிங்கறான். அதுக்கும் அழறா.

''ஓகோ! அப்படின்னா, அடுத்த பிறவியிலே பிரிஞ்சிடு வேன்,''னு சொல்றீங்களான்னு கேக்கறா.

''உன்னை நான் ரொம்பவே நெனச்சேன்'' அப்படிங்கறான். இப்படிச் சொன்னா, அவ சந்தோஷப் படுவாளேன்ற எண்ணத்துலே. பிலுபிலுன்னு புடிச்சிக் கிறா. ''ஓஹோ! மறந்துட்டதாலேதானே நினைக்க முடிஞ்சுது,''ன்னு மடக்கறா!

தும்முறான் தலைவன். ''நூறாயுசு''ன்னு வாழ்த் திடறா. அப்புறம்தான் தோணுது. ''நினைக்க வேண் டிய நான் பக்கத்திலியே இல்லே இருக்கிறேன்' அப்படின்னா, வேறு யார் உங்களை நினைச்சதாலே தும்மல் வந்தது?''ன்னு வெடுவெடுக்கிறா.

பாவம்! இப்போ அவனுக்குத் திரும்பவும் தும்மல் வருது. இவ சண்டைக்கு வருவாளேன்னு அடக்கிக் கிறான். ''ஓஹோ? ரொம்ப வேண்டப்பட்டவங்க நினைக்கிறாங்க போல இருக்குது. அதுதான் மறைக் கறீங்க,'' அப்படின்னு அதுக்கும் அழறா.

என்னடா இது? எதுக்கெடுத்தாலும் சண்டை போட்றாளே அப்படின்னு அவளையே உத்துப் பாக்க றான். அதுக்கும் தப்பர்த்தம் கண்டு பிடிச்சி, சண்டைக்கு வரா. ''உங்களுக்குத் தெரிஞ்ச பொண் ணுங்கள்லே யார் ஜாடை எனக்கிருக்குதுன்னு பாக்க றீங்க,''ன்னு கேக்கறா.''

—வகுப்பில் இருந்த அனைவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

''என்ன நளினி, சொர்ணாகிட்டே என்ன சொல்றே?''

''இல்லீங்க மேடம், வள்ளுவருக்கு ஒரு காதலியோட சைக்காலஜி நல்லாவே தெரிஞ்சிருக்குது... என்ன அழகா விளக்கியிருக்காரு!''

விஜய் எழுந்து நின்றான்.

''மேடம், அந்தத் தலைவன் நிலைமையை நினைச்சுப் பாருங்க மேடம். அவன் எவ்வளவு பாவம்!''

''மேடம், கல்யாணம் வரையிலயும்தான் அவன் பாவம். அதுக்கப்புறம், அவதான் பாவம். அப்ப, இப்படியெல்லாம் கெஞ்சிக்கிட்டா இருக்கப் போறான்?''

''சரி சரி. சொர்ணா, அவங்களுக்காக நீங்க இப்ப சண்டை போட்டுக்காதீங்க. இலக்கியத்திலே வேணும்னா, சோகம் கூட ஒரு சுகம்தான். அதுக்காக வாழ்க்கையிலும் அதையே அனுபவிக்கணும்னு ஆசைப் பட்டுடாதீங்க.

''மாணவப் பருவத்திலே படிப்புதான் முக்கியம். அதை விட்டுட்டு, காதல்ங்கற தொடுவானத்தை நோக்கியோ, அரசியல்ங்ற அஸ்தமனத்தை நோக்கியோ உங்க பாதங்கள் பயணப்படவே கூடாது. அதுக்காகவா, உங்க பெற்றோர் இங்கே சேத்து விட்டிருக்காங்க?''

துடிப்பான ஒரு மாணவன் எழுந்தான்.

''மேடம், அரசியல்லே ஈடுபடக் கூடாதுன்னு சொல்றீங்களா? இல்லே, அரசியலைப் பத்தித் தெரிஞ்சுக்கவே கூடாதுன்றீங்களா?''

''அரசியலைப் பத்தித் தெரிஞ்சுக்கலாம்; ஈடுபடக் கூடாது. அறிஞர் அண்ணா சொன்ன வார்த்தைகளைத் தான் நான் உங்களுக்கு நினைவூட்ட விரும்பறேன். 'அரசியல்ங்கறது அத்தை மகளைப் போல. மாணவர்கள்

சுற்றிச் சுற்றி வரலாமே தவிர, தொட்டுவிடக் கூடாது...''

கொல்லென்று சிரிப்புக் கிளம்பியது. அதே நேரம் மணியும் அடித்தது.

சாப்பாட்டுக்குக் கிளம்பினார்கள்.

''ஏன் நளினி, நம்ம கலா மேடம் பாடத்தோட கூடவே நல்ல நல்ல அட்வைஸையும் சொல்லாம விட்றதில்லே. கவனிச்சியா?''

நளினியின் பக்கத்தில் நடந்து வந்துகொண்டிருந்த மாதுரி வெடுக்கென்று திரும்பினாள்.

''வீட்லேதான் இதே எழவுன்னா, இங்கேயுமா? எங்கம்மாதான் எப்ப பாத்தாலும், 'ஜாக்கிரதைடி. ஆம்பிளைப் பசங்களோட ரொம்பப் பேச்சு வெச்சுக் காதே. உலகம் மோசமான உலகம். காதல் ஊதல்னு பேரு எடுத்தே, அவ்வளவுதான். மவளே பொலி போட்டுடுவேன்,'னு ஒரு ராமாயணம் படிக்கும். படிச்ச வங்களான நம்ம மேடமுமா அதையே சொல்லி, அறு அறுன்னு அறுப்பாங்க?''

''நல்லா இருக்குடி மாதுரி... படிச்ச மேடம் என்ன சொல்லணும்னு எதிர்பார்க்கறே? 'காதலிம்மா! கண்டபடி ஊர் சுத்தும்மா. படிப்பு அனாவசியம்'னு சொல்வாங்கன்னு எதிர்பார்க்கிறியா?''

''காலம் மாறிக்கிட்டே வருது இல்லே? அந்தக் காலம் மாதிரியேவா கட்டுப்பெட்டியா இருக்கிறது?''

''என்னத்தைடி காலம் மாறிட்டுது? எதுலே மாறிட்டுது? வரதட்சணை இல்லாம கல்யாணம் நடக்குதா? லஞ்சம் கொடுக்காம வேலை கிடைக்குதா?

அட! அன்னிக்கு சீதை ஆரம்பிச்சு வெச்ச அக்கினிப் பிரவேசம் இன்னிக்கு வரையிலும் தொடர்ந்துகிட்டுத் தானே இருக்குது? மாறிட்டதாமில்லே காலம்...''

''சரி சரி... சண்டை வேணாம்.'' விஜய் நடுவில் புகுந்தான். ''பேசாம, காதல் நாடு கடத்தப்பட வேண்டிய ஒண்ணுன்னு தீர்மானம் நிறைவேத்திட லாமா?''

''விஜய், மேடம் ஒண்ணும் அப்படிச் சொல்ல லையே! மாணவப் பருவத்திலே, தேவை இல்லாத ஒண்ணுன்னுதானே சொன்னாங்க? சரி விஜய், இவ் வளவு பேசறியே, காதலுக்கு ஆதரவா, உன் தங்கச்சி லவ் பண்றான்னு வெச்சுக்கோ! நீ சப்போர்ட் பண்ணுவியா...?''

''அது...வந்து...நான்...வந்து...அது...''

வார்த்தைகள் முனை முறிந்த அம்புகளாய் விழுந் தன; வழுக்கின; வளைந்தன. விஜய் தடுமாறி னான்.

''அப்படிப் போடு! இப்ப என்ன சொல்றே? சொர்ணா சரியாத்தான் கேட்டா, ஒரு கேள்வின் னாலும் ஒரு கேள்வி! முத்தான கேள்வி! சொல்லு விஜய்!''

நளினி சீண்டினாள்.

''நம்ம வீட்டு விஷயத்தைப் பத்தி ஏன் பேசணும்?''

விஜய் கோபமாகக் கேட்டான்.

''நல்லாருக்குதே நியாயம்! நம்ம வீட்டு விஷயம் பேசாம, எதிர் வீட்டு விஷயமேவா பேசிட்டுப்

போயிட்றது... நீங்க ஆம்பிளைங்க இதுலே கில்லாடிங் கப்பா. 'மனைவிக்குச் சுதந்திரம் வேணும்'னு சொல் வீங்க. அட! பரவாயில்லையேன்னு நினைச்சா, 'எதிர் வீட்டான் மனைவிக்குச் சுதந்திரம் வேணும்'னு சொல்வீங்க.''

விஜய் கோபமாக வெளியேறினான்.

''எந்த நேரத்திலே காதலர்கள் சண்டையைப் பத்திச் சொன்னாங்களோ புண்ணியவதி! கிளாஸ் மேட்ஸ் சண்டையிலே வந்து முடிஞ்சிருக்குது...''

சலித்துக்கொண்டாள் மாதுரி.

''ஏய் இவளே... இதெல்லாம் ஒரு சண்டையா? மத்தியானம் வந்து நோட்ஸ் குடுன்னு விஜய் கேக்கப் போறான். இப்பப் போனாப் போவட்டுமே. விடு.''

மாதுரி டிபன் பாக்ஸுடன் தன் தோழிகளைத் தேடிச் செல்ல, நளினியும், சொர்ணாவும் வழக்கமான மரத்தடிக்குச் சென்றார்கள்.

''இந்தா நளினி! லைம் ரைஸ் எடுத்துக்கோ.''

''கொஞ்சமா வையி...''

''நீ என்ன கொண்டாந்திருக்கே நளினி?''

''பூரி கிழங்கு...''

''கொண்டா... கொண்டா...''

உற்சாகமாகச் சாப்பிட்டு முடித்தார்கள்.

''மேற்கொண்டு படிப்பியா சொர்ணா?''

''அப்பா இப்பவே கல்யாணப் பேச்சு எடுத்துட் டாரு... அதனாலே மேற்கொண்டு படிக்க விடமாட் டாருன்னு நினைக்கிறேன்...''

''வந்து... எனக்குக்கூட, வீட்டிலே ஓர் இடம் பாத்து முடிச்சிட்டாங்க சொர்ணா...''

''ஏய் பூனைக்குட்டியாட்டம் கமுக்கமா இருந்திட்டியே! சொன்னியா ஒரு வார்த்தை? மாப்பிள்ளை யாரு? என்ன பண்றாரு? எந்த ஊரு?''

நளினி வெட்கத்துடன் விவரங்கள் சொல்ல ஆரம்பித்தாள்.

''சொர்ணாம்மா! பிரின்சிபல் கூப்பிட்றாரும்மா...''

சொர்ணா நிமிர்ந்து பார்த்தாள். ஆறுமுகம் வியர்க்க விறுவிறுக்க நின்று கொண்டிருந்தான்.

அவன் உதடுகள் துடித்தன; கண்கள் கலங்கின.

நளினி பதறியடித்து எழுந்து நின்றாள்.

''என்ன ஆறுமுகம், என்ன விஷயம்?''

சொர்ணா கொஞ்சமும் சட்டைபண்ணாமல் மரத்தடியில் உட்கார்ந்திருந்தாள்.

''இந்தா ஆறுமுகம்... அன்னிக்குக் கதை அன்னியோட போச்சி. இன்னிக்கும் ஏன் திரும்பவும் ஆரம்பிக்கிறே? இது நல்லாவே இல்லை.''

''இல்லே சொர்ணாம்மா! நிஜமாத்தான் சொல்றேன்.'' அவன் சொன்ன தகவலைக் கேட்டு நளினி திடுக்கிட்டாள்.

# 5

சொர்ணா தன் தோள் மீது சாய்ந்து சாய்ந்து விழுகிற அம்மாளை எரிச்சலுடன் பார்த்தாள்.

இப்படியா ஒரு மனுஷி தூங்கி விழுவாள்? மெட்ராஸில் கிளம்பியதிலிருந்து, இந்தம்மாள் மொத்தமே ஒரு பத்து நிமிஷம்தான் விழித்திருந்ததாக ஞாபகம்...

கைக்கடிகாரத்தைப் பார்த்தாள் சொர்ணா. மாலை நாலேகால். ம்! இன்னும் மூன்று மணி நேரத்தில் மாதங்கிப் பட்டினத்துக்குப் போய்ச் சேர்ந்து விடலாம். சின்ன சூட்கேஸ் கால்விரலில் இடித்தது.

அம்மா படித்துப் படித்துச் சொல்லியிருந்தாள்.

''ஜாக்கிரதை சொர்ணா! இதுதான் நீ முதல் முதலா தனியா ஓர் ஊருக்குப் போறது. கால்கிட்டயே சூட்கேஸ் வெச்சுக்கோ. யாரும் எதுவும் சாப்பிடக் குடுத்தா, வாங்கிக்காதேம்மா. அட்ரஸ்லாம் எதுவும் யார்கிட்டயும் சொல்லாதே!''

''அய்யய்யய்யோ! அம்மா, எனக்குத் தெரியாதா? நான் என்னம்மா சின்னக் குழந்தையா?''

''சின்னக் குழந்தையில்லாமே என்ன?''

வசந்தியின் கண்கள் ஈரத்தில் பளபளத்தன. ''கார்லே முன் சீட்டுலே உட்கார்ந்துகிட்டு, அரட்டை அடிச்சிக்கிட்டு வருவே! அப்பாவோட சேந்துக்கிட்டு, வழியிலே விக்கிற பழம் பண்டம்லாம் வாங்கி ரொப்பிக்குவே! அதைத் தவிர வேற என்ன தெரியும்?''

சொர்ணாவைச் சேர்த்தணைத்துக் கொண்டு, கதறத் தொடங்கினாள்.

''இப்படி ஒரு சோதனை நம்ம குடும்பத்துக்கு வரும்னு நான் கனவுலே கூட நினைச்சதில்லையே! நம்ம கதி இப்படி ஆயிடுச்சே!''

''அம்மா, இங்கே பாரும்மா! இப்ப என்ன அப்படிப் பட்ட சோதனை வந்துட்டுது? சோர்ந்துடக் கூடாது. போராடணும். இப்படி நீ அழுறதைப் பாத்தா அப்பா வோட தைரியமே போயிடுமே...''

''கைக்குழந்தை மாதிரியில்லே வீல் சேர்லே உட்கார வெச்சிருக்குது? அவரும்தான் சின்ன வயசிலேருந்து கார் ஓட்றாராம். ஒருநாளிலே கூட, ஓர் ஆக்சிடெண்ட் ஆனதில்லையே...''

''அம்மா, எதிரிலே வர்ற லாரி டிரைவர் குடி போதையிலே வந்தா, அப்பா என்னம்மா செய்ய முடியும்?''

''ஏன் சொர்ணா, உங்கப்பாவுக்கு இன்னும் ஒரு மாசத்துலே நல்லாயிடும்னு டாக்டருங்க சொல்றாங் களே, நிச்சயம் நல்லாயிடும்தானே?''

''நிச்சயமா. அப்பா டாக் டாக்குன்னு, ஜம்முன்னு ஆஸ்பிடல்லேருந்து வந்து, 'வசந்த், வசந்த்'துன்னு உன்னைக் கூப்பிடப் போறாரு பாரு.''

வசந்தியின் கலங்கிய கண்கள் நம்பிக்கையுடன் மகளை ஏறிட்டன.

அம்மாவின் மன ஆறுதலுக்குச் சொர்ணா சொல்லி விட்டாளே தவிர, அப்பாவால் ஒரே மாதத்தில் பழைய நிலையை அடைய முடியுமா என்கிற சந்தேகம் மனசுக் குள் இருக்கத்தான் இருந்தது.

அம்மா பேசிக் கொண்டிருந்தவள், திரும்பவும் அழத் தொடங்கினாள்.

''என் ராசா ஒருத்தருக்கு ஒரு கெடுதலும் பண்ண தில்லையே! அவருக்கா இப்படி ஆகணும்?''

வசந்தி உதடு துடிக்க, முகம் கோண அழுவது சொர்ணாவுக்குத் தாங்க முடியாத துன்பத்தை உண் டாக்கியது.

''அவர் முகம் பாக்கவே, எனக்கு என்னவோ போல இருக்குதே! சிங்கமாட்டம் வளைய வந்த மனுஷன் இன்னிக்கு இப்படி எழுந்திருக்க முடியாம, நடக்க முடியாம படுக்கையோட படுக்கையாப் போராடிக்கிட்டு இருக்காரே! என் நெஞ்சிலே நெருப்பள்ளிப் போட்ட மாதிரி இருக்குதே!''

வசந்தி அரற்றினாள்.

சொர்ணா அவள் தோளைப் பிடித்து எழுப்பி நிற்க வைத்தாள்.

''அம்மா, இந்த அழுகையை நீ இன்னியோட நிறுத்து. இப்படி நினைச்சுப் பாரு. அப்பாவுக்கு ஆக்சி டெண்டுலே பெரிசா ஏதாவது ஆயிட்டிருந்தா?''

''ஹாங்...'' அதிர்ச்சியோடு நிமிர்ந்தாள் வசந்தி.

''ஆமாம்மா. நல்ல காலமா அப்படி எதுவும் ஆகலை இல்லியா? அதை நினைச்சுத்தான் மனசு சந்தோஷப் பட்டுக்கணும். ரோஜா நடுவிலே முள்ளை வெச்சானே படுபாவின்னு ஆண்டவனைத் திட்டறதைவிட, முள் ளுக்கு நடுவிலேயும் பூவை வெச்சிருக்கிறானேன்னு ஆண்டவனைப் பாராட்டு. அதுதான் நல்லது.''

''நீயாடி இதெல்லாம் பேசறே?''

''ஆமாம்மா. நஷ்டத்தைப் பத்தியே புலம்பிக்கிட்டிருந்தா, வர்ற லாபம்கூட உன் கண்ணுக்குத் தெரியாது அதோட உன் புலம்பல் எல்லார் தைரியத்தையும் மழுங்கடிச்சிடும்.''

வசந்தி யோசித்தாள்.

அடடே! உண்மைதான். இது எப்படி எனக்குப் புரியாமல் போய் விட்டது? என் முகத்தின் சோர்வு அவரைப் பாதித்தால், எப்படிச் சீக்கிரம் அவர் உடல் நிலை முன்னேறும்?

இப்போது மலர்கிற புன்னகையை இனி எப்போதும் உதடுகளில் தக்க வைத்துக் கொள்வது என்று தீர்மானித்தாள் வசந்தி. சொர்ணாவின் அதிர்ச்சி வைத்தியம் நொடிப்பொழுதில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்திவிட்டது.

என்னவாம் பின்னே? தலைக்கு வந்தது தலைப் பாகையோடு போயிற்று என்று நிம்மதி அடையாமல்... ஆமாம், இதெல்லாம் இந்தப் பெண்ணுக்கு எப்படித் தெரிந்தது?

இவள் மட்டுமா? இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கே நன்றாகச் சிந்திக்கத் தெரிகிறது. இவர்கள் பிரச்சினைகளைப் பார்க்கிற கோணமே தனிதான்.

வசந்தி வாய்விட்டே பாராட்டினாள்.

பஸ் சடேரென்று பிரேக் அடித்து நின்றது. கண் மூடித்தனமான வேகத்தில் வந்த காரை லாகவமாகத் தவிர்த்த நிம்மதியில், டிரைவர் பஸ்ஸைத் திரும்பவும் கிளப்பினார்.

சொர்ணாவின் நினைவுகள், வீட்டையே சுற்றிச் சுற்றி வந்தன. இந்நேரம் அம்மா மருத்துவமனைககு

உணவு எடுத்துப் போயிருப்பாள். அப்பா சொர்ணா ஏன் வரவில்லை என்று கேட்டால்...

சொர்ணா கனத்த இதயத்தோடு இருக்கையில் சாய்ந்து கொண்டாள்.

விபத்து நடந்ததிலிருந்து இந்தப் பதினைந்து இருபது நாட்களாக, அப்பப்பா... என்ன ஓர் அலைச்சல்! கல்லூரியிலிருந்து ஓடிவந்து அரக்கப் பரக்க நின்றாளே! அப்பாவை உடம்பெங்கும் கட்டோடு மருத்துவனையில் பார்த்தகணத்தில், திகைப்பும் பிரமையுமாகத் தவித்துப் போய் நின்று விட்டாள். ஒன்றுமே புரியவில்லை.

''அப்பாவின் உடம்புக்கு ஒன்றுமில்லை; வேறு தனியார் மருத்துவமனைக்கு மாற்றியாகிவிட்டது. இனி உயிருக்கு ஆபத்தில்லை.'' என்கிற செய்திகள் தெரிய வருகிறவரைக்கும் உலகமே இருட்டாய்த்தான் இருந்தது. நிற்கிறோமா, உட்கார்ந்திருக்கிறோமா என்பது கூடப் புரியவில்லை.

மருத்துவர்கள் நம்பிக்கை தெரிவித்தார்களோ இல்லையோ, சொர்ணா தன் மனவுறுதியை மீட்டுக் கொண்டாள். அப்பா முன்னால் அழுது புலம்பாமல், தைரியமாக நின்றாள்.

டர்ர்... ட்டடக்... பஸ் நின்றது.

''சார் பத்து நிமிஷம் பஸ் நிற்கும். காபி, டிபன் சாப்பிடறவங்க இறங்கிப் போயிச் சாப்பிட்டுட்டு வந்துடுங்க.''

கண்டக்டர் இறங்கி நடக்க ஆரம்பித்தார் பயணிகள் இறங்கத் தொடங்கினார்கள். பக்கத்து இருக்கைப் பெண்மணி கண்ணைத் திறந்து பார்த்தாள்.

''காப்பி குடிக்கப் போகலியாம்மா?''

புன்முறுவலுடன் இல்லை என்கிற பாவனையில் தலையை ஆட்டினாள் சொர்ணா.

"தலையை ரொம்ப வலிக்குதும்மா! ரயிலுன்னா நிம்மதியாத் தூங்கிட்டே வரலாம். இது பஸ்ஸு பாரு. பொட்டுத் தூக்கம் வரமாட்டேன்னுது. ஒரு வாய்க் காப்பித் தண்ணியைக் குடிச்சிட்டு, வெத்திலை பாக்கு வாங்கிக்கிட்டு ஓடியாந்திடறேன். கொஞ்சம் பையைப் பாத்துக்கோ தாயி..."

சளசளவென்று பேசியபடி, அவள் கீழே இறங்கினாள். சொர்ணாவுக்குத் தன்னிலை மறந்து, ஒரு சிரிப்பு உதயமாயிற்று.

பொட்டுத் தூக்கம் இல்லையாமே! என் தோள் மேலேயே சாய்ந்து சாய்ந்து விழுந்து, சாமியாடிவிட்டு, கதை விடுவதைப் பாரேன்!

ஜம்மென்று காப்பி குடித்துவிட்டு, வெற்றிலை பாக்கும் போட்டுக் கொண்டு, பஸ்ஸில் ஏறினால் அப்புறம் மட்டும் என்ன செய்யப் போகிறாளாம்? விட்ட தூக்கத்தைத் தொடரப் போகிறாள்.

சன்னல் வழியாய் வெளியே வேடிக்கை பார்க்க ஆரம்பித்தாள் சொர்ணா. ஒரு பஸ் வந்து பக்கத்தில் நின்றது. எல்லோரும் இறங்கிய பிறகு, ஒரு நடுத்தர வயதுக்காரரர் ஊன்று கோல்களின் உதவியுடன் 'டொக் டொக்' என்கிற சத்தத்தோடு, பஸ்ஸை விட்டு இறங்கினார்.

சொர்ணா கவலையோடு கவனித்தாள். அவரின் மனைவியும், மகளும் அவர் சுலபமாக இறங்க ஒத்தாசை செய்தார்கள். ஏதோ சொல்லிச் சிரித்தபடியே, மூன்று பேரும் நகர்ந்தார்கள்.

இந்த அளவுக்கு அப்பாவுக்குத் தேறிவிட்டாலும் போதுமே. எத்தனை மாதங்களுக்கு வீல் சேரே கதி என்று உட்கார்ந்திருப்பார்? அதிலும் அப்பாவைப் போன்ற சுறுசுறுப்புத் தேனீயால் உட்கார முடியுமா?

சன்னல் வழியாய், சில்லென்று காற்று வீசியது புத்துணர்ச்சியாக இருந்தது. வானைப் பார்த்தாள் சொர்ணா. பஞ்சுப் பொதிகள் பறப்பதைப் போல, மேகங்கள் பயணம் செய்து கொண்டிருந்தன.

மனசுக்குள் நம்பிக்கை நட்சத்திரம் ஒளிர்ந்தது. நிச்சயம் அப்பாவுக்கு நன்றாகிவிடும். கோட்டும், டையு மாக மிடுக்குடன் நடக்கிற தோற்றமே கண்முன் நின்றது.

பக்கத்து இருக்கைப் பெண்மணி வந்து தொப் பென்று உட்கார்ந்தாள். ஒவ்வொருவராகப் பயணிகள் ஏறத் தொடங்கினார்கள். கடைசி இழுப்பு இழுத்து விட்டுச் சிகரெட்டைத் தூர வீசிவிட்டு டிரைவரும் ஏறிக் கொண்டார். பஸ் புறப்பட்டது.

மாதங்கிப் பட்டினத்துக்குப் போய்ச் சேரும்போது ஏழே கால், ஏழரை மணி ஆகிவிடுமோ? ராத்திரியில் காந்திமதியம்மாள் வீட்டைக் கண்டுபிடிப்பது சிரமமாக இருக்குமோ?

ம்கூம். முகவரிதான் இருக்கிறதே! அப்புறம் என்ன?

பறவைகள் கூட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தன. இருக்கையில் சாய்ந்து வேடிக்கை பார்க்க ஆரம்பித்தாள் சொர்ணா.

காந்திமதியம்மாள் ஆச்சரியப்படப் போகிறார்கள் போய் எதிரில் நின்றதுமே என்று நினைத்த சொர்ணா வுக்குத் தனக்கு அதிர்ச்சி காத்திருப்பது கொஞ்சம்கூடத் தெரியவில்லை.

# 6

பஸ் வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. வானைப் பார்த்தாள். கவியத் தொடங்கியிருந்த மெல்லிய இருட்டுக்கூட ஓர் அழகாக இருந்தது. வானில் சூரியன் மறைந்து கொண்டிருக்கும் இடம் பொன் மஞ்சள் நிற மாய், வர்ண ஜாலம் காட்டியது.

திட்டு திட்டாய்க் கரிய மேகங்கள் உருகி ஓடுகிற பொன்னிறக் குழம்பில் நீந்திக் கொண்டிருந்தன.

இதுபோன்ற காட்சிகளைக் கண்டு களிக்கவென்றே அப்பாவும், தானும் புல்தரையில், அலுமினிய நாற்காலி போட்டு அமர்ந்திருந்தது நினைவுக்கு வந்தது.

பாவம் அம்மா. எத்தனை வகையான செலவுகள்! சமாளிப்பதற்குள் விழி பிதுங்கிப் போகிறது. எந்த டெஸ்ட் என்றாலும் இரண்டாயிரம், மூவாயிரம் அல்லவா கட்டணம்?

இந்தப் பதினைந்து இருபது நாட்களிலேயே வங்கி யில் இருந்த தொகை சுமாராக நாற்பத்தி இரண்டா யிரம் கபாலச் செலவாகி விட்டது. அப்போதுதான் வசந்திக்கு இந்த யோசனை தோன்றியது.

மாதங்கிப் பட்டினம் காந்திமதியம்மாளிடம் ஒரு முப்பதாயிரம் கடன் வாங்கிக் கொள்வது... சொர்ணா அப்பாவை வீட்டுக்கு அழைத்து வந்த பிறகு, நிதான மாக எந்த ஃபிக்சட் டெபாசிட்டையாவது எடுத்துக் கொடுக்கச் சொல்லி, காந்திமதியம்மாளுக்குத் திருப்பித் தந்து விடுவது...

இல்லாவிட்டால், தங்கள் பங்குக்கு எவ்வளவு லாபம் வரும் இந்த ஆண்டுக்கு? என்று பார்ட்னரைக் கேட்டுக் கொண்டு, அந்தத் தொகை கைக்கு வந்தவுடனேயே காந்திமதியம்மாளுக்குப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுவது.

மருத்துவமனையில் படுத்துக் கிடக்கும்போதா, "எங்கே எவ்வளவு தொகைக்குப் ஃபிக்சட் டெபாசிட் போட்டு வைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்க முடியும்?

அதனால்தான், "போய்விட்டு வருகிறாயா?" என்று அம்மா கேட்டதும், சொர்ணா உடனே ஒப்புக் கொண்டாள்.

முகவரியைத் தேடிக் கண்டுபிடித்து, காந்தியம்மாள் வீட்டுக்குள் சொர்ணா நுழைந்தபோது, இரவு மணி எட்டு.

"ஆன்ட்டி, வணக்கம். வணக்கம்! வரச் சொன்னீங்க. வந்துட்டேன் பாத்தீங்களா?" என்று உற்சாகத் துள்ளலுடன் காந்திமதியம்மாள் முன்னால் போய் நின்றாள்.

காந்திமதியம்மாள் கோல்டு பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடியைச் சரிசெய்தபடி, சாதாரணமாகப் பார்த்தாள்.

"என்ன ஆன்ட்டி. என்னைத் திடீர்னு பாத்ததும் திகைச்சுப் போயிட்டீங்களா?"

சொர்ணா சூட்கேஸைக் கீழே வைத்துவிட்டு, காந்திமதியம்மாள் எதிரில் இருந்த சோபாவில் உட்கார்ந்து கொண்டாள்.

"ஆமாம் சொர்ணா? எங்கே நீ இந்தப் பக்கம்?"

"உங்களைப் பார்க்கச் சொல்லி அனுப்பினாங்க அம்மா. அதோடு, ஒரு வருத்தமான விஷயம் அத்தை."

''என்ன? உங்கப்பாவுக்கு ஆக்சிடெண்ட் ஆயிட்டுதுங் கறதுதானே?''

அதிர்ந்து போனாள் சொர்ணா. தான் சொன்ன துமே, கட்டிப் பிடித்துக் கொண்டு கதறுவாள் என்று நினைத்திருந்த சொர்ணாவுக்குக் காந்திமதியம்மாளின் கேள்வி உண்மையிலேயே எதிர்பார்க்காத ஒன்றாக பெரும் அதிர்ச்சியைத் தந்தது.

அதைவிடவே பெரிய அதிர்ச்சியைத் தர ஆரம்பித் தாள் காந்திமதியம்மாள்.

''நான் போன வாரம் மெட்ராஸ் வந்தப்போ, வக்கீல் வீட்டுக்குப் போற வழியிலே, என் பெரியம்மா புள்ளை கார்லே சொல்லிக்கிட்டு வந்தான். ஆமாம் சொர்ணா! தி.நகர்லே அவன் வீட்டுலேதான் இந்தத் தடவை தங்கினேன். உடனே உங்கப்பாவை வந்து பார்க் கணும்னு நினைச்சேன். ஏகப்பட்ட வேலைங்க... வரவே முடியலை. ஆமாம், இப்போ பரவாயில்லையா?''

கண்கள் கலங்க, அவளையே பார்த்தபடி உட்கார்ந் திருந்தாள் சொர்ணா.

அடாடா! இவ்வளவு சுயநலமா! நன்றாக இருக்கிற வரையிலே வந்து தங்கிவிட்டு, இப்போது ஓர் அவஸ்தை யில் தவித்துக் கொண்டிருக்கிறார்கள் என்கிறபோது எவ்வளவு சாமர்த்தியமாய், தங்குவதற்கு வேறு இடம் பார்த்துவிட்டாள்!

இதே பெரியப்பா பிள்ளை இத்தனை நாட்களாக எங்கே போயிருந்தானாம்?

சரி. வந்து ஒரு முறை பார்க்க வேண்டும் என்று கூடவா மனதில் தோன்றவில்லை? அது என்ன அப்படி? ஒரு மனசு! 'என் தம்பி, என் தம்பி,' என்று சொன்ன

வாய், யாரோ ஒரு புது ஆளைச் சொல்வது போல, 'உங்கப்பா' என்று சொல்லி, உதடு சுழிக்கிறதே!

"ஆமாம் சொர்ணா, இந்த ராத்திரியிலே வந்து இருக்கறியே, என்ன பொண்ணும்மா நீ? உங்கம்மாவைச் சொல்லணும். இப்படியா தன்னந்தனியாவா, ஒரு பொண்ணை அனுப்பி வைப்பா? காலமே கெட்டுப் போயிருக்கில்லே?"

"ஆமாம், ஆமாம்! காலம் ரொம்பத்தான் கெட்டுப் போயிருக்குது. ஆனா அத்தை, அதெல்லாம் வீட்டை விட்டு வெளியே வந்தாத்தானே தெரியுது?"

"ஏன் சொர்ணா, உங்கப்பாவாலே இனிமே நடக்க முடியாதாமே? சக்கர நாற்காலிதான் காலத்துக்கும் கதியா? வசந்தி பாவம், இனிமே லேடீஸ் கிளப்பு, அங்கே இங்கே எல்லாம் பட்டுப் புடவையும், வைரக் கம்மலுமாப் போய் நிக்கமுடியாது. பாவம்தான்!"

சொர்ணா மூண்டு வந்த சினத் தீயைக் கஷ்டப் பட்டு அடக்கிக் கொண்டாள். செயற்கையான புன் முறுவலுடன் வேண்டுமென்றே சொன்னாள்: "அதுக்கும் இதுக்கும் என்ன அத்தை? நேத்துக்கூட அம்மா ஒரு ஃபங்ஷன்லே கலந்துக்கிட்டாங்களே!"

"ஹாங், ரொம்பவே தைரியம்தாண்டி! ஒங்கப்பா ஒண்ணும் சொல்லலையா?"

"அய்யோ! நீங்க ஒண்ணு, அப்பாதான் வற்புறுத்தி அனுப்பி வெச்சதே!"

"அது சரி, ரெண்டு பேரும் அந்த நாள்லேருந்தே ஜோடி போட்டுக்கிட்டு ஓடிடுவாங்களே, அந்தப் பழக்கம் நிக்குமா என்ன? எங்க வீட்டுக்காரருக்கு இந்த மாதிரி

யெல்லாம் பொம்பளைங்க வெளியிலே அலையறதே பிடிக்காது. உங்க குடும்பமே அலாதி.''

அடிமைகளாக அடக்கப்படுகிற பெண்களுக்கு, சர்வ சுதந்திரத்துடன் உலா வருகிற பெண்களைப் பார்த் தால், இப்படி பொறாமைக் கனல் கொழுந்து விட்டெரிவது சகஜம் தானே?

அலாதியான குடும்பத்தில் ஏன் இந்தம்மாள் இத்தனை வருஷங்களாக வந்து தங்கினார்களாம்?

அவர்கள் வந்து விட்டால், என்னென்ன வசதிகள் செய்து தரப்படும் என்பது சொர்ணாவுக்கு நினைவுக்கு வந்தது.

எந்த வேளையில் வந்து இறங்கினாலும், குளிக்கச் சுடுநீர். அதற்கு முன்னால் மணக்க மணக்க ஒரு டம்ளர் காப்பி நீட்டப்படும். தனி அறை உடனே ஒதுக்கப்படும். அவளுக்குப் பிடித்த அயிட்டங்கள்தான் சமையலிலும். காரில் உரிமையாய்ப் போய் இறங்கிக் கொள்வாள்.

சொர்ணாவுக்குத் தான் வந்ததிலிருந்து இதுவரை 'தண்ணி குடிக்கறியாம்மா?' என்று கூடக் காந்திமதி யம்மாள் கேட்கவில்லை என்பது திடீரென்று உறைத் தது. அவமானமாகவும் இருந்தது.

மணியைப் பார்த்தாள். எட்டரை மணி. சென்னை திரும்ப, பஸ் கிடைக்குமா? கிளம்பி விடலாமா?

உள்ளேயிருந்து சமையற்காரர் எட்டிப் பார்த்தார்.

''அம்மா, சாப்பிட இலை போடலாங்களா?''

''இருக்கட்டும். தம்பி வந்துடட்டும்.''

''வேற ஏதாவது பண்ணணுங்களா?''

விருந்தாளி வந்திருக்கிறார் என்பதால் கேட்கிறார் என்று சொர்ணாவுக்குப் புரிந்தது.

காந்தியம்மாள் அவரை எரித்து விடுவதைப் போல் பார்த்தாள்.

''எல்லாம் பண்ணினதே போதும். கொஞ்சம் வத்தல் வறுத்துடுங்க.''

சமையற்காரர் தலையை உள்ளே இழுத்துக் கொண்டார். சொர்ணாவுக்கு மனிதர்களின் இந்தப் பச்சோந்தி குணம் சம்மட்டி அடியாய் ஓர் அதிர்ச்சியைக் கொடுத்தது.

சிட்டுக்குருவியாய்ச் சிறகடித்துப் பறந்தவளுக்கு வேடிக்கை, விளையாட்டுத் தெரிந்திருந்ததே தவிர, கபடம், வஞ்சகம், அலட்சியம் கொஞ்சம்கூட அறிமுக மாகி இருக்கவில்லை.

'ஆமாம், என்ன சொர்ணா திடீர்னு வந்திருக் கிறே?' என்று இவள் கேட்க வேண்டாமா? என்ன விஷயத்துக்கு வந்திருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆர்வம் கூடவா இவளிடம் இல்லை?

சொர்ணா பணம் கேட்கக்கூடாது என்று முடிவு செய்து கொண்டாள்.

''சரி அத்தை, நான் வர்றேன்.''

கடன் கேட்டுத்தான் வந்திருக்கிறாள் என்று ஊகித் திருந்த காந்திமதியம்மாளுக்கு, திடீரென்று சொர்ணா கிளம்பியது அதிர்ச்சியைத் தந்தது.

''என்ன நீ கிளம்பறே?''

''பக்கத்து ஊருக்கு, என் தோழி வீட்டுக்கு வந்தேன். அப்படியே இங்கே வந்து உங்களையும் பார்த்துட்டுப்

போலாமேன்னு ஒரு ஆசை. இப்ப உங்களைப் பாத்துட் டேனே நல்லா! என் ஆசை தீர்ந்துட்டுது. வர்றேன்.''

காந்திமதியம்மாள் வேஷம் மாறினாள். ''அய்யய்யோ... வீட்டுக்கு வந்த புள்ளை சாப்பிடாமே போனா எப்படி? இரும்மா!''

''இல்லீங்க. நான் சாப்பிட்டாச்சி! கிளம்பறேன்.''

சொர்ணா கிடுகிடுவென்று பேருந்து நிலையத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தாள். சென்னைக்குப் போக பஸ் இருக்கிறதா என்று 'விசாரணை'யில் கேட்டவ ளுக்கு, ஒரு மணி நேரத்துக்குப் பின் திருவள்ளுவர் பஸ் வரும் என்ற தகவல் பெரும் ஆறுதலாயிருந்தது.

சிமெண்ட் பெஞ்ச் ஒன்று காலியாக இருக்கவே போய் அமர்ந்தாள். பேருந்து நிலையத்தில் கூட்டம் குறைவாகத்தான் இருந்தது.

சொர்ணாவுக்கு இப்போதுதான் படபடப்புக் கொஞ்சம் குறைந்தது போல் இருந்தது. தலைவலி எட்டிப் பார்த்தது. ம்... மத்தியானம் வீட்டில் சாப் பிட்டுக் கிளம்பியது தான்!

காந்திமதியம்மாள் எதற்காக இப்படி அலட்சியப் படுத்த வேண்டும்? பழசெல்லாம் இப்படியா மறந்து போகும்?

இந்தக் குழப்பத்தில் மனம் நொந்து, நூலாகிக் கொண்டிருந்ததால், அருகில் ஒரு முரடன் வந்து, நிற்பதையும், அவளையே வெறிப்பதையும் கவனிக்கவே இல்லை.

''இந்தா, எழுந்திரு! வா முதல்லே வீட்டுக்கு! இப்படியா நீ கோச்சிக்கிட்டு வந்துட்றது, தப்பும்மா. மாமா பேச்சைக் கேளு!''

அவள் கையைப் பற்றி இழுத்தான் அவன். சாராய நாற்றம் சகிக்க முடியவில்லை. சொர்ணா திடுக்கிட்டாள்.

"இவன் யாருன்னே தெரியாது. இந்த அக்கிரமத்தைக் கேளுங்க சார். சார், நிஜம்மா இவன் யாருன்னு தெரியாது."

கத்தினாள் சொர்ணா. வேடிக்கை பார்க்கக் கூட்டம் கூடியதே தவிர, விலக்கி விடவோ, விசாரிக்கவோ ஒருவரும் முன்வரவில்லை.

"சரிதான் வாடி. மாமன் யாருன்னு தெரியுமில்லே? பட்டாக்கத்தி எடுத்தேன், சீவாமே விட மாட்டேன்," என்று மறைமுகமாகக் கூட்டத்தைப் பயமுறுத்தியவாறே, அவளை மேலும் வலுவாக இழுத்துக் கொண்டு நகர, சொர்ணா திகைத்தாள்; தவித்தாள்.

# 7

சொர்ணா திகைத்துப் போனாள். இத்தனை பேர் வேடிக்கை பார்க்கிறார்களே, ஒருவருக்குக்கூடவா தடுக்க வேண்டும் என்கிற எண்ணமோ, கோபமோ வராது?

மனிதர்கள் ஏன் இப்படி மந்தை ஆடுகள் ஆனார்கள்? பொதுமக்களின் இந்தக் கோழைத்தனத்தை, யாருக்கு எது நடந்தால் நமக்கென்ன என்கிற பொறுப்பின்மையை நன்றாகவே தெரிந்து வைத்திருந்த அந்த முரடன் சிரித்துக்கொண்டே அவளைத் தரதரவென்று இழுத்துச் சென்றான்.

"வா கண்ணு! நீ என்னதான் கூப்பாடு போட்டா லும் அவங்க யாரும் தலையிடமாட்டாங்க. அப்படித் தலையிட்டா, அப்புறம் தலையே இருக்காதுன்னு அவங்களுக்குத் தெரியும்!"

"இந்த ஆள் யார்னே எனக்குத் தெரியாதுங்க... இவனை நான் பார்த்ததே இல்லை. இவன் சொல்றதெல் லாம் பொய். கேளுங்க சார், என்னன்னு!"

சொர்ணா கண்ணீர் மல்க மன்றாடினாள். வெள்ளையும் சள்ளையுமாக இருந்த அந்த 'சார்கள்' எல்லாம் உடம்பைப் பொறுத்தமட்டில் திடகாத்திர மாக, பார்த்தால் பத்து ஆட்களைத் தூக்கிப் பந்தாடு கிற அளவுக்கு இருந்தார்கள்.

ஆனாலும் என்ன? மனசைப் பொறுத்த அளவில் வெறும் சுண்டெலிகளாகத்தானே பயந்து, பயந்து நின்றார்கள்!

சொர்ணா கையை விடுவித்துக்கொள்ள, தன்னால் முடிந்த மட்டிலும் போராடினாள். ம்கூம்... மேலும் பிடி இறுகியதுதான் மிச்சம்.

சொர்ணாவின் பரிதவிப்பு உள்ளத்தைத் தொட்ட தால், வீறு கொண்ட ஒரு கிராமத்துக் கிழவர் கத்தி னார். அவரின் தைரியம் முரடனைச் சற்றே அசர வைத்தது.

"ஏண்டா, நீ என்ன பெரிய சண்டியனா? அந்தப் பொண்ணு அவ்வளவு தூரம் சொல்லுது. நீ என்னமோ இழுத்துக்கிட்டுப் போயிகிட்டே இருக்கறே! கூப்புடுங் கடா போலீசை! அவனுங்களே விசாரிக்கட்டும்..."

வெள்ளைச் சட்டைக்குள் அழுக்கு இதயம் இருப் பதும், அழுக்குச் சட்டைக்குள் வெள்ளை இதயம்

இருப்பதும் சொர்ணாவுக்குக் கண் முன்னே நிதர்சன மாயிற்று.

"பெரியவரே! இது என் கொழுந்தியா. ரெண் டெழுத்துப் படிச்சிட்ட திமிர்லே அப்பன், ஆத்தாவை எடுத்தெறிஞ்சு பேசிட்டு, வீட்டை விட்டு ஓடியாந்துட் டுது. அதுதான் இழுத்துக்கிட்டுப் போறேன். கூப்புடு போலீசை! அவங்ககிட்டயே சொல்றேன்."

போலீஸ்காரர்களுக்கு மக்களைப் பார்த்துக் கொள் வது ஒன்று மட்டுமா ட்யூட்டி? இன்னும் எத்தனை, எத்தனை இருக்கின்றன!

ஒரு போலீஸ்காரரின் தலையையும் சுற்றுவட்டாரத் தில் பார்க்க முடியவில்லை.

திடீரென்று முரடன் கத்தினான். முதலில் இருந்தே சற்றுத் தொலைவிலேயே நின்று கொண்டிருந்த தன் கூட்டாளி ஒருவனை அப்போதுதான் பார்த்த மாதிரி, கூப்பிட்டான்.

"டேய் மருது... நல்லவேளை, நீ வந்தே. இந்தப் பொண்ணு யாரு? நீயே சொல்லு!"

"ஏன், உன் கொழுந்தியா. என்ன இப்போ அதுக்கு? ஆமாம்... என்ன கலாட்டா இங்கே?"

அவன் தோரணையாக விசாரித்தான். கிழவர் தயங்கினார். கேலியாக அவரைப் பார்த்துச் சிரித்த முரடன், "என்னங்கறே இப்போ? ம்ம்!" என்றபடி, சொர்ணாவைப் பிடித்து இழுத்தபடி நகரத் தொடங்கி னான்.

அயோக்கியர்களின் துணிச்சலும், அறிவாளிகளின் தயக்கமும் இடம் மாறினால், இந்தியாவுக்கே நல்ல காலம் பிறந்துவிடுமே! அதுவரை எல்லாத் துறைகளிலும்

இப்படிப்பட்ட அக்கிரமங்கள் நடந்து கொண்டுதான் இருக்கும்!

"ஏய் சுந்தரி! பஸ் வந்து ரொம்ப நேரம் ஆச்சா? என்ன ஆச்சு? யார் இவன்?"

ஒரு வாலிபன் குறுக்கே புகுந்தான். நெடுநெடு வென்று உயரம்; மாநிறம்தான். நல்ல களையான முகம். கண்கள் பளிச்சென்று பளபளத்தன. அடர்த்தி யான சுஜாதா டைப் மீசை வைத்திருந்தான்.

சொர்ணா திகைத்துப் போனாள். இவன் யார்?

"பாரு சுந்தரி! பெரிய போலீஸ் இன்ஸ்பெக்டர்னு பெத்த பேரு... ஜீப்பு நடுவழியிலே நின்னுபோச்சு. மாமா இதோ வந்துக்கிட்டே இருக்கிறாரு. போலீஸ் ஜீப்பு என்ன இந்த லட்சணத்திலயா இருக்கும்? ச்சே. ஆமாம். இவன் யாரு? ஏதாவது தகறாரா? சொல்லு சுந்தரி! மாமாகிட்டே சொல்லி முட்டிக்கு முட்டி பேத்துடச் சொல்றேன். யாருடா நீ? ஏன்யா கான்ஸ்டபிள், அங்கே நின்னுக்கிட்டு என்னய்யா பண்றே?"

"அது சார்... என் சொந்தக்காரப் பொண்ணு மாதிரியே..."

"அடி செருப்பாலே! இவ உன் சொந்தக்காரப் பொண்ணா?"

"இல்லே தொரை! அது மாதிரி இருந்தது."

"ஏய் சுந்தரி, அறிவில்லே உனக்கு? இன்ஸ்பெக்டர் மாமா வருவாருன்னு சொல்லத் தெரியாது? எவனோ ஒரு திருட்டுக் கழுதை, ஏண்டா டேய்..."

திரும்பிப் பார்த்தான். அவனும், அவன் கூட்டாளி யும் நொடியில் காணாமல் போயிருந்தார்கள்.

''வா சுந்தரி... ஜீப்புலேயே மாமா காத்துக்கிட்டு இருக்கிறாரோ என்னவோ! வா, வா!''

கூட்டத்தை விலக்கிக் கொண்டு நடக்க ஆரம்பித்தான். கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு, எங்கே இவன் நடக்கிறான் என்று சொர்ணாவுக்குக் கலவரமாக இருந்தது.

யார் இவன்? மாமா என்கிறான்... ஜீப் என்கிறான்! பேருந்து நிலையத்தின் மறு பகுதிக்கு வந்து சேர்ந்தார்கள்.

''அப்பாடா! பொழைச்சோம். அவனோட எத்தனை ஆளோ? எப்படிடா சமாளிக்கிறதுன்னு நினைச்சுத்தான் இப்படி ஒரு டிராமா போட்டேன். ஆமாம், அந்த ரவுடிதான் கையைப் பிடிச்சுத் தரதரன்னு இழுத்துட்டுப் போறான் இல்லே? தொண்டையே கிழிஞ்சி போறா மாதிரி அலற வேணாமா? என்னமோ, மெல்ல கத்தறீங்க! எங்கே கத்தினீங்க? முனகினீங்க!''

''திடீர்னு வந்து, அந்த ரவுடி அப்படிப் பண்ணதும், எனக்கு ஒண்ணுமே புரியலீங்க மிஸ்டர்...''

''மிஸ்டர் ரமேஷ்... அது சரி, எங்களை மாதிரி யாராவது வயசுப் பையன் மாட்டிக்கிட்டா என்ன மாதிரி கலாட்டா பண்ணி அனுப்பறீங்க! பிரசினைன்னு வர்றப்போ, துணிச்சலெல்லாம் போயிடுது பாத்தீங்களா?''

சொர்ணா யோசித்தாள். உண்மைதானே? திகைத்துப்போய், திணறி நின்றுவிட்டோமே! ஆமாம், உரக்கக் கத்தவில்லை என்கிறானே! ஏன் கத்தவில்லை? கத்தினேனே!

பூ.—4

ரமேஷ் புரிந்துகொண்டான்.

''நீங்க கத்திலீங்க. ஆனா, துணிச்சலா, அலட்சியமா ''டேய், யார்டா நீ?''ன்னு அவனைக் கேள்வி கேக்கலை. கெஞ்சினீங்க. அழுதீங்க. மத்தவங்களை ஒத்தா சைக்குக் கூப்பிட்டீங்க. ஏன் அதெல்லாம்? தைரியமா, ''யாருடா நீ? எடு கையை! கண்ட நாயி வந்து கையைத் தொட்றதாவது?''ன்னு ஆவேசமாக் கத்தியிருந்தா, எல்லாருக்குமே ஒரு நம்பிக்கை வந்திருக்கும். ஏன், மத்த நேரத்திலே 'மீட்டர்' விடுவீங்க இல்லே. அதே மாதிரி படபடன்னு பத்து வார்த்தை இங்கிலீஷ்லே திட்டியிருக்கலாம்லே? ஜனங்களுக்கும் நிச்சயமா தெரிஞ்சிட்டிருக்கும். இல்லையா?''

சொர்ணா யோசித்தாள். அட! ஆமாம்... ஆனால், வார்த்தைகள் எங்கே வந்தன! நெஞ்சில்தான் பயம் வந்து அமாவாசை இருட்டுப்போல அப்பிக்கொண்டதே!

''சரி, சரி... நான் வந்த மெட்ராஸ் பஸ் கிளம்பிடப் போகுது ''

சொர்ணா திரும்பிப் பார்த்தாள். திருவள்ளுவர் பஸ் நின்றிருந்தது.

''மிஸ்டர் ரமேஷ்! நான்கூட மெட்ராஸ்தான் போகணும்.''

''அப்ப வாங்களேன். டிக்கெட் கிடைக்குமான்னு கண்டக்டரைக் கேட்டுப் பார்க்கலாம்.''

இடம் இருந்தது. ரமேஷ் பக்கத்து இருக்கையே கிடைத்தது. டிக்கெட் வாங்கி உட்கார்ந்ததும், சொர்ணாவுக்குப் படபடப்புக் கொஞ்சம் குறைந்திருந்தது.

பக்கத்தில் உட்கார்த்திருந்த ரமேஷ் அவள் மேல் விரல் நகம்கூடப் படாத அளவுக்குக் கண்ணியம் காத்தது மேலும் நிம்மதியைத் தப்தது.

'பஸ் கிளம்ப இன்னும் நேரம் இருந்தது. பக்கத்து இருக்கைக் கணவன் அட்டைப் பெட்டியில் அடைக்கப் பட்ட குளிர்ந்த பாலை வாங்கி வந்து, மனைவியிடம் நீட்ட, அவள் வாங்கிப் பருகுவதைப் பார்த்ததும், பசியும் தாகமும் திரும்பவும் தலை தூக்கின. இறங்கிப் போய் வாங்கவும் பயமாக இருந்தது.

சில மணி நேரங்களில் சென்னைக்குப் போய்ச் சேர்ந்துவிடலாம். எல்லாம் வீட்டுக்குப் போய்ச் சாப் பிட்டுக் கொள்ளலாம்.

''இந்தாங்க...''

குளிர்பால் அவள் முன் நீட்டப்பட்டது. அட! யார் போய் வாங்கி வந்தது?

ரமேஷ் நின்றிருந்தான், புன்னகை தவழ. சொர்ணா வாங்கிக் கொண்டாள்.

''வந்து... நான்... இது... வேண்டாமே!''

''ஏன் பொய் சொல்றீங்க? அந்த ஆள் வாங்கிட்டு வந்து அவங்க மிஸஸ்கிட்டே கொடுத்ததை நீங்க பார்த் தீங்களே ஒரு பார்வை... அடேங்கப்பா! பயந்துட்டேங்க எங்கே பிடுங்கியே குடிச்சுடுவீங்களோன்னு!''

சொர்ணா வெட்கத்துடன் உதட்டைக் கடித்துக் கொண்டாள். ச்சே! அப்படியா பார்த்தோம்?

பஸ் கிளம்பிற்று.

துளித் துளியாகத் தொண்டையில் இறங்கியது குளிர் பால், அடாடா! அமுதம் என்கிறார்களே, அது இது தானோ?

"ஆமாம் சுந்தரி! உங்க பேரு என்ன?"

சொர்ணா திகைத்தாள். ஓ! பெயரை இன்னும் சொல்லவில்லையா?

"என் பேரு மிஸ். சொர்ணா ராஜலிங்கம். நாச்சியப்பா கல்லூரியிலே தேர்ட் இயர் பண்றேன். நீங்க?"

"பேருதான் சொல்லிட்டேன் ரமேஷ்னு. எம்.பி ஏ. முடிச்சுட்டு, அப்பா கம்பெனியைப் பாத்துக்கறேன்."

முகவரி அட்டையைக் கொடுத்தான் ரமேஷ்.

தன் தந்தையின் முகவரி அட்டையைக் கொடுத்தாள் சொர்ணா.

ரமேஷ் தன் கல்லூரி நாட்களைப் பற்றி, தன் பிசினஸ் பற்றி, சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தான். பிறகு இருக்கையைச் சாய்த்துக் கொண்டு தூங்கிப் போனான்.

சொர்ணாவுக்குத் தூக்கம் வரவில்லை. மனசுக்குள் மைனா ஒன்று குரல் கொடுத்தது.

ரமேஷின் சிரிப்பும், பேசும்போது பளபளக்கின்ற அந்தக் கரிய கண்களும் ஒரு புதுவிதமான ஈர்ப்பைத் தந்தன. அவன் பக்கத்தில் உட்கார்ந்திருப்பதே ஓர் உற்சாகமாக இருந்தது.

அவனைப் பார்த்துக் கொண்டே இருக்கவேண்டும் என்று நெஞ்சுக்குள் மூண்டெழுகிற தாபத்தைத் தாங்க முடியாமல் தவித்தாள் சொர்ணா.

விஜய், குரு, சங்கர் இன்னும் மற்றவர்களோடு பேசும்போது ஏற்படாத மகிழ்ச்சியும், கிளுகிளுப்பும் இவனோடு பேசும்போது மட்டும் ஏன் ஏற்பட வேண்டும்?

மெல்லச் சிரித்துக் கொண்டாள் சொர்ணா.

# 8

வசந்தி வெறித்த பார்வையுடன் சோபாவில் சாய்ந்திருந்தாள். சொர்ணா வந்து சொன்னவை அவளுக்குப் பெரும் அதிர்ச்சியூட்டும் செய்திகளாக இருந்தன.

காந்திமதியம்மாளா இப்படி நடந்து கொண்டாள்? ச்சே... எத்தனை ஆண்டுகளாக வரப் போக இருக்கிறார்கள்?

ம்கூம்... வரப் போக என்று சொல்லவே முடியாதே! வர என்று வேண்டுமானால் சொல்லலாம்.

அவர்கள் வர, நாம் போக என்கிற நிலையே கிடையாதே! போனதே ஒரு முறைதான். அதுவும் சொர்ணா மட்டும்தான் போனாள. அவளும் பதறி அடித்துக் கொண்டு, பாதி ராத்திரியில் ஓடி வருகிறாற் போல ஆகி விட்டது.

இப்படியுமா மனிதர்கள் இருப்பார்கள்! மனிதனுக்கு விபத்து நேர்வதே கிடையாதா? ஆபத்திலிருந்து மீண்டு வருவதே கிடையாதா?

அத்துடன் ஒழிந்தான் என்பது போல ஏன் இப்படிப் பேசி அனுப்பியிருக்கிறாள் இந்தக் காந்திமதியம்மாள்? 'காரில் என் தம்பி சொன்னான்,' என்றாளாமே! பார்க்க வேண்டும் என்று அவளுக்குப் பதைக்கவில்லை பாரேன். ஓடி ஓடி இவர்களுக்கு உழைத்த நான்தான் ஏமாளியா?

வசந்தியின் கண்களிலிருந்து கண்ணீர் முத்துக்கள் ஒன்றன்பின் ஒன்றாக உருண்டு வரத் தொடங்கின.

''அம்மா, நகைங்க இருக்கில்லே? அப்புறம் என்ன கவலை? வெச்சு வாங்கி, அப்பாவுக்கு வேணும்ங்கற வைத்தியம் செய்துகிட்டாப் போச்சு. காந்திமதி யம்மாளைப் பத்தியே புலம்பிப் புலம்பி உங்க உடம்பைக் கெடுத்துக்காதீங்க'' என்று சொர்ணா கண்டித்து விட்டுத்தான் அப்பாவைப் பார்க்க மருத்துவமனைக்கு ஓடினாள்.

''ஹூங் .. அவ்வளவுதான்! அப்புறம் என்னப்பா? இன்னும் ஒரே மாசத்துலே ஜம்முன்னு நடக்கப் போறீங்க பாருங்க.''

சொர்ணாவை ராஜலிங்கம் ஏறெடுத்துப் பார்த்தார். தனக்கு நம்பிக்கை ஊட்டுவதற்காக, எப்படிப் பேசுகிறாள்!

'ம்... இளைத்துக் கறுத்துப் போய் விட்டாள் என் கண்மணி. ச்சே, எப்படி அன்று அந்த விபத்து நேர்ந்தது? மருத்துவமனையில் வந்து படுத்துக்கொண்டு, எல்லாருக்கும் இப்படி அவஸ்தை கொடுத்து விட்டேனே! இந்த ஒரு மாதத்தில் இவர்கள் நன்றாகத் தூங்கியிருப்பார்களா? சாப்பிட்டிருப்பார்களா? 'சொர்ணாவின் கல்லூரிப் படிப்பு என்னவாயிற்று?' என்று கேட்டார்.

சொர்ணா சொன்னாள்: ''அது நல்ல வேளை... லீவுப்பா! இருவது நாளா லீவு. அதைப் பத்தில்லாம் நீங்க கவலையே படாதீங்க. பரீட்சைக்கு இன்னும் எவ்வளவோ நாள் இருக்கே.''

''சொர்ணா இந்த ஒரு மாசம் பணத்துக்கு என்னம்மா பண்ணீங்க? குருமூர்த்தி டூர் முடிஞ்சு வந்துட்

டானா? ம்... பிசினஸ என்ன லட்சணத்துலே நடக்குதோ? நான் காலை ஒடிச்சுக்கிட்டு வந்து படுத்துட்டேன். அவன் யூரோப் டூர்லே ஊர் ஊராப் போயிக்கிட்டிருப்பான்.''

''நீங்க ஏன்ப்பா மனசைப் போட்டுக் குழப்பிக் கிறீங்க? ஆபீஸ்லே மத்தவங்கள்லாம் இல்லியா? அவங்க பாத்துக்க மாட்டாங்களா என்ன?''

''சொர்ணா, பிளான்படி இன்னும் ரெண்டு நாள்லே குருமூர்த்தி வந்துடுவான். வீட்டுக்குக் கூடப் போகமாட் டான். நேரா இங்கதான் வருவான். இந்த வருஷ லாபத்தை அப்புறமாகக் கணக்குப் பண்ணிப் பிரிச்சுக்க லாம். முதல்லே, ஒரு லட்சம் குடுத்துடுன்னு வாங்கிக்கப் போறேன். அம்மாகிட்டே சொல்லு. பணத்தைப் பத்திக் கவலைப்பட வேணாம்னு.''

''சரிப்பா. இந்தாங்க இந்த மாத்திரையைச் சாப் பிடுங்க,'' அப்பா வசதியாகச் சாய, தலையணையைச் சரிப்படுத்தி வைத்துவிட்டு, டாக்டரைத் தேடிப் போனாள் சொர்ணா.

''டாக்டர், அப்பாவுக்கு ஆக்சிடெண்ட் ஆகி, ஒரு மாசம் ஆயிட்டுதே! எப்ப கால் கட்டைப் பிரிப்பீங்க? எப்ப வீட்டுக்குப் போகலாம்?''

''காலு எலும்பில்லேம்மா முறிஞ்சுப் போயிருக்குது! அது பழையபடி இணைய வேணாமா? அதுக்குள்ளே அவசரப்பட்டா எப்படி?''

''அவரு இழந்துட்ட உற்சாகத்தைத் திரும்பப் பெற ணும். அதைப் பார்க்கணும்னு ஆசையா இருக்குது, அதனாலதான்!''

"அந்த ஆசை எங்களுக்கு மட்டும் இல்லியா என்ன? சீக்கிரமா நல்லபடியா உங்கப்பா வீட்டுக்கு நடந்து வருவார், சரிதானா?"

திரும்ப அப்பாவின் அறைக்குள் வந்தாள் சொர்ணா.

"ஹாய் சொர்ணா! என்னம்மா? என்ன அப்பா வுக்கு இப்படி ஆயிட்டுது?"

"வாங்க அங்கிள்! நீங்க எப்ப வந்தீங்க?"

"இப்பத்தான் வர்றேன். ஏர்போர்ட்லேருந்து நேரா ஹாஸ்பிடலுக்குத்தான் வந்தேன். இன்னும் வீட்டுக்குக் கூடப் போகலை."

நண்பன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு ராஜ லிங்கம் முகம் மலர்ந்தார். மகளைப் பார்த்து, 'நான் சொன்னேனே! பார்த்தாயா?' என்பது போலப் பெரு மிதம் பொங்கச் சிரித்தார்.

"அது வரையிலும், தலைக்கு வந்தது தலைப்பாகை யோட போச்சுங்கற மாதிரி, ஏதோ ஃப்ராக்சரோட போச்சே! அந்த மட்டுக்கும் பரவாயில்லை. இல்லி யாப்பா ராஜலிங்கம்?"

"அது சரி குருமூர்த்தி! அப்படித்தான் நினைச்சுக்க ணும் இந்த ஒரு மாசத்துலே இவளும், இவங்கம்மாவும் திரும்பாப் போயிட்டாங்க. எவ்வளவு செலவுங்கறே? ஹாங்! லாபக் கணக்கு பத்திப் பின்னாடி பார்த்துக்க லாம். முதல்லே ஒரு லட்சம் குடுப்பா. ஹாஸ்பிடல் செலவுக்கு ஒத்தாசையா இருக்கும்."

"அதுக்கென்ன ராஜலிங்கம்? நீ சொல்ற மாதிரியே செய்துட்டாப் போச்சு. ரெண்டு நாள்லே எடுத்துட்டு வந்து குடுத்துடறேன்."

''ஏம்மா சொர்ணா! நீ கிளம்பும்மா! அம்மா பாவம், காத்துக்கிட்டிருப்பா.''

அப்பாவின் மகிழ்ச்சியான முகத்தைப் பார்த்த வாறே, சொர்ணா நிம்மதியாக வீட்டுக்குக் கிளம்பி னாள்.

இத்தனை நாளும் இருந்த கலக்கம் இப்போது அப்பா முகத்தில் இல்லை. 'உயிர் காப்பான் தோழன்,' என்பார்களே! அந்தத் தோழனைப் பார்த்ததும், கவலை கள் காணாமல் போய்விட்டனவோ?

அப்பாவின் முகத்தில் இருந்த வருத்தமும், வாட்ட மும் நிமிடத்தில் மறைந்து போக, பழைய ராஜலிங்கத் தின் கம்பீரமும், மிடுக்கும், சிரிப்பும் ஒரே நொடியில் வந்து ஒட்டிக் கொண்ட அதிசயத்தைப் பார்க்க, சொர்ணாவுக்குப் பரவசமாக இருந்தது.

நிதானமாக மொபெட்டைக் கிளப்பினாள். வீட்டுக்கு வந்து அம்மாவுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டபோது, மனச்சுமை சுத்தமாகக் காணாமல் போயிருந்தது.

''பரவாயில்லை. இனி அப்பாவுக்குச் சீக்கிரமாவே நல்லாயிடும். குருமூர்த்தியைப் பார்த்ததுமே பாதிநோய் காணாமே போபிட்டது போல இருக்குதே?''

''ஆமாம்மா. அவர் சிரிப்பையும் பளபளக்கிற அந்தக் கண்ணையும் நீ பாக்கணுமே! பழைய உற்சாகம் திரும்பி வந்துட்டுதும்மா!''

அன்று இரவு அம்மாவும், பெண்ணும் நீண்ட நெடு நாட்களுக்குப் பிறகு, நிம்மதியாகச் சாப்பிட்டார்கள். வசந்தி தூங்கப் போனாள்.

தன் அறைக்கு வந்த சொர்ணா, பாடல்களை மென்மையான ஒலியில் ஓடவிட்டுப் படுக்கையில் படுத்தாள்.

'சுந்தரன் ஞானும், சுந்தரி நீயும்
சேர்ந்திருந்தால் திருவோணம்!'

திடீரென்று ரமேஷ் ஞாபகம் வந்தது. ஓ ரமேஷ்! ரமேஷ் என்ன செய்து கொண்டிருப்பார்? என் நினைவு அவருக்கு இருக்குமா?

ஆமாம்! இப்போது எப்படித் திடீரென்று அவர் நினைப்பு வந்தது? எது மனப் பேழையைத் திறக்கும் சாவியாயிற்று?

'...சுந்தரன் ஞானும், சுந்தரி நீயும்'

கமலும் ஊர்வசியும் கிணற்றைச் சுற்றி ஓடிவருவார்கள் இல்லையா? கமலுக்கு வேடப் பொருத்தம் பிரமாதமாக இருக்குமில்லையா?

ஓ! சுந்தரி என்ற சொல் பாட்டில் வந்ததும், ரமேஷ் சுந்தரி என்று கூப்பிட்டதைத் தானாக உள்மனசு ஞாபகப்படுத்திக் கொண்டு விட்டதா?

பெருமூச்சுடன் திரும்பிப் படுத்தாள்; தலையணையில் முகம் அமுங்கியது. அவனை அப்போதே, அந்த நிமிஷமே பார்த்தாக வேண்டும்போல் ஒரு தாபம் பரபரவென்று கொழுந்து விட்டெரிந்தது.

எழுந்து உட்கார்ந்து கொண்டாள் சொர்ணா. ச்சே! என்ன இது, படுக்கவும முடியாமல், உட்காரவும் முடியாமல், இந்த மனதுக்கு என்ன நேர்ந்தது?

சன்னல் கம்பியில் கன்னம் பதித்து, வானவெளியில் நீந்தி வரும் நிலாவைப் பார்க்க முயன்றாள். ம்கூம். முடியவில்லை!

தோட்டத்தில் இதழ் மலர்ந்திருந்த நித்திய மல்லிப் பூக்கள் கும்மென்று மணம் வீசின.

''என் வீட்டுத் தோட்டத்தில்
பூவெல்லாம் கேட்டுப்பார்.
என் வீட்டுச் சன்னல்கம்பி
ஒவ்வொன்றாய்க் கேட்டுப் பார்.''

அவளைச் சீண்டுவது போலவே அடுத்த பாட்டு ஒலித்தது. ரமேஷ் முன்னால் வந்து நிற்பதைப் போலவே இருந்தது.

காதல் தவிர்க்க முடியாத சங்கடம். ஓர் இனிய அவஸ்தை. ரமேஷ் மீது மூண்டுவிட்ட காதல் தீயின் வேகம் தாளாமல், சொர்ணா திண்டாடிக் கொண்டிருந் தாள்.

## 9

சொர்ணாவுக்கு அப்பாவைப் பார்க்க பரிதாபமாக இருந்தது. அது என்ன அப்படி ஒரு நம்பிக்கை? இந்தப் பத்து பதினைந்து நாட்களாக வராத குருமூர்த்தி இனி மேலா வரப் போகிறார்?

சக்கர நாற்காலியைச் சன்னல் ஓரம் போட்டுக் கொண்டு, குருமூர்த்தியின் கார் வருகிறதா, வருகிறதா என்று வாசலையே கவனித்துக் கொண்டு...ச்சே! அவர் ஏமாற்றத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை.

பல முறை அலுவலகத்துக்கு ஃபோன் செய்தும் பார்த்தாகிவிட்டது. ஒரே மாதிரியாக, 'வெளியே போய்

இருக்கிறார்,' என்கிற பதிலையே எத்தனை முறைதான் கேட்பது?

சொர்ணா அம்மாவிடம் சொல்லிவிட்டு, ப்ளாஸ்க்கை எடுத்துக் கொண்டு, சாத்துக்குடி பழரசம் வாங்கக் கிளம்பினாள். அப்பாவுக்கும் அவளுக்கும் எப்போதுமே இந்தப் பழரசங்கள் பிடிக்கும்.

அம்மாவுக்கு மணக்க மணக்கக் காப்பிதான் வேண்டும் எப்போது அவர்கள் வெளியே கிளம்பினாலும், பழரசக் கடையைப் பார்த்துவிட்டால், அப்பா காரை நிறுத்திவிடுவார்.

பழைய இனிய நினைவுகளில் நீந்தியபடியே, சொர்ணா பழரசம் வாங்கிக் கொண்டு உள்ளே வரும் போது, எதிரே அவர்கள் அலுவலகத்தின் நீண்டநாள் ஊழியர் தங்கவேலு வருத்தம் தோய்ந்த முகத்துடன் வெளியே போய்க் கொண்டிருந்தார்.

என்ன சொல்ல வந்தார்? குருமூர்த்தி எதற்காக இவரை அனுப்பியிருக்கிறார்? யோசனையுடன் உள்ளே போனாள்.

அப்பா இடிந்து போய் உட்கார்ந்திருந்தார். என்ன ஆயிற்று? என்ன விஷயம்? சொர்ணாவின் இதயம் படபடத்தது.

அம்மாவைத் தேடினாள் சொர்ணா. வசந்தி கண்ணீர் வழிய, சன்னல் ஓரம் நின்றிருந்தாள்.

''அப்பா! என்னப்பா?''

அந்த வார்த்தைக்காகவே காத்திருந்தாற்போல, கதறியழத் தொடங்கினார் ராஜலிங்கம்.

அப்பாவாவது, அழுவதாவது? கேள்விக்குறியுடன் அம்மாவைப் பார்த்தாள் சொர்ணா.

"பாழாய்ப் போற அந்தப் படுபாவி ஏமாத்திட் டாண்டி! ஒத்தைப் பைசா தரமாட்டானாம். கோர்ட்லே பாத்துக்கச் சொல்றான்."

உதட்டைக் கடித்துக் கொண்டு அழுதாள் வசந்தி. அப்பாவைத் திரும்பிப் பார்த்தாள் சொர்ணா.

இப்படி அப்பாவை இதற்கு முன் ஒரு நாளும் பார்த்ததில்லையே! ஒரு முறை வியாபாரத்தில் பெரிய நஷ்டம் வந்துவிட்டது. அப்போது கூட அவர் அதிர்ந்து போகவில்லை.

அப்பாவிடம் விளக்கம் கேட்டாள் சொர்ணா. "அப்போ வியாபாரத்துலே மட்டும்தாம்மா நஷ்டம் வந்தது. தாங்கிக்கிட்டேன். ரொம்பச் சுலபமாகவே தாங்கிக்கிட்டேன். ஆனா, இப்போ, நட்புக்கே நஷ்டம் வந்துட்டதே! எப்படிம்மா தாங்கிக்க முடியும்? குருமூர்த்தி இப்படிப் பண்ணுவான்னு நான் நினைக்கவே இல்லையே!"

"அப்பா! வாழ்க்கையிலே எது வந்தாலும், நாம மறுக்க முடியுமா?"

"உனக்குப் புரியாதுடா! எனக்குத் தரவேண்டிய பணத்தை ஏமாத்திட்டானேன்னு கஷ்டப்படறேன்னா நினைக்கறே? நிச்சயமா இல்லை. பணம் என்னடா பணம்? என்னாலே தனியா பிசினஸ் பண்ணி, பணத்தைச் சம்பாதிக்க முடியும். ஆனா, நான் இப்போ, துடிக்கிறது என் நட்போட மரணத்துக்காகத்தான். ஆமாம் சொர்ணா! நண்பனோட மரணத்தைக்கூடத் தாங்கிக்க

நல்லா ஆனா, எனக்கு அதுவே போதும். நேரங் காலத்துக்கு உதவாம, நகைங்க எதுக்கு?''

அவர்கள் மும்முரமாக விவாதித்துக் கொண்டிருந் தார்கள். சொர்ணா வெளியே வந்தாள்.

எனக்கு வேலை கிடைக்கிறதா கஷ்டம்? சொர்ணா நினைச்சா, கிடைக்காத வேலையாக்கும்!

''பேரு என்னன்னு, சொன்னீங்க?''

''மிஸ் சொர்ணா.''

''வேலையிலே முன் அனுபவம் இருக்குதா?''

''இல்லைங்க சார். ஆனா...''

''டைப்ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் தெரியுமா?''

''தெரியாது சார். வந்து...''

''கம்ப்யூட்டர் கோர்ஸ் ஏதாவது பண்ணியிருக்கீங் களா?''

''இல்லை சார்.''

''டிகிரி பர்ஸ்ட் கிளாஸ்லே பாஸ் பண்ணிட் டோம்ங்கற தைரியத்துல வேலை தேடிக் கிளம்பிட் டீங்களா?''

''டிகிரி... டிகிரி இன்னும் முடிக்கலை சார்.''

''வ்வ்வ்வாட்... என்ன வேலை கிடைக்கும்னு எதிர் பார்க்கறீங்க?''

''இல்லை சார்... வேலை குடுத்துப் பாருங்க. இதெல்லாம் நான் உடனே கத்துக்க ஆரம்பிச்சிடறேன்.''

''இதோ பாரும்மா, எங்க கம்பெனியிலே எந்த போஸ்ட்டுக்கு ஆளை எடுத்தாலும், எல்லாம் தெரிஞ்சி இருக்கணும்னு எதிர்பார்ப்போம். ஒரு டைப்பிஸ்ட்

வரலைன்னு ஒரு வேலை நிற்கக்கூடாது. இது என்ன அரசாங்க உத்தியோகமா என்ன? 'வேலை தெரிஞ்சவனுக்கு வேலையைக் குடு... வேலையே தெரியாதவனுக்குச் சம்பளத்தைக் குடு'ன்னு சொல்றதுக்கு? பம்பரமா வேலை செய்ய வேண்டி இருக்கும் தனியார் கம்பெனியிலே. நீ என்னன்னா, டிகிரி கூட முடிக்காம வந்து நிக்கறே! நீ முதல்ல இடத்தைக் காலி பண்ணும்மா.''

சொர்ணாவின் நம்பிக்கை பொடிப் பொடியாக உதிர்ந்தது. பாட்டுப் போட்டிகளில் குயிலாகக் குரல் இழையப் பாடிப் பரிசு பெறுவாளே! அலுங்காமல் குலுங்காமல் படகு போவதைப் போலக் காரைச் செலுத்துவாளே! வகுப்பில் மாணவியர் பிரதிநிதியாய் இருந்து, ஏகப்பட்ட விழாக்களைச் சிறப்பாக நடத்துவாளே! அதெல்லாம் பைசாவுக்குப் பிரயோசனம் இல்லையா?

வேலை கிடைப்பதற்கான தகுதிகள் எதுவுமே தன்னிடம் இல்லை என்பது நிதர்சனமாகப் புரிவதற்கு மேலும் நான்கைந்து கம்பெனிகள் ஏறி இறங்க வேண்டியிருந்தது.

ஓ! இதற்குத்தான் மேடம் டைப்ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் கற்றுக் கொள்ளச் சொல்லி வலியுறுத்தினார்களோ?

என்னவோ டிகிரி முடித்து வெளியே வந்தவுடனேயே, கலெக்டர் வேலை காத்திருப்பதாகக் கண்ணிலே கனவுகள்... அந்த கனவு மயக்கத்தில் எப்படியெல்லாம் மேடத்தை எள்ளி நகையாடியிருப்போம்!

சொர்ணா யோசித்தாள்.

நல்ல காலம் சொர்ணா! இன்னிக்குப் பரீட்சைக்குப் பணம் கட்டவேண்டிய கடைசி நாளு. பணம் இருக்கா?''

இல்லையென்று தலையாட்டினாள் சொர்ணா.

''நான் தரேம்மா. எடுத்துட்டுப் போயி, பணம் கட்டு. நல்லாப் படிச்சுப் பாஸ் பண்ணிடணும், தெரிஞ்சுதா? கல்விதான் அழியாத சொத்து.''

மனப்பூர்வமாக உணர்ந்த காரணத்தால், உள்ளம் நெகிழ, மேடம் தந்த பணத்தை வாங்கிக் கொண்டாள்.

''நாளைக்கே கொண்டு வந்து தந்துடறேன் மேடம். ரொம்ப நன்றி மேடம்.''

''வீட்டிலே பணம் இருக்குது. ஆனா, அது உனக்குப் பிரயோஜனப்படலை பாத்தியா? ஆனா, இது கையிலிருக்கிற பணம்! இதுதான் ஒரு வருஷம் வீணாப் போகாம உதவுவது. அந்த மாதிரிதான் கையிலிருக்கிற வித்தையும்... அதுதான் ஆபத்துக்கு உதவும்.''

நிஜம்தான். கையிலே இருக்கிற வித்தைதான் காலத்துக்கும் உதவும். எத்தனை ஆற்றல்களை வளர்த்துக் கொள்ள முடியுமோ, அத்தனை ஆற்றல்களை வளர்த்துக் கொள்வதுதான் புத்திசாலித்தனம்.

அதையெல்லாம் விட்டுவிட்டு அரட்டை, கலாட்டா, சினிமா, டிராமா என்றே பொழுதைக் கழித்து விட்டோமே! சொர்ணா உள்ளபடியே வருந்தினாள்.

''ஆமாம் சொர்ணா! பொண்ணுங்க, டெய்லரிங் கத்து வெச்சிருக்கணும். எழுத்தாற்றல், பேச்சாற்றலை வளர்த்துக்கணும். கராத்தே கூடத் தெரிஞ்சிருக்கணும். மேடம் என்ன எல்லாத்தையும் போட்டுக் குழப்பறாங்களேன்னு நினைக்கறியா? இல்லேம்மா! ஆபத்தான நிலையிலே எந்த வித்தை நமக்கு உதவும்னு தெரியாதும்மா. அதனாலே, எல்லாம் தெரிஞ்சிருக்கணும்.

# 10

மேடம் சொல்லச் சொல்ல சொர்ணாவுக்கு தன்னம் பிக்கை வந்தது.

உண்மைதான். அவளுக்குத் தன்னம்பிக்கை வளருமே! அந்த ஒன்று இருந்தால் போதுமே! வானத்தைக் கூட வளைக்கலாமே!

''எங்கே சொர்ணா, காதல்ங்கற மாயமான் பின்னாடி இல்லே பள்ளிப் பருவத்திலேயே அலைய பொண்ணுங்க ஆரம்பிச்சிடறாங்க!''

சொர்ணாவுக்கு அந்த மட்டும் தன் மனம் அப்படி எல்லாம் கட்டு மீறி அலையவில்லையே என்று ஆறுதலாக இருந்தது.

குடும்ப மானம், கௌரவம், படிப்பு எல்லாமே பாழ் பட்டுப் போயிருக்குமே! காதலால் சீரழிந்த பல மாணவியர் முகங்கள் கண் முன்னே வந்தன.

''என்னைக் கூடவா நீ அப்படி நினைக்கிறே? ஏன் சுந்தரி?''

ரமேஷ் வெள்ளை வெளேர் என்ற பற்கள் பிரகாசிக்கச் சிரித்தான். பஸ்ஸில் அவன் பேசியது, சிரித்தது எல்லாமே கண் முன்னே உயிர் பெற ஆரம்பித்தன ஓ! ரமேஷ்! நீங்கள் தந்த விசிட்டிங்கார்டைத் தொலைத்து விட்டுத் தவிக்கிறேனே! கணையாழி தொலைத்த சகுந்தலை போலல்லவா கதறிக் கொண்டிருக்கிறேன்? குரலையாவது ஃபோன் மூலம் கேட்டிருக்கலாம். எப்படி நான் உங்களைப் பார்க்க முடியும்?

ஏடாகூடமான சூழ்நிலையில் அவனைச் சீக்கிரத்திலேயே சந்திக்கப் போகிறோம் என்பது அப்போது சொர்ணாவுக்குத் தெரியாது.

சொர்ணா புரண்டு படுத்தாள். மாலை வெய்யில் அவள் மேல் பட்டுத் தெறித்தது.

மஞ்சள் வெளிச்சத்தில், வானத்திலிருந்து இறங்கி வந்த தேவதையைப் போல இருந்தாள். வெளிச்சம் நகர்ந்து, முகத்தின் பக்கம் அடித்தது.

சொர்ணா பிடிவாதமாக, எழுந்திருக்காமலேயே படுத்திருந்தாள்.

கூடத்தில் அம்மா கத்துவது கேட்டது.

''சொர்ணா! முகம் கழுவிக்கிட்டு வந்து, காப்பி குடி... கடைசி எக்ஸாம் எழுதி முடிச்சிட்டா, அதுக்காக இப்படியா நீ தூங்குவே? சரியான பொண்ணுதான்...''

அப்பாவின் ஆதரவான குரல் இடைமறித்தது, ''குழந்தை தூங்கட்டுமே வசந்த்! நேத்து ராத்திரி ஒரு மணி வரைக்கும் படிச்சிக்கிட்டிருந்தா தெரியுமா? இப்ப அவ எழுந்து என்ன பண்ணப் போறா?''

''அது சரி... உங்களை விட்டா, பக்கத்துலே நின்னுகிட்டு, தாலாட்டு இல்லே பாடுவீங்க? அப்படி என்ன, ஐ.ஏ.எஸ். எக்ஸாமா எழுதி முடிச்சிருக்கா?''

''அவ அறிவுக்கு ஐ ஏ.எஸ். எக்ஸாம்ஸ் எம்மாத்திரம்? சும்மா ஃபூன்னு ஊதித் தள்ளிடுவா...''

''சரி சரி... போதும் உங்க பொண்ணு புராணம்! மெல்ல, தோட்டத்துப் பக்கம் நடந்துட்டு வரலாம். உங்களை டாக்டர் தினமும் நடக்கச் சொல்லியிருக்கிறார் இல்லே?''

ராஜலிங்கத்தால் காலை வீசி நடக்க முடியவில்லை என்றாலும், யார் தோளையாவது பிடித்துக் கொண்டு, மெல்ல நிதானமாகத் தாங்கித் தாங்கி நடக்க முடிந்தது. மருத்துவ மனையிலிருந்து வந்து, இந்த ஒன்றரை மாதத்தில் உடம்பு எவ்வளவோ தேறியிருந்தது.

சொர்ணாவுக்கு அப்பாவோடு பேசிக் கொண்டே தோட்டத்தைச் சுற்றி வர வேண்டும் போல் இருந்தது. கிடுகிடுவென்று முகம் கழுவி வந்தாள். அவசர அவசர மாக, ஒரு ஸ்டிக்கர் பொட்டை எடுத்து ஒட்டிக் கொண் டாள். தோட்டத்துக்கு விரைந்தாள்.

''அம்மா! அப்பாவை நான் பாத்து நடக்க வைக்கி றேன். நீங்க சூடா உப்புமா, சட்னி செய்யுங்க. நாம இன்னிக்குத் தோட்டத்துலே ஒக்காந்து ஜாலியாச் சாப்பிடலாம்...''

பாசம் கனிய மகளைத் பார்த்தார் ராஜலிங்கம். மூன்று பேரும் ஒன்றாகச் சினிமாவுக்குப் போகிற கோலாகலம் என்ன? பீச்சுக்குப் போனால், மணலில் காலார நடந்து, இரவு பத்து மணிக்கு வீடு திரும்புகிற சாவகாசம் என்ன? ஓட்டலில் வகை வகையாகச் சாப்பிடுகிற சொகுசு என்ன?

எல்லாம் கொஞ்ச நாளாய்க் காணாமல் போய் விட்டதே! அந்த ஒரு விபத்து வந்து, எல்லா உல்லாசத் தையும் முடக்கிப் போட்டு விட்டதே! உல்லாசத்தை மட்டுமா? செலவுகளைக் குறைத்து, சேமிப்பைப் பெருக்க வேண்டும் என்கிற ஞானோதயத்தையும் அல்லவா கொடுத்திருக்கிறது!

''என்னப்பா, என்னமோ யோசிச்சிக்கிட்டே வரீங்க?''

"இல்லடா... திடீர்னு இப்படி ஒரு விபத்து நடக்கணுமான்னுதான்! அதனாலே எத்தனை பிரசினைங்க? ச்சே!"

"அய்யய்யோ! அப்படிச் சொல்லவே சொல்லாதீங்க... அந்த ஒரு விபத்து நமக்கெல்லாம் எவ்வளவு படிப்பினையைக் கொடுத்திருக்குது தெரியுமா? எத்தனை ஆளுங்களை இனம் காட்டியிருக்குது தெரியுமா? அத்தனைக்கும் மேலே, நான் ஒரு தண்டம்னு காட்டியிருக்குது..."

தலை குனிந்தாள் சொர்ணா.

"ச்சே... சொர்ணா கண்ணு! நீயா தண்டம்? யாருடா சொன்னது? அம்மா சொன்னாளே, நீ அவளுக்கு அட்வைஸ் பண்ணினியாம்...என்ன நம்பிக்கையோட எனக்கு ஆறுதல் சொன்னே நீ!"

"வார்த்தைகளால மட்டும் தானேப்பா சொல்ல முடிஞ்சது? செயல்லே செய்ய முடியலியே! ஒரு வேலைக்குப் போயி சம்பாதிச்சிக்கிட்டு வந்திருந்தா, கெட்டிக்காரின்னு சொல்லியிருக்கலாம். உங்களுக்கு ஆபத்துலே தோள் கொடுக்க முடியலியே..."

"இரு. இரு சொர்ணா! அப்படி என்னடா ஆபத்து நமக்கு வந்துட்டுது? ஒரு கம்பெனி இப்பவும் என்னாலே ஆரம்பிக்க முடியும். உனக்குத் தெரியுமா என் பிரெண்ட் ஒருத்தரோட, திரும்பவும் நான் ஒரு கம்பெனி ஆரம்பிச்சித்தான் இருக்கேன்...அவர்தான் பாத்துக்கிறாரு. கால் முழுக்க முழுக்க நல்லானதும், பழையபடி முழுமூச்சா நான் இறங்கிடுவேன்..."

"திரும்பியும் ஒரு பார்ட்னரா?"

"ஏதோ ஒரு பஸ் விபத்துக்கு ஆளாயிட்டுதுன்றதுக் காக, நாம பஸ் ஏறாமே விட்டுட்றதில்லையே... நம்பிக்கைதாண்டா மூலதனம். எப்பவோ ஒரு நேரம் நம்பிக்கைக்குப் பழுது நேரும்தான். அதுக்காக, சுத்தமாவே நம்பிக்கையை இழந்துட்றதா என்ன?"

"அதெல்லாம் சரிப்பா... என்னாலே ஒரு வேலை யிலே சேர முடியலை, பாத்தீங்களா? அது மட்டும் நிறை வேறியிருந்தா, நான் எவ்வளவு சந்தோஷப்பட்டிருப் பேன் தெரியுமா?"

"சொர்ணா... உனக்கு என்னடா? உனக்கு இல்லாத திறமைகளா?"

"சும்மா இருங்கப்பா. எனக்கு ஒரு வேலையிலே சேர்றதுக்கான எந்தத் தகுதியுமே இல்லைங்கறது நிரூபணமாயிட்டுதே! நான் மட்டுமா? இன்னிக்குத் தேதியிலே, காலேஜ்லே படிக்கிற தொண்ணூறு சதவீதம் என்னை மாதிரிதான் இருக்காங்க..."

நடந்தவற்றை எல்லாம் வெறுப்போடு விவரித்தாள் சொர்ணா.

ராஜலிங்கம் புன்முறுவலோடு, அவள் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

"நீ ஏதோ விளையாட்டுக்குச் சொல்றேன்னு நினைச்சேன். நிஜமாவே வேலை தேடினியா?"

"போங்கப்பா...ஒவ்வொருத்தரும் கேட்ட கேள்விங் களைத் தான் சொன்னனே! டிகிரி முடிக்கிறதுக்குள்ளே எவ்வளவு முடியுமோ அவ்வளவு திறமைகளை நாங்களும் வளத்துக்கணும்தான்!"

"விபத்தாலே ஏற்பட்ட ஞானோதயமா?"

''ஆமாமாம்! பாத்துக்கிட்டே இருங்க...''

''சரி சரி...உப்புமா ரெடி...வாங்க சாப்பிடலாம்...''

புன்முறுவலோடு வசந்தி சிமிட்டி மேடை மீது கிண்ணத்தையும், தட்டுக்களையும் வைத்தாள். சொர்ணா உள்ளே ஓடி, நாற்காலிகளை எடுத்து வந்தாள்.

''அப்பா, இந்தாங்கப்பா. இந்தத் தட்டிலேதான் நிறைய முந்திரிப் பருப்பு இருக்குது. அம்மா, நைசா தட்டை மாத்திடப் போறாங்க! புடிங்க...''

''ஏ வாலு, உன்னை மாதிரி நினைச்சியா? உப்புமா எடுத்து வெக்கறப்பவே, ரெண்டு முந்திரிப் பருப்பைத் திருடி, நீ வாயிலே போட்டுக்கிட்டது தெரியாதுன்னு நினைச்சியா?''

அம்மா சிரித்தாள்.

ராஜலிங்கம் அவர்கள் இருவர் முகத்தையும், அதில் துள்ளிவிடும் பழைய உற்சாகத்தையும் கண்டு மனம் பூரித்தவராய், ஸ்பூனால் எடுத்துச் சாப்பிடத் தொடங்கினார்.

அவர் மனம் நிம்மதியாக இருந்தது. இதுதான் உண்மையான மகிழ்ச்சி! ஒருவன் ஏழையோ, பணக்காரனோ வீட்டில் மகிழ்ச்சி இருக்க வேண்டும். அப்போதுதான் அவன் வாழ்க்கையில் வெற்றி பெற்றவனாகக் கருதப்படுவான்!

சமயங்களில் இந்த வெற்றியை ஏழை பியூன் கூட அனாயாசமாகத் தட்டிச் சென்றுவிட, கோடீசுவரன் மனம் குமைந்தல்லவா நிற்கிறான்!

சொர்ணா தேர்வு நேரத்தில் நடந்த குளறுபடிகளை எல்லாம் சொல்லிச் சிரித்தபடியே. சாப்பிடத் தொடங்கினாள்.

"விஜய் இல்லேப்பா... உங்களைக் கூட ரெண்டு மூணு தடவை வந்து பார்த்துட்டுப் போனானே, அவன் தான்! 'பக்கத்து சீட் பையனைப் பாத்துச் சுத்தமா எழுதிட்டேன்.' அப்படின்னு பெருமையா சொல்லிச் சிரிக்கிறான்ப்பா!"

"அதுலே சிரிக்கிறதுக்கு என்ன இருக்குது?"

"அய்யோ அம்மா! பக்கத்து சீட் பையன் வேற மேஜர்... அவன் பேப்பரைப் பாத்து இவன் எழுதியிருக்கானாம்! எண்பது மார்க் கட்டாயம் வரும்னு பெருமையாச் சொல்றான் பாவி!"

"என்னடி இது? அவ்வளவு கூடவா தெரியாது?"

சிரித்துப் பேசியபடி, சாப்பிட்டு முடித்தார்கள்.

"சொர்ணா! உனக்குப் படிப்பும் முடிஞ்சாச்சி. அதனாலே, பழைய கேள்வியையே திரும்பவும் கேக்கறேன். என்ன மாதிரியான பையன் வேணும்?"

"அப்பா! என் இஷ்டத்துக்கு மதிப்புத் தருவீங்க தானே?"

கழுத்தைக் கட்டிக்கொண்டு, செல்லம் கொஞ்சினாள் சொர்ணா.

"என்னடா, யாராவது பையனை மனசுலே நினைச்சுக்கிட்டிருக்கிறியா?"

ரமேஷ் உருவம் கண் முன்னால் வந்தது.

"ஹாய் சுந்தரி..." குசலம் விசாரித்தது. 'ரமேஷ்! என் அப்பாவிடம் ஒரு வார்த்தை சொன்னால் போதும்!

அழைத்து வந்து, என் எதிரில் நிறுத்தி விடுவார்... ஆனால்...''

''ஆனால் என்ன சுந்தரி?''

சொர்ணாவின் முகத்தைத் தன் உள்ளங்கையில் ஏந்திக் கொண்டவனாய், ரமேஷ் வினவினான்.

அவன் கண்களும், முகமும், பளிச்சிடும் புன்னகையும் சொர்ணாவுக்கு ஒரு கிறக்கத்தைத் தந்தன...

''என்னடா சொர்ணா, என்ன உன் முடிவு?''

அவள் சொன்னதைக் கேட்டு, அதிர்ச்சியடைந்தார்கள் ராஜலிங்கமும், வசந்தியும்.

## 11

பிரிட்டிஷ் கவுன்சில் லைப்ரரியிலிருந்து வெளியே வந்த சொர்ணா கேசிஎஸ் சென்டருக்குக் கிளம்பினாள். கம்ப்யூட்டர் வகுப்புத் தொடங்க, இன்னும் நேரம் இருந்தது. பி.ஏ. பாஸ் செய்த பிறகுதான் படிப்பில் ஆர்வம் கூடியிருந்தது.

மொபெட்டை நிறுத்திப் பூட்டிவிட்டு, எதிரே பீச்சில் அரை மணி நேரம் உட்காரலாம் என்று தீர்மானித்துத் திரும்பியவள் திடுக்கிட்டு நின்றாள்.

யார்? காரில் இருந்து சிரித்தபடி இறங்குவது யார்? ரமேஷா? ரமேஷ்தானா?

சொர்ணாவுக்கு வானத்தில் மிதப்பதைப் போல இருந்தது. வெய்யிலில் களைத்தவனுக்குத் தென்றல்

வந்து உடல் வருடிச் சென்றால் எப்படி இருக்கும் என்பது அவனைப் பார்த்த நொடியில் புரிந்தது.

ஓ! ரமேஷ்! அன்றைய ஒரே சந்திப்பில்கூட, இப்படி என் உள்ளம் கொள்ளை போகுமா? எந்த அளவுக்கு உங்களை எண்ணி எண்ணி ஏங்கியிருந்தால், பார்த்ததுமே இப்படிப் பன்னீர்ப் பூக்களை நுகர்ந்ததைப் போல சந்தோஷக் கிறக்கத்தில் தலை தடுமாறுவேன்?

நடை பழகும் மழலையைப் போல, சொர்ணா ரமேஷை நோக்கி நடந்தாள். கண்களில் நீர் தளும்பிற்று. ரமேஷ் புன்னகைத்தான். ஆர்வத் துடிப்பில் அவன் கண்கள் பளபளத்தன. ''சௌக்கியமா சொர்ணா?''

கல் மனசைப் பார்? ஒன்றரை மாதமாய்த் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. அட, நான்தான் விசிடிங் கார்டைத் தொலைத்துவிட்டேன்! இவருக்கு என்ன? இவராவது போன் செய்திருக்கலாமில்லையா? வந்து பார்த்திருக்கலாமில்லையா?

''என் சௌக்கியத்துக்கென்ன? நீங்க எப்படி இருக்கீங்க?''

''நல்லா இருக்கிறேன். உன்னைத்தான் சொர்ணா பாக்கவே முடியலை.''

''ஆமாம், உங்களுக்கு எவ்வளவு வேலையோ? என்னைப் பாக்கணும்னு உங்களுக்குத் தோணுமா என்ன?''

''ஏன் தோணாம? நிஜம்மா சொல்லு. உனக்கு என் ஞாபகமே வரலியா?''

கனிவுடன் அவள் கண்களையே நோக்கி வினவினான் ரமேஷ். சொர்ணா ஏறிட்டு நோக்கினாள்.

அவளையே அமுதம் போல் அள்ளி விழுங்கக் காத்திருக்கிற ஆர்வத் துடிப்பு அந்தக் கண்களில் பளிச்சென்று மின்னல் அடித்தது.

"அது சரி, இன்னிக்கு எல்லாம் பேசுவீங்க? இத்தனை நாளும் எங்கே போயிருந்தீங்க? ஒரு நாள்னா ஒருநாள் வந்தீங்களா?"

அவளின் தாபம் முழுக்கவே தன்னை இனங்காட்டிக் கொண்டது.

"அது சரி சொர்ணா! நேரா வீட்டுக்கு வரமுடியுமா என்ன? சரி சரி... வாயேன், பீச்சுலே கொஞ்ச நேரம் உட்கார்ந்திருக்கலாம்."

காரைப் பூட்டிவிட்டு வந்தான். இருவரும் நடக்கத் தொடங்கினார்கள். மெரினா ஓரம் நடக்க, நடக்க, சொர்ணாவுக்குப் படபடப்பும் பரவசமும் போட்டி போட்டுக் கொண்டு ஆளை அழுத்தின.

ரமேஷ் ஏதோ பேசிக்கொண்டே வந்தான். அவன் என்ன பேசுகிறான் என்பதை உணர்ந்து கொள்கிற மன நிலையில் சொர்ணா இல்லை. காதுகள் என்னமோ கவனமாய்த்தான் கேட்டன. உள்ளம் மட்டும் அந்தக் கடலை விடவே அதிகமாய் ஆர்ப்பரித்துக் கிடந்தது...

"என்ன சொர்ணா?"

"ம்கூம், ஒண்ணும் இல்லை..."

அவன் கண்கள் ஆயிரம் கதைகள் கூறின. மெல்ல மெல்ல வானத்தில், வெண்பஞ்சு மேகமாய் மாறிப் பறக்கத் தொடங்கினாள் சொர்ணா.

எதிரே ஒருவன் இடிப்பதைப் போல வரவே, சடாரென்று, தன் பக்கம் சொர்ணாவை இழுத்துக் கொண்

டான் ரமேஷ். ஆனால், அவன் போன பிறகும், பிடியை விடவே இல்லை.

கையைப் பிடித்தபடி, மெரினாவில் உலா வருவது சொர்ணாவுக்கு நம்பவே முடியாத இன்பக் கனவாகத் தோன்றியது. ஓ! அவன் கைப்பிடியில் தன் கை...

எல்லாப் பயமும் குழப்பமும் கவலையும் பட்டென்று விலகிப் போக, ஒரு புதுத் துணிச்சலும் தெம்பும் உண்டாயின. அவன் அருகில் நடக்கும்போது, ஏதோ உலகையே ஜெயித்துவிட்ட உவகை தோன்றுவதை மறைத்துக் கொள்ள முடியவில்லை.

மணல் பரப்பில் உட்கார்ந்தார்கள். நடந்த கதைகளைச் சொல்லி முடித்தாள் சொர்ணா.

''ஆமாம் ரமேஷ்! அன்னிக்கு எங்கப்பாவும் அம்மாவும் திடுக்கிட்டுப் போயிட்டாங்க... நான் மேற்கொண்டு படிக்கப் போறேன், சொந்தக் கால்லே நிக்கற தகுதி வந்த பிறகுதான் கல்யாணம்னு சொல்லிட்டேன்.''

''உங்கப்பா என்ன சொன்னார்?''

''அவர் பிரெண்டோட பையனாம். பேரு ராம்குமாராம். அவனை நான் கல்யாணம் பண்ணிக்கணுமாம். முடியவே முடியாதுன்னுட்டேன்.''

''ஏன் சொர்ணா?'' ஏதும் புரியாதவனைப் போல் அவன் கேட்டான்.

''அது... அது... வேற ஒண்ணும் இல்லை ஒரு வேலை தேடிக்கிட்டு பிற்பாடுதான்னு தீர்மானம் பண்ணியிருக்கிறேன் இல்லியா? அதனாலேதான்!''

பல கம்பெனிகள் ஏறி இறங்கிய கதையை விவரித்தாள்.

"அதனாலே, ஒரு சவால் போல, ஒரு வேலைக்குப் போயே தீர்றதுன்னு முடிவு பண்ணிட்டியாக்கும்? நல்ல காலம்! இல்லேன்னா, அப்பா சொன்ன பையனைக் கட்டிக்கச் சம்மதம் குடுத்திட்டிருப்பே, இல்லியா?"

ஒன்றுமே தெரியாதவனைப் போல, அப்பாவியாய் ரமேஷ் கேட்டான்.

"அது... அது இல்லேன்னாலும் சம்மதிச்சிருக்க மாட்டேன்."

"ஏன் சுந்தரி? சொல்லேன்."

"ஒன்னுமே புரிஞ்சுக்கத் தெரியாத ஒரு மக்குப் பையன் மேலே இல்லே ஆசை வெச்சிட்டேன்?"

"அடாடா! உன்னை மாதிரி ஒரு அழகுத் தேவதை போயும் போயும் ஒரு மக்குப் பையன் மேலே ஆசை வைக்கலாமா? அப்படின்னா, தேவதை மக்குத் தேவதை போய்!"

சொர்ணா முறுவலித்தாள்.

'சரி சரி, யார் அந்த மக்குப் பையன் சொல்லு!"

குறும்பு அவன் கண்களில் கூத்தாடியது.

அவன் விரல்களைப் பிடித்து நெறித்தாள் சொர்ணா. உடனே தன் செயலுக்கு நாணி, தலை குனிந்தாள்.

ஜிலுஜிலுவென்று வீசும் கடற்கரைக் காற்றில் அவள் முன்னுச்சிக் குழல் கற்றைகள் அடங்காத சிறு பிள்ளைகளாய் ஆட்டம் காட்டிக் கொண்டிருந்தன.

கண்களில் கடல் அளவு தாபத்தைத் தேக்கிய ரமேஷ் அவளின் அண்மையை ரசித்தவாறு அமர்ந்திருந் தான். எப்போதுமே இந்தச் சௌந்தர்ய தேவதை என்

அருகிலேயே இருக்கிற பாக்கியம் கிடைக்குமா? இந்த இளம் பூவின் உள்ளத்தில் ஒளிந்திருப்பது என்ன? என் நினைவா?

"என்ன ரமேஷ், என்ன யோசிக்கிறீங்க?"

"நீ பக்கத்திலே இருக்கிறப்ப, எனக்குன்னு ஒரு மனசு, எனக்குன்னு ஒரு யோசனை ஏது சொர்ணா?"

"நீங்க இன்னிக்குச் சொல்றீங்க... உங்களைப் பாத்த அன்னிக்கே..."

வெட்கப்பட்டு முகத்தை மூடிக் கொண்டவள், மெல்ல விரல் நகர்த்தி, அவன் முகத்தை ஏறிட்டாள்.

பத்து செண்பகப் பூக்கள் கூடி ஒரு பங்கயத்தை மறைத்தது போல ரமேஷுக்குத் தோன்றியது.

அந்தச் செண்பகப் பூக்களைப் பரவசத்தோடு தன் கைகளில் ஏந்திக் கொண்டான் ரமேஷ்.

"இந்தப் பூவிரலைப் பிடிக்கிற பாக்கியம் எனக்குக் கிடைக்குமா சொர்ணா?"

கண்கள் கனிய ரமேஷ் கேட்டபோது, சொர்ணா சிலிர்த்துப் போனாள். ஜிவ்வென்று காற்றைக் கிழித்துக் கொண்டு பறப்பதைப் போலிருந்தது.

இது என்ன புது அனுபவம்? பரவசமாக, அதே நேரம் மூச்சுத் திணறலாக...

"சொல்லு சொர்ணா..."

"என்ன சொல்றது ரமேஷ்? இந்தப் பிறவியிலே மட்டுமில்லே, இனி எந்தப் பிறவியிலுமே நீங்கதான் என் புருஷன்! நான்தான் உங்க மனைவி!"

"உங்க அப்பா வேற இடத்துலே பார்க்கிறாரே!"

"ம்கூம். அப்பா எண்ணத்துக்கு ஒப்புக்கவே மாட்டேன். போராட்டம்தான்..."

கண்கள் கலங்க அவளையே பார்த்தபடி அமர்ந் திருந்தான் ரமேஷ். பெற்று வளர்த்த அப்பாவையே எதிர்க்கத் தயாராகிறாள் என்றால், தன் மீது எவ்வளவு காதல் கொண்டிருப்பாள்!

பேச்சே இல்லாமல், ஒருவரை ஒருவர் பார்த்தபடி நீண்ட நேரம் அமர்ந்திருந்தார்கள்...

"யார் அது?"

"என்னதுப்பா?"

"இல்லே... பீச்சுலே எந்த நாயோடயோ போய்க் கிட்டிருந்தியே, யார் அவன்?"

ராஜலிங்கம் சீறினார். வசந்தி ஓரமாய் நின்றிருந் தாள். அவளின் தவிப்பு முகத்திலேயே துல்லியமாய்த் தெரிந்தது.

சொர்ணா தட்டுத் தடுமாறி, எல்லா விவரங்களை யும் சொல்லி முடித்தாள்.

"இதோ பார் சொர்ணா! தீர்மானமாச் சொல் றேன். நீ உலகம் புரியாத சின்னப் பொண்ணு. உனக்கு ஒண்ணும் தெரியாது. என் ஃப்ரெண்டு பையன் ராம் குமார்தான் உனக்கு ஏத்தவன். புரியுமா? கண்டபடி மனசை அலையவிடாதே! வசந்தி, சொல்லி வை!"

அவள் தந்த முகவரி அட்டையைக் கிழித்துப் போட்டுவிட்டு, சினம் கொண்ட சிறுத்தையாக அவளை ஓரக் கண்ணால் உறுத்து நோக்கினார்.

சொர்ணா விக்கித்து நின்றாள்.

## 12

பத்துப் பதினைந்து நாட்களாக, அப்பா சரியாகத் தன்னுடன் பேசாதது சொர்ணாவுக்குச் சொல்ல முடியாத வேதனையாக இருந்தது.

எத்தனை செல்லம் கொடுக்கிற அப்பாவாக இருந்தாலும், கல்யாணம் என்று வருகிறபோது, சராசரி அப்பாவாகத்தான் மாறிப் போய்விடுவார்கள் போல் இருக்கிறது!

சொர்ணாவுக்கு எரிச்சலாக இருந்தது. ரமேஷைச் சந்திக்கிறபோதெல்லாம் அப்பாவின் புறக்கணிப்பைப் பற்றியே பேசினாள். வசந்தியிடமும் அதைப் பற்றியே சொல்லிச் சொல்லி ஆதங்கப்பட்டாள்.

சிறுமியாக இருந்த நாளிலேயே உலக அரசியலை விவரித்தபடி உலாச் செல்கிற அப்பா—

'அப்பாக் குட்டி' என்று பதினேழு வயதில் ஓடிவந்து கழுத்தைக் கட்டிக் கொண்டு தொங்கினாலும் கோபிக்காத அப்பா—

"என் பொண்ணு அறிவுக்களஞ்சியம், தெரியுமா?" என்று நண்பர்களிடம் பெருமை அடித்துக் கொள்கிற அப்பா—

பத்து நிமிடங்கள் காணோம் என்றாலும் பதை பதைத்துப் போகிற அப்பா—

சொர்ணா பெருமூச்செறிந்தாள். ம்கூம்... இதற்கொரு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும். அப்பாவோடு

பேசாமல், அப்பாவின் பாசமழையில் நனையாமல் உயிர் வாழ முடியாது. வாழவே முடியாது.

ரமேஷின் கம்பீரத் தோற்றம் கண் முன்னே வந்து நின்றது. "அப்படீன்னா நம்ம காதல்! சொர்ணா, இந்தப் பிறவியில் மட்டுமில்லே, 'இனி எந்தப் பிறவியி லேயும் நான்தான் உங்க மனைவி, நீங்கதான் என் புருஷன்'னு சொன்னியே!"

சொர்ணா முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டாள். விடுவிடு என்று அப்பாவைத் தேடிப் போனாள். அவளைப் பார்த்ததும் அப்பாவின் கண்கள் வேறு திசையில் திரும்பிக் கொண்டன.

"அப்பா... இந்தப் பாராமுகம் தாங்கலைப்பா. எனக்கு நீங்கதாம்ப்பா வேணும். எப்பவும் போல என் கிட்டே பேசணும். ஏம்ப்பா? எப்படிப்பா என்னோட பேசாம இருக்க உங்களாலே முடியுது?"

அவர் தோளில் சாய்ந்து கொண்டவள் மெல்ல விசும்பி அழத்தொடங்கினாள். ராஜலிங்கம் ஒரு நிமிடம் திகைத்துப் போனவர் சுதாரித்துக் கொண்டார். ஆதரவாக அவளை அணைத்துக் கொண்டார்.

"சொர்ணா, என்னடா இது? சின்னப் புள்ளை மாதிரி இப்படி அழறே? சேச்சே!"

"என் மேலே இருந்த கோவம்லாம் போயிட்டு தாப்பா? அப்பா, எனக்கு ரமேஷும் வேண்டாம். ராம் குமாரும் வேண்டாம். ஏன், கல்யாணமே வேண்டாம். நான் முதல்லே ஒரு வேலையிலே சேரணும். சொந்தக் கால்லே நிக்கற தகுதியை வளத்துக்கணும்."

"மக்குப் பெண்ணே, ஏன் வேற கம்பெனியிலே சேரணும்? பேசாம நம்ம கம்பெனியிலே சேரு. வேலையெல்லாம் ரொம்ப கஷ்டமாத்தான் இருக்கும் பரவாயில்லையா?"

ஒரு கணம் யோசித்தாள் சொர்ணா. "சரிப்பா, சேர்றேன். ஆனா, நீங்க என் கல்யாணத்தைப் பத்தின பேச்சையே எடுக்கக் கூடாது."

"ஓ.கே. உனக்கு முதலாளி மகள்ங்கற சலுகை கிடைக்காது. கடுமையா உழைக்க வேண்டி இருக்கும். கல்யாணப் பேச்சை மூணு வருஷத்துக்கு எடுக்க மாட்டேன். சரியா?

தற்காலிகமாவது பிரசினை ஓயட்டும் என்கிற நினைப்பில் வேக வேகமாகத் தலையை ஆட்டினாள் சொர்ணா.

"அப்படின்னா உக்காரு. ஷேர்னா என்ன, ஷேர் நிலவரம் எப்படி, நம்ம கம்பெனியின் வொர்க்கிங் கேபிடல் எவ்வளவு, டர்ன் ஓவர் எவ்வளவு, எந்த எந்த டிபார்ட்மென்ட்டுக்கு என்னென்ன பொறுப்பு, போனஸ் கணக்கு என்ன-எல்லாத்தையும் பத்திச் சொல்லித் தர்றேன். நோட்ஸ் எடுத்துக்கோ."

கல்லூரி நாளில், அப்பா சொல்ல வந்தால், 'அய்யோ... போர்,' என்று காதைப் பொத்திக் கொண்டு ஓடும் சொர்ணா புதிய உற்சாகத்தோடு இப்போது எதிரில் உட்கார்ந்தாள்.

"ம்... பரவாயில்லை. கெட்டிக்காரியாத்தான் பிடிச்சுக்கறே. நீ ஆபீஸ் வர ஆரம்பிச்சி ஒரு மாசம் இருக்குமா?"

"ம்... இருக்கும்ப்பா."

''சரி, பாம்பே ஹார்பர்லே சரக்கை எடுக்க முடியலை. கிளியரன்ஸ் சர்டிபிகேட் கிடைக்கறதிலே ஏதோ பிரச்சினையாம். மானேஜர் இப்போ பாம்பேலே தான் இருக்கிறாரு. அவருக்கு ஃபோன் பண்ணி, என்ன ஏதுன்னு விசாரிச்சி, கொண்டுவர ஏற்பாடு பண்ணிடு, என்ன?''

''ஓ.கே. டன்.'' கிளம்ப இருந்தவளைத் திரும்ப அழைத்தார்.

''உனக்கு ஃபோன் சொர்ணா!''

''ஹலோ...''

குரலைக் கேட்டதுமே சொர்ணாவுக்கு ரமேஷ் என்று தெரிந்துவிட்டது. விழிகளில் குபுக்கென்று கண்ணீர் கிளம்பியது.

ஏதும் பேசாமல், வைத்துவிட்டு, தடுமாறியபடியே வெளியில் போனாள். உள்ளம் ஊமைப் புலம்பலாய்ப் புலம்பித் தீர்த்தது.

''ஏன் சார், கொச்சி பார்ட்டி என்ன சொல்றாங்க?''

''ஒரு வாரத்துக்கு முன்னாடியே டிராப்ட் எடுத்து அனுப்பிட்டாங்களாம் மேடம்.'' ஹெட்கிளார்க் மரியாதையாகப் பதில் சொன்னார்.

''அப்படின்னா, வந்திருக்கணுமே! விசாரிங்க நம்ம ஆபீஸ்லே.''

''சரிங்க மேடம்.''

''மெட்ராஸ் ஹார்பருக்குப் பணம் கட்டணுமே! இன்னும் ரெண்டுநாள்தானே இருக்குது? ஏற்பாடு பண்ணிட்டீங்களா?''

"நாளைக்குக் கட்டிக்கலாமேன்னு..."

"கடைசி நாள் வரைக்கும் ஏன் சார் காத்திருக் கணும்? இன்னிக்கே கட்டிடலாமே?"

"சரிங்க மேடம். பெங்களூர்லேருந்து விசால் ஏஜன்சி நம்மகூட டிரான்சாக்ஷன் வெச்சிக்க ஆசைப் படறாங்க..."

"போன வாரம் சொன்னீங்களே, அதுதானே? நான் விசாரிச்சிட்டேன். அந்த விசால் ஏஜன்சி நமக்குக் கொடுத்திருக்கிற அட்ரஸ் பொய் அட்ரஸ். சொன்ன அட்ரஸ்லே ஆபீசே இல்லை. அவங்களை நம்பி, எப்படி டிரான்ஸாக்ஷன் வெச்சிக்கிறது?"

"அது வந்து..."

"நீங்களும் இனிமே புதுக் கம்பெனின்னா, நல்லா விசாரிங்க. பெரிய அமவுண்ட்டா ஒண்ணுலே மாட்டி னாலும் சரி, பிரசினைதான்!"

ஹெட்கிளார்க் வெளியே நடந்தார்.

அப்பப்பா... இந்தப் பெண் இவ்வளவு கெட்டிக்காரி யாக இருக்கிறாளே! அதற்குள் விசாரித்திருக்கிறாளே! ஏதோ பணம் கொடுத்தானே என்று, வாங்கியது எவ்வளவு பெரிய தப்பாகிவிட்டது! நல்ல வேளை, என் சீட்டு கிழியவில்லை! அப்பா...மூன்று நான்கு மாதங் களிலேயே பளிச்சென்று ஆபீஸ் விஷயங்களைப் புரிந்து கொண்டிருக்கிறாளே!

ராஜலிங்கம் புன்னகைத்துக் கொண்டார். இன்னும் ஓரிரு ஆண்டுகளிலேயே, சொர்ணாவால் தனியாகக் கம்பெனியை நிர்வகிக்க முடியும் என்கிற கணிப்பே பெருமிதம் தந்தது.

செயல்திறன் இருந்தால், தடைக் கற்களைப் படிக் கற்களாக்கிச் சாதித்துக் காட்ட முடியும்தான்! ஆண் குழந்தையாய் இருந்தால் என்ன பெண் குழந்தையாய் இருந்தால் என்ன? எல்லாம் ஒன்றுதான்!

கணுக்கால் இலேசாக வலித்தது. வலிக்கட்டும்! அந்த விபத்து நடந்ததும் நல்லதற்குத்தான். எத்தனை வகையான நன்மைகள்! எல்லா அனுபவங்களும் ஒரு நன்மையைத் தானே செய்துவிட்டுப் போகின்றன!

பார்ட்னர் உள்ளே நுழைந்தார்.

''ஏன் ராஜலிங்கம்? உங்க பொண்ணு பிரமாதமா அட்மினிஸ்ட்ரேஷன் பண்றா பார்த்தீங்களா? அவ கிட்டே அந்தத் திறமை இயல்பாவே இருக்கு. சரி, ஒரு நல்ல நாள் பாத்தீங்கன்னா, என் பிள்ளை ராம்குமாருக்கும் சொர்ணாவுக்கும் ஒரு கல்யாணத்தை முடிச்சிடலாம்!''

''பார்க்கலாம்... அதுக்கென்ன?'' தயங்கினார் ராஜலிங்கம்.

''அதெல்லாம் எதுக்கு வீண் பேச்சு? பார்ட்னர் ரூம்லே ராம்குமார் இருப்பான். நான் வரச் சொல்லியிருக்கிறேன். நீயே பாரு! அவன் என்ன முட்டாளா? மூர்க்கனா? கையில்லையா? காலில்லையா? நீயே பாரு!''

பொரிந்து தள்ளிய அப்பாவை வெறித்து நோக்கினாள் சொர்ணா.

சரி, அவனிடமே தன் விருப்பமின்மையைச் சொல்லி விடலாம். வரவர இந்த அப்பாவுக்குப் பிடிவாதம் அதிகமாகி விட்டது.

எரிச்சலுடன் பார்ட்னர் அறைக்குள் நுழைந்தாள் சொர்ணா. ஒரு வாலிபன் சுழல் நாற்காலியைத் திருப்பி அமர்ந்து வானத்தை ரசித்துக் கொண்டிருந்தான், கைகளைத் தலைக்கு மேல் போட்டபடி.

''மிஸ்டர் ராம்குமார்!''

அவன் திரும்பினான். என்னது... என்ன ஆச்சரியம்! எப்படி ரமேஷ் உள்ளே வந்தார்? ராம்குமார் வர வில்லையா?

''வந்து ராம்குமார்னது...''

''ஓ சொர்ண சுந்தரி, என் பேர்தான் ரமேஷ் ராம்குமார்.''

''உங்ககிட்டயே முன்ன நான் சொன்னனே! எங்கப்பா ராம்குமாரைக் கல்யாணம் பண்ணிக்கச் சொல்றார்னு. அப்பக்கூட நீங்க சொல்லலையே?''

''ஏன்னா, உங்கப்பா சொல்ல வேண்டாம்னாரே!''

''வ்வ்வ்வாட்? எங்கப்பாவா?'' அதிர்ந்து போனாள் சொர்ணா.

''ஆமாம் என் குட்டி ராணி! உன் காதலுக்கு உடனே பச்சைக் கொடி காட்டிட்டா ஒரு த்ரில் இருக்கா தாம். அதுக்குத்தான் இந்த நாடகம். நாம் பஸ்லே சந்திச்சமே. மாதங்கிப் பட்டணத்துலே, அதுக்கப்புறம் தெரிஞ்சது. உங்கப்பாவும் எங்கப்பாவும் சேர்ந்து பிஸினஸ் ஆரம்பிக்கப் போறாங்கன்னு. உங்க அப்பா கிட்டயே ரகசியமா வந்து கேட்டேன். அவர்தான் சொன்னாரு, 'என் பொண்ணுக்கு அதிசயமா வேலை பாக்கற ஆசை வந்திருக்குது. நம்ம கம்பெனியிலே வேலைக்குச் சேர்த்துக்கிட்டு, பயிற்சி கொடுக்கலாம்னு இருக்கிறேன்!

அப்பத்தானே உனக்கும் நாளைக்கு ஒத்தாசையா இருக்கும்'னாரு. எங்கப்பாவுக்குக் கூடத் தெரியாது.''

''இவ்வளவு நடந்திருக்குது. எனக்கு ஒண்ணுமே தெரியலியே. ச்சீ! ரொம்ப மோசம் எங்கப்பா. பாருங்களேன், எப்படில்லாம் திட்டினார் தெரியுமா?''

''சேச்சே! என் மாமானாரை ஒண்ணும் சொல்லாதே! இந்த டிராமாவை எவ்வளவு அட்டகாசமா டைரக்ட் பண்ணாருங்கறே? அடிக்கடி அவரை வந்து பார்த்துப் பார்த்து, இப்ப நாங்க ரெண்டு பேரும் ரொம்ப ஃப்ரெண்ட்ஸ் ஆயிட்டோம் தெரியுமா?''

சொர்ணா இன்னும்கூட வியப்பிலிருந்து மீளவில்லை.

ரமேஷ் கைகளை நீட்டி அவளை வாவென்று அழைத்தான். சொர்ணா கனவில் நடப்பவளைப் போல மிதந்து வந்து அவன் அருகில் நின்றாள்.

வலிய இழுத்து அணைத்துக் கொண்டு, அந்த இளம்பூவின் கன்னத்தில் அதரம் பதிக்க முயன்றான். அவள் நாணிச் சிவந்து, பிடியிலிருந்து விலக முற்பட்டாள்.

ஏதோ நினைவுக்கு வந்தவனாக, ரமேஷ் சிரிக்க ஆரம்பித்தான். வினாக் குறியை விழியில் தேக்கிப் பார்த்தாள் சொர்ணா.

''அது இல்லே சொர்ணா. 'அண்டங்காக்கா கர்ருன்னிச்சாம். ஆம்படையானைக் கட்டிப் பிடிச்சிக்கிட்டாளாம்' கதையைக் கூட உங்கப்பா சொல்லியிருக்கார். தெரியுமில்லே? உங்கம்மா மாதிரியே, நீயும் அண்டங்காக்கா கத்தினாத்தான் ஆம்படையானைக் கட்டிப் பிடிப்பியா?''

"சீச்சீ! இந்த அப்பா பாரேன், எதைத்தான் உங்க கிட்ட சொல்றதுன்னு இல்லாமே..."

விரல்களால் முகத்தை மூடிக் கொண்டவளின் அருகில் சென்ற ரமேஷ், அவர்களின் அறுபதாம் கல்யாணத்தன்றும் நினைவில் இருக்கப் போகிற முதல் முத்தத்தைத் தர, சண்பகப்பூ விரலை விலக்கி, பலாச் சுளை உதட்டை நோக்கிக் குனிந்தான். ஜிவ்வென்ற புது ரத்தம் உடம்பின் சகல அணுக்களிலும் பாய, மெல்லிய நடுக்கத்துடன் கண்களை மூடிக் கொண்டாள் சொர்ணா.

□□□

# நாளை நான் ஜெயிப்பேன்...

தியாகு தீவிரமாகச் சிந்தித்தபடியே நடந்து கொண்டிருந்தான்.

கொதிக்கும் வெயிலில் தார் இளகி உருகிக் கொண்டிருந்தது. அந்தத் தார் காலில் ஒட்டிக்கொண்டு விடாமல் இருக்கக் கோணியைச் சுற்றிக் கட்டிக்கொண்டு, மும்முரமாக வண்டியை இழுத்துக்கொண்டிருந்தான் ஒரு தொழிலாளி

கரிய உடலில் வியர்வை முத்துக்கள் சூரிய ஒளியில் பளபளவென்று மின்னின. தன் உடல் வலுவையெல்லாம் ஒன்று திரட்டி, இரு கைகளிலும் மின்சார வலிமையைத் தேக்கிக் கொண்டவனாய், ஒரு கதக்களி நாட்டியக்காரனின் தேர்ந்த லாகவத்தோடு கால்களைத் தாளம் மாறாமல், அழுத்தம் திருத்தமாகப் பாதையில் பதித்து நடந்தான் அவன். வண்டியிலே இரும்புப் பலகைகள் ஏற்றப்பட்டிருந்தன.

தியாகுவுக்கு அவனைப் பார்க்கப் பார்க்கப் பாவமாக இருந்தது.

என்ன இவனுக்கு ஒரு இருபத்தி ஐந்து வயது இருக்குமா? இந்த வயதில் அவன் தன்னைத் தானே சுய விமர்சனம் செய்யக் கற்றிருப்பானா?

அதோ! அந்த மாருதியின் பக்கத்தில் நிற்கிறானே சோனியாய் ஒரு ஜீன்ஸ் இளைஞன்! அவன் தன் பக்கத்தில் நிற்கும் ஒரு பாப்தலைச் சிங்காரிக்கு இளநீர் வாங்கிக் கொடுத்தபடி, குழைந்து, குழைந்து பேசுகிறானே, அவன் குழைவதும், நெளிவதும் இவன் மனத்தில் சலனத்தை ஏற்படுத்தாதோ?

இவன் வண்டியை இழுக்கும்போதே நினைக்க மாட்டானா?

"என் வயதுதானே இருக்கும்? இவனுக்கு என்ன மாதிரியான வாழ்க்கை? நான் மட்டும் ஏன் இப்படி அல்லாட வேண்டும்? கஞ்சியும் கூழும் கூட வயிறாரக் கிடைக்க மாட்டேன் என்கிறதே! அதோ அந்தச் சோனிப்பயல் குடிக்கிற இளநீர் எனக்கு அம்மை போட்டிருக்கிற நேரத்தில்தானே கிடைக்கிறது? நானாவது உழைக்கிறேன்! இவனைப் பார்த்தால் அந்த மாதிரி உழைக்கிறவனாகவும் தெரியவில்லையே! சூம்பிக் கிடக்கிற கைகளை மறைக்க எவ்வளவு பெரிய சட்டையைப் போட்டிருக்கிறான் பார்? ஒரு குவளை தண்ணீர் கூட ஆள் கொண்டு வந்து கொடுத்தால்தான் குடிப்பான் போலிருக்கிறது..."

இந்த ரீதியில் வண்டி இழுக்கிற இளைஞன் நினைத்துப் பார்ப்பானா?

தியாகு திரும்பிப் பார்த்தான். வண்டிக்காரன் தெரு முனைக்குப் போய் விட்டிருந்தான். ஜீன்ஸ் இளைஞன் விழுந்து விழுந்து சிரித்தபடியே, காரை ஸ்டார்ட் செய்து கொண்டிருந்தான்.

ம்! பக்கத்தில் பெண் இருந்துவிட்டால், இப்படிச் சில பேருக்கு ஏக உற்சாகமாகி விடுகிறது... அவன்

சொல்லுவதற்கெல்லாம் சிரித்துக்கொண்டு... கையில் வேறு எக்கச்சக்கமாய்ப் பணம்! உன் பாடு ஜாலிதான் வாலிபா! கொண்டாடு...

தியாகு முனகிக் கொண்டான். அக்கினி நட்சத் திரம் ஆரம்பமாகி இருந்தது. சூரியனின் கதிர்கள் மண்டையைத் துளைத்துக்கொண்டு உள்ளே இறங்கின..

போதும் போதாதற்குச் சிந்தனைகள் ஏற்படுத்து கிற சூடு வேறு!

கைக்குட்டையைத் தேடி எடுத்து, முகத்தைத் துடைத்துக் கொண்டான். கைக்குட்டை நசநசவென்று ஈரமானது...

உள்ளத்திற்குள் ஒரு தீ ஏற்கனவே கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்தது. இந்த வெம்மையில், இந்த அவலத்தில் அது இன்னும், இன்னும், இன்னும் அதிக மாயிற்று.

**''புத்தம்புதுப் பூப் பூத்ததோ**
**எண்ணங்களில் தேன் வார்த்ததோ**
**மொட்டவிழ நாள் ஆனதோ**
**சொல்லடி என் செல்லக்கிளியே''**

பள்ளி மாணவியைப் பார்த்து ஒரு பையன் கர்ண கடூரமான குரலில் பாடிக்கொண்டே, சைக்கிளில் தாண்டிப் போனான்.

ம்! இன்னும் கல்லூரிப் படிப்பை இவன் முடிக்க வில்லை. முடித்துவிட்டு வேலை, வேலை, வேலை என்று நாயைப் போல ஒரு ஒரு இடமாக ஓடிஓடித் திரும்பும் போது, சுத்தமாகப் பாட்டு மறந்து போய்விடும்! ''தண்டச் சோறு'' என்று திட்வதற்கும் யாராவது ஒருவர் வீட்டில் கடுகடுத்த முகத்தோடு காத்துக் கொண்

டிருக்கிறார்கள் என்றால், எதிரிலே பெண் வருவதும் தெரியாது!

தியாகு எரிச்சலுடன் காலருகில் கிடந்த சிறு கல்லை உதைத்துத் தள்ளிவிட்டு, நடக்கத் தொடங்கினான். சின்ன வயதில் அம்மாவைக் கேட்ட கேள்விகள் என்றைக்கோ பார்த்த திரைப்படக் காட்சிகள் போல மசமசப்பாக ஞாபகத்துக்கு வந்தன.

''அம்மா! அம்மா!''

''என்னடா கண்ணு?''

''ஏம்மா? ''உலகத்திலே நல்லது பண்றவங்களுக்கு நல்லதுதான் நடக்கும்''னு அன்னிக்குச் சொன்னே இல்லியா?''

''ஆமாம்! ராஜா! அதுக்கென்னடா இப்போ?''

''சுந்தரம் மாமா எல்லாருக்கும் நல்லதுதானே பண்ணிக்கிட்டிருந்தாரு. அவருக்கு ஏம்மா நல்லது நடக்கலே?''

அம்மா மவுனமாய் நின்றாள்.

''அது வந்து தியாகு... வந்து...''

''சொல்லும்மா! மாமா ஒண்ணும் கெட்டவர் கிடையாதே! நல்லவராச்சே! அன்னிக்குக் குடிசைங்க தீப்பத்தி எரிஞ்சப்போ மாமாதானே போயி அணைச்சாரு? படிக்கத் தெரியாதவங்களையெல்லாம் கூப்பிட்டு வெச்சிக்கிட்டு, பாடம் சொல்லித் தருவாரு இல்லே! அப்புறம் ஏம்மா, மாமாவுக்கு அப்படி ஆச்சி?''

மாமாவின் பொதுநலச் சேவையே அவரின் உயிருக்கு இறுதியாகி விட்டது என்றால், சிறுவனுக்குப் புரியுமா என்ன?

அம்மா குழம்பித் தவித்தாள்.

அவள் அண்ணன் சுந்தரம் படிப்புச் சொல்லித் தருவதோடு நின்றாரா என்ன?

கள்ளச் சாராயம் காய்ச்சியவர்களைக் கண்டித்தார். தெருவோடு போகிற குடும்பப் பெண்ணைக் குடிவெறியில் அவர்கள் கூட்டத்தைச் சேர்ந்த ஆள் கையைப் பிடித்து இழுத்தபோது, தெரு முழுக்கவே வேடிக்கை மட்டுமே பார்த்துக்கொண்டு நின்றதே! அது போல அவர் நின்றாரா? என்ன?

அவ்வளவு ஏன்? கட்டிய மனைவி அந்த அயோக்கியனின் பிடியில் சிக்கிக் கதறும் போது, கணவனே கூட அல்லவா, தயங்கித் தயங்கி ஓரம் ஒதுங்கிக் கொண்டான்?

"அய்யய்யோ! படுபாவிப் பசங்க! தனியா வந்தா இந்தப் பொண்ணு மாட்டிக்கிட்டுது?"

ஒருவன் அங்கலாய்த்தான். மற்றவன் தொடர்ந்தான். "அடாடா! நாசம் பண்ணிடுவாங்களே! போன மாசம் கூட இப்படித்தாம்ப்பா நடந்தது! ஞாபகம் இருக்கில்லே!" "இந்தப் பொண்ணு ஒண்ணும் தனியா வர்லியே! இதுவும், இதும் புருசனுமாப் பேசிக்கிட்டு வர்றதைப் பச்சையப்பன் கடைக் கிட்டே பார்த்தனே! ஆங்... இதோ இங்கே நிக்கற இந்த ஆளு இல்லே அந்தப் பொண்ணோட புருசன். ஏன்யா? என்னாய்யா நீ மரமாட்டமா நிக்றே?"

"வந்து... நானு... நானு ஒத்தை ஆளு என்னய்யா பண்ண முடியும்? அவனுங்க நாலஞ்சி பேரு இருக்காங்களே!"

''த்தூ... நீயெல்லாம் ஒரு புருசன்! ஒனக்கெல்லாம் ஒரு மீசை!''

ஒரு பெண்மணி அடக்க முடியாத ஆத்திரத்துடன் காறித் துப்பினாள்.

மார்புச் சேலை தரையில் விழுந்து புரள, அலங் கோலமாக நின்றாள் அவள். கண்களில் மிரட்சியும், பயமும் தெரிந்தன. ஒருவன் நெட்டித் தள்ளினான்.

''ஏங்க! காப்பாத்துங்க... அய்யோ...என்னங்க!''

மகாபாரதத்துக் கதை திரும்ப இந்த மண்மிசை நடந்தது. விலங்குகள் போல அவர்கள் ஆர்ப்பரிக்க புதிய பாஞ்சாலியாக அவள் கதறினாள்.

''ஏங்க! ஏங்க!'' அவள் கதறினாள். ''என்னடி கத்தறே?'' ஒருவன் அவள் முகத்தில் ஓங்கிக் குத்தினான். வாயோரம் சிவப்பின் தீற்று கிளம்பியது.

வலியில் துடித்த அந்த நொடியிலும் அவள் கண்கள் கணவன் பக்கமே அலைந்தன. கைப்பிடித்த கணவன் வந்து மீட்டுக் கொள்ளமாட்டானா என்கிற தவிப்பும் ஆதங்கமும் அவள் ஓங்கிக் குரல் கொடுத்துக் குமுறிய விதத்திலேயே தெரிந்தன. அவள் கணவன்தான் கோழைத்தனத்தால் தலையைக் குனிந்து கொண்டான்.

வெறுப்பும், விரக்தியும் சூழ, அவள் கூட்டத்தை நம்பிக்கையோடு பார்த்தாள்.

''அய்யா! கூடப் பொறந்த பொறப்பா நினைச்சிக் காப்பாத்துங்க அய்யா! தயவு பண்ணுங்கய்யா!''

''ஏண்டி! நாங்க தயவு பண்றோம்னு சொல்றோம். வேண்டாம்ங்கறே! அவனுங்களைப் போயிக் கெஞ் சறியே! எதுக்குடி அந்தப் பனாதி நாய்ங்களைக்

கூப்பிட்றே? நாங்க இருக்கிறோம்டி! நீ போறும் போறும்னு சொல்றவரைக்கும் தயவு பண்றதுக்கு...''

ஒருவன் விகாரமாகச் சிரித்தபடியே, தோளைப் பற்றி இழுத்தான். மக்கள் தயக்கத்துடன் வேடிக்கை பார்த்தபடி நின்றிருந்தார்கள். அந்த நாலைந்து பேரை நொறுக்கித் தள்ள அந்த நூறுபேர், இருநூறுபேருக்கு ஆண்மை இல்லாதுதான் பெரிய கொடுமை.

அப்போதுதான் சுந்தரம்—அந்த வழியாக வந்து கொண்டிருந்தவர் இந்தக் கொடுமையைக் கண்டு திகைத்து நின்றுவிட்டார்.

இது என்ன இருபதாம் நூற்றாண்டா? நடப்பது என்ன ஆயிரத்துத் தொளாயித்துத் தொண்ணூற்று நான்குதானே! கற்கால மனிதர்கள் போல அந்தக் 'கிரிமினல்'கள் கொக்கரிப்பதும், நல்லவர்கள் துடிப்பதும் ச்சே! என்ன அநாகரிகம்?

அந்தப் பெண்ணின் புடவை முழுவதுமாகப் பூமியைச் சரண் அடைந்து, காற்றில் படபடத்து அங்கு மிங்குமாக அலைமோதிக் கொண்டிருந்தது.

''இந்தப் பாவிப் பெண் நிராதரவாக நிற்கிறாளே! நான் இருந்த வரையில் கொஞ்சமேனும் பாதுகாப்பு கொடுத்தேன்; அவள் மானத்தைக் காத்தேன்! அய்யோ! இனி அவள் என்ன ஆவாள்?'' என்று தரையில் விழுந்து புரள்வதைப் போலச் சுந்தரத்துக்குத் தோன்றியது.

அவ்வளவுதான்! பாய்ந்தார். ஏற்கனவே இவர் மீது அவர்களுக்குக் கடுப்பு! தீர்த்துவிட்டார்கள்—

ஆறு மாதங்களாக நடக்கிற போராட்டம்தானே! அதிலும் ஒன்றிரண்டு மாதங்களாகச் சுந்தரத்தின் தலையீடு அவர்களுக்குப் பிடிக்கவே இல்லை.

ஒருவன் போய் நேராகத் தலைவரைப் பார்த்துக் கத்தினான்.

"என்னவே பெரிய்ய காந்தின்னு நெனப்பு இந்த மனிசனுக்கு. ஏன் தலைவரே! நான் போய்க்கினே இருக்கிறேன். இந்தாளு எதுத்தாப்பலே வந்தாரு. நம்பளுக்கு இன்னா வந்ததுன்னு, நான் பாட்டுக்குப் போய்க்கினே இருந்தா, இந்த ஆளு நிறுத்தி வெச்சிக் கினு நம்ப கையிலே அட்வைஸு பண்ண ஆரம்பிச்சிட் டாருப்பான்னா... கள்ளச் சாராயம் காச்சறது தப்பாம் —ரொம்பப் குடும்பம் பாயாப் போவுதாம்! சரியான ராவடி! 'சர்தான் நிறுத்துய்யா'ன்னுட்டு வந்துட்டேன்."

ஆட்கள் ஒன்று கூடி நிறுத்திவிட்டார்கள். இதைச் சொன்னால் தியாகுவுக்குப் புரியுமா? தாயின் மனம் குழம்பித் தவித்தது. உயிரை இழந்த அண்ணனை எண்ணிக் குமுறியது.

ஆனால் தியாகுவுக்கு எல்லாமே புரிந்திருந்தது. தன் மாமா நல்லவர் என்பதும், சமூக விரோத சக்திகள் அவரைக் கொன்று போட்டுப் பழிதீர்த்துக் கொண்டன என்பதும் நன்றாகவே புரிந்திருந்தது.

மாமாதான் எப்படி விழுந்து கிடந்தார்? நட்ட நடுத் தெருவில், கழுத்து வெட்டுப்பட்டு, குளம் போல் குருதி கொப்பளித்து வர, மாமா அலங்கோலமாகக் கிடந்தார்.

அவருடைய வெள்ளை வேட்டியிலும், உடம்பிலும் சேறு அப்பியிருந்தது. கழுத்திலிருந்து பீறிட்ட இரத்தம் சட்டை முழுக்க நனைத்திருந்தது.

உதட்டோரம் இரண்டு மூன்று ஈக்கள் உட்கார்ந் திருந்தன.

"பாத்தியா தியாகு? பாவிங்க என்னை என்ன பண்ணிட்டாங்க பாத்தியா? நல்லதுக்குத்தானேப்பா சொன்னேன்? அவனுங்க திமிரு என்னை உலகத்தை விட்டே அனுப்பிச்சிட்டுது பாத்தியா? நல்லவங்களுக்கு இதுவாப்பா கதி? நடுச்சந்தியிலே சாகறதுதான் முடிவா?"

மாமாவின் கண்கள் இலேசாகத் திறந்திருந்தன. சிரிக்கிறாற் போல, உதடுகள் கோணியிருந்தன. திறந் திருந்த கண்களையே தியாகு பார்த்துக் கொண் டிருந்தான்.

சிறுவன் பயந்துவிடப் போகிறான் என்று முகத் தைத் திருப்பினாள் அம்மா. அப்போதும் திமிறிக் கொண்டு பார்த்தான் தியாகு. மாமாவின் கண்கள் அவனோடு பேசின.

"பாத்தியா தியாகு? பாவிங்க நல்லா இருப்பாங் களா? அவனுங்களுக்கு நான் ஒரு இடையூறா இருந் தேன். இப்போ புல்லைப் புடுங்கிப் போடற மாதிரி இதோ இத்தனை ஜனம் நடுவிலே தீத்துக் கட்டிட் டாங்க! இனிமே கள்ளச் சாராய வியாபாரம் ஓகோன்னு செழிக்கும்! ஏழை ஜனங்க குடல் வெந்து சாவுங்களே..."

தியாகுவுக்கு உடம்பெல்லாம் என்னவோ செய்தது. அடி வயிற்றிலிருந்து கோபம் பீறிட்டு வெளிக் கிளம் பியது.

கள்ளச் சாராயக்காரன்கள் அவரின் இறுதி ஊர்வ லத்தில் எதுவுமே தெரியாத அப்பாவிகளாக, முதலைக் கண்ணீர் வடித்தபடி, வெள்ளைவெளேர் என்ற கைத் தறியிலும், கதரிலும் பவனி வந்தபோது, தெருவார்

வாய் மூடி நின்றபோது. அந்தச் சின்ன வயதிலேயே ஆத்திரம் எரிமலையைப் போலக் குமுறிக் கொண்டு வந்தது.

தியாகு இன்னொரு கல்லை வேகமாகக் காலால் எட்டி உதைத்தான்.

அப்போது என்ன? ஒரு பத்து வயதிருக்கலாம். இப்போது இந்த இருபத்தி மூன்று வயதில் மட்டும் எந்தக் கேள்விக்கு விடை கிடைத்துவிட்டது?

காலம் விடையே தெரியாத வினாக்களாக அல்லவா அள்ளி அள்ளி இறைத்துக் கொண்டிருக்கிறது?

தியாகு காலத்தின் மீது எரிச்சல் பட்டான். நடையை வேகமாக எட்டிப் போட்டான். வீட்டை அடைந்த போது, மணி பகல் இரண்டரை ஆகியிருந்தது.

□

"தியாகு! வாய்யா! கைகால் கழுவிக்கிட்டு வா, சாப்பிடலாம்."

"தாத்தா! நீங்க இன்னும் சாப்பிடலையா?"

"இல்லை ராசா! நீ இன்டர்வியூன்னு போயிருக்கிறே! ஒரு டம்ளர் மோர் மட்டும்தானேப்பா நீ குடிச்சிட்டுப் போனே? அதுதான் எனக்கு..."

"போங்க தாத்தா! நான் வந்த பிற்பாடு நான் சாப்பிட்டுக்கப் போறேன்... நீங்க வயசானவரு. நேரத்தோட நீங்க சாப்பிட வேண்டாமா?"

"அதைச் சொல்லு. நான் ஏழு தரம் கூப்பிட்டுப் பாத்துட்டேன். வந்தாத்தானே?"

"அப்படின்னா, நீயும் சாப்பிடலையாம்மா?"

"எப்படித் தியாகு மனசு வரும்? ஒரு பக்கம் வயசுப் பிள்ளை—இன்டர்வியூங்கற பேராலே அவனுங்க நடத்தற கோமாளிக் கூத்துக்குப் போயிருக்குது. இன்னொரு பக்கம், வயசான அப்பா தன் பேரனுக்காகத் தவங் கிடக்கிறாரு. எனக்கு எப்படிப்பா சாப்பிடப் பிடிக்கும்?"

பரபரவென்று கையைக் காலைக் கழுவிக் கொண்டு, முகத்தைச் சோப்புப் போட்டு அலம்பிக் கொண்டு வெளியே வந்தான் தியாகு.

ம்ம்! எப்படிப் பசித்திருக்கும்? பாவம்! இப்படி யார் காத்திருக்கச் சொன்னது?

அம்மா எத்தனை முறை சொன்னாலும் கேட்க மாட்டாள். காத்துக் கொண்டுதான் இருப்பாள். அவன் வெளியிலே எங்காவது போயிருந்தால், அவளுக்கு ஒரு கவளம் சோறு உள்ளே இறங்காது!

அம்மாவிடம் முன்பு ஒரு முறை இதைத்தான் கேட்டான்.

"அம்மா! இப்படி யாரும்மா காத்திட்டிருக்கக் சொன்னது? வந்து நான் சாப்பிட்டுக்கறேன்..."

"என்னடா பெரிய விஷயம்? வாழ்க்கையே காத்துக் கிட்டிருக்கிறதுதானே?"

அம்மா எளிதாக—மிக மிக எளிதாக ஒரு பெரிய வாழ்க்கைத் தத்துவத்தைச் சொல்லிவிட்டு நகர்ந்து விட்டாள்.

தியாகு பிரமித்து நின்றிருந்தான். பள்ளியில் இடம் கிடைக்க வேண்டுமே என்று காத்துக் கிடக்கிறோமே அங்கேயே ஆரம்பித்து விடுகிறது.

ஏன்? அதற்கும் முன்னதாகக் குழந்தை பிறக்க நல்ல நர்சிங்ஹோமைத் தேடி, டாக்டர் முன் காத்திருந்து, பிறகு வலி எடுக்க வேண்டுமே என்று காத்திருந்து காத்திருத்தல் வயிற்றுச் சிசுவுக்கும்தான் பழக்கமாகி விடுகிறது!

சிசேரியன் ஆபரேஷனில், ''நல்ல நேரம் இன்னும் அஞ்சி நிமிஷம் கழிச்சித்துத்தான்! ப்ளீஸ்! ஒரு அஞ்சி நிமிஷம் பொறுத்துண்டேன்னா, பூராடம் நட்சத்திரம் தாண்டிடும்! ஏன்னா, ஸ்கேனிங்லே பொண்ணுன்னு சொல்லிட்டா...'' என்று வயிற்றுக்குள்ளேயே குழந்தையைக் காத்திருக்கச் சொல்லி விடுகிறார்களே!

தேர்வுக்கு, தேர்வு முடிவுக்கு, பிறகு வேலையைத் தேடித் தேடிப் பல மாதங்கள், பல ஆண்டுகள் காத்திருக்க வேண்டியிருக்கிறதே!

அதற்குப் பிறகு இருக்கவே இருக்கிறது! நல்ல துணையின் வரவுக்கு, குழந்தைச் செல்வத்துக்கு, பதவி உயர்வுக்கு, உழைத்துச் சலித்த பின் ரிட்டயர்மெண்டுக்கு...

''அப்போ, எழுவது வயசிலேதான் எதுக்கும் காத்துக்கிட்டிருக்க வேணாம் போலிருக்குது... நிம்மதியா, அக்கடான்னு வீட்டுலே ஒக்காந்திருக்கலாம்!''

''இல்லே தியாகு! கடவுள் என்னை எப்போதான் கூப்பிட்டுக்கப் போறானோ தெரியலையே! எதுக்கு இந்த ஜென்மம்? என்று மரணத்திற்குக் காத்திருக்க வேண்டாமோ?''

யாரோ குரல் கொடுத்தார்கள்.

தியாகுவுக்கு ஒரு பிரெஞ்சுப் பழமொழி ஞாபகத்துக்கு வந்தது.

''நாம் வருகிறோம்; அழுகிறோம் — இதுதான் வாழ்க்கை. நாம் அழுகிறோம்; போகிறோம்—இதுதான் மரணம்.''

தியாகு மெல்ல உள்ளே நுழைந்தான்.

''என்ன தியாகு?''

''ஏம்மா நீயோ தாத்தாவோ இன்னும் எங்கிட்டே இன்டர்வியூ பத்தி ஒண்ணுமே கேக்கலியே?''

''என்ன ராஜா இருக்குது இவ்வளவு அவசரமா நான் கேக்கறதுக்கு? நீ சாப்பிடுப்பா! காலையிலே டம்ளர் மோர் மட்டும்தானே குடிச்சுட்டுப்போனே?''

அதுவும் உண்மைதான்! முக்கியமானதாக இருந்தால் அவனே சொல்லியிருக்க மாட்டானா?

அம்மா தன் பொட்டில்லாத வெற்று நெற்றியை அழுத்தித் துடைத்துக் கொண்டாள். அந்தக் கை அசங்கலில் ஜாக்கெட்டின் தோள்புறக் கிழிசல் தெளிவாகத் தெரிந்தது.

அந்த வெறுமை அவன் மனத்தீயை விசிறிவிட, காது மடல்கள் ஜிவுஜிவுத்தன. கண்கள் சிவந்தன.

''என்ன தியாகு?''

''ஒண்ணும் இல்லேம்மா?''

சோற்றை அள்ளி வாயில் அடைத்தான் உள்ளே எரிகிற தீக்கு இரை தருபவனைப் போல...

''என்ன மரகதம்?''

''அந்தப் பையன் தியாகு வந்துட்டான் போல இருக்குது. அம்மாவையும், தாத்தாவையும் திண்ணை யிலே காணோம்!''

மரகதம் மாடிச் சன்னல் வழியாகக் கீழே பார்த் தாள். இவர்கள் வீட்டுக்குப் பக்கத்தில், அதே காம்ப வுண்டுக்குள் ஓர் ஓரமாக அவுட் ஹவுஸ்!

அந்தக் காலத்தில் பிரபலமாக இருந்த நடிகையின் வீடு இது... அவுட் ஹவுஸே அவ்வளவு பிரமாதமாக இருந்தது.

மரகதம் குடியிருப்பது மாடிப் போர்ஷனில்...

நடிகையிடமிருந்து வீட்டை விலைக்கு வாங்கிய அன்பு பலசரக்கு மண்டி உரிமையாளர் சிவகடாட்சம் ஏகப்பட்ட போர்ஷன்களாகப் பிரித்து, அந்த வீட்டை எட்டுக் குடும்பத்துக்கோ, பத்துக் குடும்பத்துக்கோ வாடகைக்கு விட்டிருந்தார்.

அவுட்ஹவுஸையே கீழே இரண்டு போர்ஷன்களாக மடக்கிவிட்டார். அவுட்ஹவுஸ் மாடியில் இருந்த ஒற்றை அறையைக் கூட இரண்டு வாலிபர்களுக்கு விட்டு விட்டார் என்றால், சாமர்த்தியத்தை என்னவென்று சொல்வது?

''இந்தா! அங்கியே நின்னுக்கிட்டு என்ன பார்வை? சேச்சே! ரொம்பவே கெட்ட பழக்கம்!''

மரகதம் தன் கணவர் சிவராமனை எரிச்சலுடன் திரும்பிப் பார்த்தாள்.

''ஏன்? என்னவாம்? பாத்தா என்னவாம்? அப்படியே ஏதாவது 'மெஸ்மரைஸ்' பண்ணிடுவமா?''

''உன் கிட்டே சொன்னேன் பாரு...''

''பின்னே என்ன? நான் என்ன இந்தத் திரானபங்க வீட்டையாப் பாத்துக்கிட்டிருக்கிறேன்? பக்கத்துலே மாணிக்கம் போர்ஷன் முன்னாடி காரு நிக்குதே! யாரா இருக்கும்னு பாக்கறேன்?

''அட! யாரா இருந்தாத்தான் உனக்கென்ன?''

''அது சரி! மாணிக்கம் ஒண்ணும் வெறும் ஆள் இல்லே, கண்ணழகன் இருக்கிறாரே— மந்திரி கண்ணழகன் தெரியாது? அவருக்குத் தேனாம்பேட்டை யிலே ஒரு சின்ன வீடாம்...''

''பைத்தியம்! அவரே மந்திரி! அவரு ஏண்டி சின்ன வீடு கட்டியிருக்கப் போறாரு?''

சிவராமன் தானுண்டு, தன் பிரைவேட் கம்பெனி காஷியர் வேலை உண்டு என்று இருப்பவர். 'வைப்பு' என்றால் அவருக்குத் தெரிந்திருக்குமோ என்னவோ? இந்தச் சின்ன வீடு என்பதெல்லாம் சத்தியமாய் அவ ருக்குப் புரியாத வார்த்தைகள்...

முகத்தைக் கோபமாய் ஒரு நொடி நொடித்தாள் மரகதம்.

''ஒங்களுக்கு ஒங்க பாழாப்போன கம்பெனிக் கணக்கைத் தவிர வேற ஒண்ணுமே தெரிஞ்சு அழு வாதே! மந்திரியோட இன்னொரு சம்சாரம் தேனாம் பேட்டையிலே! இப்போப் புரியுதா?''

''அதையா நீ சொன்னே?''

மரகதமே திரும்பவும் விவரிக்கத் தொடங்கினாள்.

''அந்தத் தேனாம்பேட்டையிலே இருக்கிற அம்மா வுக்குத் தம்பி ஒருத்தன் உண்டு— சினிமா லைன்லே. அவனும், இந்த மாணிக்கமும் ஏகக் கூட்டாளிங்க...''

"ஒனக்கு எதுக்கு இந்த அக்கப்போரெல்லாம்? வீட்டுக்குள்ளியே இருந்துக்கிட்டு இந்தக் கச்சடா விஷயம்லாம் எப்படித்தான் ஒனக்குத் தெரியுதோ?"

"அதுதான் புஸ்தகங்கள்லே 'கிசுகிசு' போடறாங்க இல்லே. இந்த மாதிரி விஷயம்லாம் பின்னே எப்படித் தான் தெரிஞ்சுக்கறதாம்?"

"சரி சரி! எனக்குச் சூடா ஒரு டம்ளர் காபி போட்டுக் குடு. திரும்பவும் தலைவலி வந்துட்டுது."

சிவராமனுடைய போதாத நேரம். அன்று அவ ரால் ஆபீஸ் போக முடியாத அளவிற்குத் தலை வலி. இல்லையென்றால், இந்த 'அரிய பெரிய' செய்தி களையெல்லாம் கேட்கிற பாக்கியம் பண்ணாமல், ஆபீசுக்கு ஓடிவிட்டிருப்பார். சள்ளை விட்டிருக்கும். இன்று வசமாக மாட்டிக்கொண்டார்.

"எவ்வளவு பெரிய விசயம் சொல்லிக்கிட்டு இருக் கிறேன்? நீங்க என்னன்னா சாவதானமா, காபி கேக்கு றீங்களே! அந்த மந்திரியோட மச்சான்தான் வந்திருக் கிறானான்னு பாக்க நிக்கறேன் கால்மணி நேரமா! நீங்க என்னன்னா..."

"ஆமாம் ஆமாம்! ரொம்ப முக்கியம். உனக்குத் தெரியுமா எவன் மச்சான் எவன் மாமன்னு?"

"ஆங்! காலைப் பத்திரிகையிலே 'இவருதான் மந்திரிக்கு இந்த மாதிரிச் சொந்தம்'னு போட்டிருந் தாங்க இல்லே— போட்டோ படத்தோட..."

"பிரமாதம்! படம் வேறயா? அம்புக் குறியிட்டுக் காட்டியிருந்தானா? தேசத்துக்கு ரொம்ப அவசியம் பாரு."

மனைவியை எரிச்சலுடன் பார்த்தார் சிவராமன். என்ன பெண் இவள்? இது மாதிரிச் செய்திகளைப் பார்த்துப் பார்த்துத் தருகிற பத்திரிகைக்காரர்களை என்ன பண்ணலாம்? ம்!

விழிப்புணர்ச்சியை உண்டாக்க வேண்டிய பத்திரிகைகள் இப்படியா போதை மயக்கத்தில் ஆழ்த்துவது? ச்சே! என்ன மாதிரியான செய்திகள்? அந்தக் கீழ்த்தரச் செய்திகளைத் தருவதில் போட்டிப் போடுகிற பத்திரிகைகள்! அதைப் படித்துவிட்டு, அப்படியே மனத்தில் இறுத்திக்கொள்ளும் குடும்பப் பெண்மணிகள்! என்ன மாதிரியான நச்சு வட்டம்?

மரகதம் இன்னும் கீழேயே பார்த்துக் கொண்டு நின்றாள். கம்பிகளை இடித்துத் தள்ளி, முகத்தை வெளியே நீட்டி விடுவாள் போலிருந்தது.

சிவராமன் கண்ணால் பார்க்கப் பொறுக்காதவறாக, துளி நீலகிரித் தைலத்தை எடுத்துத் தன் நெற்றிப் பொட்டில் தேய்த்துக் கொண்டார். போய்க் கட்டிலில் படுத்துக் கொண்டார், உள்ளமும், உடம்பும் ஒரு வகையான ஆவேசத் தீயில் வெதும்புவது அவருக்கே தெரிந்தது.

''இந்தத் தியாகு இன்டர்வியூவுக்குப் போனானே! என்ன ஆயிருக்கும்? பாவம் அந்தப் பையன்! மனசு நிறைய இலட்சியங்களோட கனவுகள் தளும்பத் தளும்ப நிக்கறான். ஒரு வேலைதான் கிடைச்ச பாடில்லை. என்னதான் பண்ணுவான்? இந்த மெட்ராஸ்லே அம்மா, அம்மாவை பெத்த தாத்தா, இவன்னு மூணு ஜீவன்ங்க எப்படிக் காலங் கழிக்க முடியும்? அதுலியும் சல்லிக்காசு இல்லாமே...''

சட்டென்று எழுந்தவர், குளியல் அறைக்குள் சென்று முகங்கழுவிக் கொண்டு வந்தார்.

அ...ப்பா! குளுகுளுவென்றிருந்தது இப்போது. தண்ணீர் பட்டதும் எப்படி அந்த எரிச்சல் அடங்கிப் போகிறது?

ஒரு சட்டையை எடுத்துப் போட்டுக்கொண்டு, ஹாலுக்கு வந்தார். தலைவலி கூடக் குறைந்து விட்டாற்போல் இருந்தது.

சன்னல் கம்பியிலிருந்து முகத்தைத் திருப்பினாள் மரகதம். கம்பிகளில் முகத்தை அழுத்தி அழுத்தி, கோடாக ஒரு தடம் தெரிந்தது. த்தூ! இப்படிப் பார்க்க வில்லையென்று யார் அடித்தது?

"அவனேதாங்க! அவனேதான்! என்ன ஸ்டைலா இருக்கிறான் தெரியுமா?"

அவளின் பரபரப்பு அவருக்கு அருவருப்பாக இருந்தது.

ம்! இந்த வயதில் ஊர் வம்புக்கு இப்படியா ஒருத்தி அலைவாள்? நேரங்காலத்தில் குழந்தை பிறந்திருந்தால், கீழ் வீட்டு உஷா போல் இருந்திருக்குமே...

மெல்ல மாடிப்படிக்கட்டில் இறங்கத் தொடங்கினார். உஷா கல்லூரியில் மூன்றாமாண்டு படிக்கிற மாணவி. அவ்வளவு கெட்டிக்காரி. நல்ல புதுமைக் கருத்துக்களும், புரட்சிக் கருத்துக்களும் கொண்டவள். அதே நேரம் "யாருக்கும் நான் மரியாதை தரவேண்டிய அவசியமே கிடையாது. காரணம் நான் ஒரு புதுமைப் பெண்ணாக்கும்!" என்கிற பார்வையும் அவளிடம் கிடையாது.

அத்தனைப் பேரிடமும் அன்பாக, மரியாதையாக நடந்து கொள்வாள். சின்னக் குழந்தையிலிருந்தே அவளைப் பார்த்து வருகிறார் சிவராமன்! பிரமிப்பு இன்னும் அடங்கவில்லை.

அவள் போர்ஷனைப் பார்த்தபடியே தியாகுவின் பகுதிக்குள் நுழைந்தார்.

''வாங்கண்ணா வாங்க!''

தியாகுவின் தாய் அன்போடு வரவேற்றாள்.

''வரேம்மா! இமயமலை மாதிரி இருந்த அண்ணன் போயிட்டான். எதுக்கும் பிரயோசனம் இல்லாத ஒதிய மரமாட்டம் நான் ஒருத்தன்—என்னை நீ அண்ணான்னு ஆசையாக் கூப்பிடறே!''

''என்னண்ணா? நீங்க என் கூடப்பிறக்காத அண்ணன்தானே! அதிலே என்னண்ணா சந்தேகம்? 'எல்லார் தலையிலேயும் எட்டெழுத்துன்னா, பாவி என் தலையிலே பத்தெழுத்து'ன்னு இல்லே போட்டுட்டான்! மலையாட்டம் இருந்த அண்ணன், வைரம் பாஞ்ச தேக்கு மாதிரி நின்ன என் வீட்டுக்காரரு... எதையும் வெச்சி அனுபவிக்கிற பாக்கியம் எனக்குப் போட்டு இல்லியே அண்ணா...''

''கஷ்டப்படாதேம்மா! தியாகு வந்தாச்சா?''

''என்னையா மாமா கேக்கறீங்க? வந்துட்டேன் மாமா! வந்து ஒரு மணி நேரம் ஆகுது மாமா! ஆமாம், நீங்க என்ன இந்த நேரத்துக்கு வீட்டுலே இருக்கறீங்க? ஏன் மாமா?''

''உடம்பு சரியில்லேப்பா தியாகு! ஒரே தலைவலி! அதனாலேதான் இன்னிக்குக் கம்பெனிக்குப் போகலே''

''அதிசயம் மாமா... நீங்க வேலைக்குப் போகு லேங்கறது''

''ஆமாம் தியாகு! நீ போனியே இன்டர்வியூ, என்ன ஆச்சி?''

''மாமா! ஒலகத்துலே நேர்மை நியாயம் எல்லாம் செத்துப் போச்சி மாமா! எல்லாம் கமிஷன், அன்பளிப்பு, லஞ்சம் இந்தப் பேர்லேதான் உலகமே நடக்குது...''

''அப்படிச் சொல்லிட முடியாது தியாகு! நம்பிக் கையை என்னிக்குமே விட்டுடக் கூடாது!''

''எப்படி மாமா நம்பிக்கையை விட்டுடாமே இருக்க முடியும்? இது பதினேழாவது இன்டர்வியூ மாமா! அங்கே போனா, ஜேஜேன்னு அப்படி ஒரு கூட்டம், அப்ளிகேஷன் போட்டவங்க அறுநூத்திச் சொச்சமாம். முப்பது பேரைக் கூப்பிட்டிருக்காங்க''

''எத்தனைப் போஸ்ட்டாம்?''

''மூணு கிளார்க் வேலைக்கு இத்தனை அலைச்சல்''

''சரி அப்புறம்...''

''வெறும் கேலிக் கூத்து மாமா. ஜெனரல் மானேஜர் மச்சினனுக்கு ஒரு போஸ்ட் போல இருக்குது. அது நிச்சயம். இன்னும் ரெண்டு போஸ்ட்லே ஒண்ணை எவனோ ஒரு மந்திரியைத் திருப்திப் படுத்தறதுக்குக் கொடுக்க இருக்காங்களாம். இன்னொண்ணு என்ன பண்ணப் போறாங்களோ?''

''மந்திரிக்கு ஏன் இவனுங்க தரானுங்க?''

''மந்திரி மூலமா ஏதோ வேலை ஆகணும் போலே இருக்குது. அதனாலே ''குட்டி தேவதைக்குக் கொடுடா ஒரு கோழியை''ன்னு அந்தாளுக்கு ஒரு போஸ்ட்டு

ஒதுக்கிட்டாங்க... அவரு எப்படியும் எழுபது, எண்பது எவன்கிட்டயாவது வாங்கியிருக்க மாட்டாரா?''

''அவரு யாருன்னு தெரிஞ்சாலாவது கையிலே கால்லே விழுந்தாவது வாங்கிடலாம்!''

''நீங்க ஒரு இவரு மாமா! காலு கையிலே விழுந்தா கடவுளே மனசு இரங்குறது இல்லே! மந்திரியா இரக்கப் படுவாரு? எண்பதாயிரமோ, எழுபதாயிரமோ ரேட்டு வெச்சிருக்காராம். எவன் கொடுக்கிறானோ, அவனுக்குச் சிபாரிசு பண்ணி, வேலை வாங்கிக் கொடுத்துடுவாரு! கட்சிப் பேதம் எல்லாம் இதிலே கிடையாது''

''அடக் கடவுளே...''

சிவராமன் திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தார்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த தாத்தா ஆரம்பித்தார்.

''இதோ பாருங்க சிவராமன்! மாணிக்கம் எனக்குத் தெரிஞ்சி, சின்னதா ஒரு சைக்கிள் ரிப்பேர் கடை வெச் சிருந்தான். இப்பப் பாரு, இல்லாத கடைங்களே இல்லை. பண்ணாத வியாபாரம் இல்லை. அது எப்படி அவ்வளவு சீக்கிரம் அப்படிப் பலத்துப் போயிட்டான்றது யாருக்கும் தெரியாது''

''அது எப்படிங்க தாத்தா?''

''அது உனக்குத் தெரியாதுப்பா தியாகு! நீ சின்னப் பிள்ளை!''

''ஏன் தாத்தா? நானா சின்னப் பிள்ளை?''

''உலக அனுபவம் கிடையாதே கண்ணு?'' பாரு தியாகு! நல்லவனா வாழணும்னு நினைச்சாத்தான் அலைச்சல்... ''எப்படி வேணும்னாலும் இருப்பேன் என்ன வேணும்னாலும் பண்ணுவேன்''னு போறவ

னுக்குக் கொண்டாட்டமான வாழ்க்கைதான்! தினத்துக்கும் கறிச் சோறுதான்!''

''அதுக்காக, பொம்பளைங்களை வெச்சி வியாபாரம் நடத்தச் சொல்லுதா? சண்டவனுங்க பின்னாலே நேரம், காலம் இல்லாமே நாய் மாதிரி ஓடிக்கிட்டு, ''நல்ல சரக்கு வந்திருக்குது சார்''னு அலையச் சொல்லுதா? தூ! மானம் கெட்ட ஜென்மம்!''

தியாகு சொல்லிவிட்டு நாக்கைக் கடித்துக் கொண்டான்.

மாணிக்கத்தின் தொழிலே அதுதான்! இந்தத் தொழில் கொடி கட்டிப் பறக்க பறக்க, அவன் அந்தஸ்து உயர்ந்து கொண்டே போயிற்று... எவ்வளவு பெரிய மனிதர்களாக இருந்தால் என்ன? ''சின்னத் தனங்கள்'' இருக்கிற வரையில், மாணிக்கம் போன்ற ஆட்களின் காலில் விழுந்தாக வேண்டும்தானே? ''நன்றிக் கடனாக'' அப்போதைக்கப்போது, அழவும் வேண்டும்தானே?

ஆனால், இவ்வளவையும் தாத்தா முன்னாலும், அம்மா முன்னாலும் தெரிந்தாற் போலக் காட்டிக் கொண்டிருக்க வேண்டாம். தாத்தா என்னவோ சின்னப் பிள்ளை என்றல்லவா நினைத்துக் கொண்டிருக்கிறார்?

தியாகுவுக்கு ஒரு மாதிரியாக இருந்தது. இந்தக் காலத்தில் ஆறாம் வகுப்பு, ஏழாம் வகுப்புப் படிக்கிற பையன்கள் எல்லாம் என்ன என்ன விஷயங்கள் பேசுகிறார்கள்?

ஆனால், தியாகு அப்படி வளர்க்கப்படவில்லையே...

தயக்கத்துடன் தாத்தாவையும், சிவராமனையும் ஒரு பரிதாபப் பார்வை பார்த்துவிட்டு, தியாகு வெளியே நடந்தான்.

''என்னங்க? தியாகு சொல்லிட்டுப் போறது உண்மையா?''

''அவனுக்கு இதெல்லாம் ஒண்ணுமே தெரியாதுன்னு நினைச்சிக்கிட்டு இருந்தேன் சிவராமன்! பையன் எல்லாம்தான் தெரிஞ்சி வைச்சிக்கிட்டு இருக்கிறான். சிவராமன்! நாமெல்லாம் வாயைத் திறந்து ஒண்ணும் சொல்லிக்கிற மாதிரி இல்லே மாணிக்கத்தோட நடவடிக்கைங்க.''

''ஏங்க? எங்கேயாவது போயி ஒழிய வேண்டியது தானே? இன்னமும் ஏன் இங்கேயே ஒக்காந்துக்கிட்டு உசுரை எடுத்துக்கிட்டு இருக்கிறான்?''

''இந்த இடம்தான் ராசியான இடம் போல இருக்குது! ரெண்டு பங்களா கட்டிப் போட்டிருக்கிறானாமே! அது மட்டும் இல்லே! விரோதிங்க கண்ணுக்குப் படா டோபமா இடத்தைக் காட்டிக்காமே, ஒண்டுக் குடித் தனத்திலியே இருக்கிற மாதிரி 'ஷோ' காட்டிக்கிட்டு இருக்கிறானோ என்னமோ...''

''ஒண்ணும் புரியலைங்க! வேலை அதை விட்டா வீடுன்னு இருக்கிற என்னை மாதிரி வாய் செத்த பூச்சிங் களுக்கு எதுதாங்க புரியும்?''

சிவராமன் சலித்துக் கொண்டார். தாத்தா தொடர்ந்தார்.

''ஆனா ஒண்ணு! கழுத்திலே மைனர் செயினு, வாட்சுக்குத் தங்கப் பட்டை, நாலு விரல்லே மோதிரம் அப்படி இப்படின்னு அலையறானே தவிர, கச்சாமுச்சா வேலைங்க எதுவும் இந்த ஏரியாவிலே வெச்சுக்கற தில்லே! குடியிருக்கிற ஏரியா பாருங்க! அந்த எண்ணம்...''

''என்னமோ போங்க! நாட்டு நடப்பு ஒண்ணுமே நல்லால்லே. அநியாயம், அக்கிரமம் பெருகிப்போச்சு''

''இந்த அநியாயம், அக்கிரமம் இதுங்களை எல்லாம் தட்டிக் கேக்கற வீரம் நாட்டிலே எவனுக்குமே இல்லாமே இல்லே போயிடிச்சு''

''உண்மைதாங்க...''

''சிவராமன்! நீங்க எப்பவாவது இதைப் பத்தி யோசிச்சிருக்கீங்களா? முன்னேல்லாம் ஜனங்களுக்கு வீரம் இருந்ததே. இப்ப என்ன ஆச்சி? ஏன் இப்படிக் கோழைகளா ஆயிட்டாங்க? முன்னெல்லாம் ஒரு பொது நலம் இருக்குமே? இப்பல்லாம் ஏன் ஜனங்க சுயநலப் பிசாசுகளா மாறிட்டாங்க? பாரதியார் ஓர் இடத்திலே சொல்றாரு... ''வீரர்களை மதிக்காத நாட்டிலே வீரர் கள் தோன்ற மாட்டார்கள்; ஞானிகளை மதிக்காத நாட்டிலே ஞானிகள் தோன்ற மாட்டார்கள்'' அப்ப டின்னு சொல்றாரு! இப்பப் புரியுதுங்களா? ஏன் நம்ம நாட்டிலே வீரர்கள் பிறக்கலை? ஏன் தியாகிகள் பிறக் கலை? ஏன் ஞானிகள் பிறக்கலைன்னு?''

''அது சரிங்க... திரும்பத் திரும்ப அயோக்கியனுங்க மட்டும்தான் அமக்களமா வந்து பிறக்கிறானுங்க... ஜனங்களோட மாலை மரியாதையை ஏத்துக்கறாங்க! கண்ட வழியிலே—அது சாராயமோ, கள்ளக் கடத் தலோ, சூதாட்டமோ—என்னமா கொழிக்கறாங்க?''

''நான் ரொம்ப வயசானவன்—நான் இத்தனை நாளும் நாம மட்டும்தான் இப்படி நினைக்கிறோம்னு நினைச்சிக்கிட்டு இருந்தேன். இப்பப் பார்த்தா, நடுத்தர வயசான நீங்களும் இதே மாதிரி நினைக்கறீங்க... இளைய தலைமுறைங்க என்ன நினைக்குதோ? இல்லையா சிவராமன்?''

''தியாகு! நாமெல்லாம் பட்டம் வாங்கிட்டு இத்தனை நாளும் இப்படி வேலை தேடி அலையறோம். போஸ்டல் ஆர்டர் வாங்கக் கூடக் கூனிக் குறுகிப் பெத்த வங்களைக் கேக்க வேண்டியதா இருக்குது... இந்த நாட்டிலே படிச்சவனுக்கு மதிப்பு இல்லேடா... கள்ள நோட்டு அடிச்சாவது பணக்காரனா ஆயிடு, அப்புறம் பாரு. உன்னை இந்திரன் சந்திரன்னு வருணிக்க எத்தனை ஆளுங்க இருக்கானுங்கன்னுட்டு...''

''உனக்கென்னடா ஆனந்து? நீ, உஷா ரெண்டே பசங்க... அப்பா, அம்மாவோ தங்கமானவங்க.''

''எவ்வளவுதான் தங்கமானவங்களா இருந்தாலும் அதுக்கும் ஒரு லிமிட் இருக்குதுடா. சும்மாச் சும்மா அவங்க கையையே எல்லாத்துக்கும் எதிர்பார்த்துக்கிட்டு இருந்தா எப்படிடா? என்னடா பேசாமே இருக்கிறே?''

அப்படிக் கூட ஆகிவிடுமா? தாத்தா, அம்மா மன செல்லாம் கூட மாறிப் போய்விடுமா என்ன?

''தட்டுலே கொட்டி வெச்சிருக்கேன். வந்து முழுங்கு முதல்லே! வேலை வெட்டிதான் இல்லியே! நேரம் காலத் துக்கு வந்து தின்னு ஒழிச்சிட்டுப் போயிடக் கூடாதா?''

தேள் கொட்டி விட்டாற் போல, உடம்பெல்லாம் கடுத்தது தியாகுவுக்கு— கற்பனையில் அம்மாவை அப்படி எண்ணிப் பார்த்த போதே.

ம்! அப்படி ஒரு நிலைமை வருமா? என்ன? ஏன்? இந்த மூணு வருஷமா அம்மா ஒரு வார்த்தை சொன்ன தில்லையே! தாத்தா கூடத்தான், ஆறுதலாப் பேசு வாரே தவிர, குத்தலாகவோ, எரிச்சலாகவோ ஒரு வார்த்தை வந்திருக்குமா?

"தெரியாது! எங்கம்மா தங்கமானவங்கதான். இல்லைன்னு சொல்லலே. நேத்து சொல்றாங்க. "எப்பா ஆனந்த்! நீ அப்ளிகேஷன்னும், போஸ்டல் ஆர்டரும் வாங்கிக்கிட்டுப் போன காசு மட்டும் சேத்து வெச்சிருந்தா, சின்னதா ஒரு கடையே வெச்சிருக்க லாம்"னு சொல்றாங்கப்பா."

"என்னவோ அவங்க வருத்தம்...நீ மனசைப் போட்டு குழப்பிக்காதேடா"

இருவரும் சில நிமிடங்கள் காம்பவுண்ட் சுவரில் சாய்ந்து கொண்டு, வெளியே தெரிகிற இருட்டையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். தூரத்தில் ஏதோ ஒரு குடிசையில் 'முணுக் முணுக்' என்று கை விளக்கின் வெளிச்சம் தெரிந்தது.

"அப்படிப் பிறந்திருந்தாலும், கூலி வேலையாவது செய்து வயித்துப் பாட்டைப் பாத்துக்கலாம்! அட! இந்த 'மிடில்கிளாஸ்' குடும்பத்துலே பிறந்துட்டோம் பாரு... மேலேயும் ஏற முடியலை! கீழேயும் இறங்க முடியலை! எங்க அத்தைப் பொண்ணு வயசுக்கு வந்திருக்காம். அது வேற ஒரு அவஸ்தை!"

"உனக்கென்னடா ஆனந்த் இதிலே அவஸ்தை?"

"உனக்குத் தெரியாதுடா! எங்கப்பாதான் மாமன் சீர் எல்லாம் செய்யணும். எங்கப்பாவுக்கு ரெண்டு அண்ணனுங்க இருக்கிறாங்க... அவங்களுக்கு அவ்வளவா வசதியில்லே. இவரு ஒருத்தர்தான் வேலையிலே இருக்கிறவரு. சுத்தமா மொட்டையடிச்சிடுவாங்க... புடவை ரவிக்கை, சோப்பு, சீப்பு, பலகாரம், பழம், பவுடர் டின்னுன்னு அப்பா எப்படித்தான் சமாளிக்கப் போறாரோ? ச்சே"

''இந்தப் பழக்க வழக்கங்கள்ங்கிற தளைகள் லேருந்து எப்பத்தான் நாம மீளப்போறமோ? ஒரு வீட்டுலே கலியாணம் நடக்குதுன்னா, குறைஞ்சது அஞ்சாறு வருஷத்துக்காவது அப்பன்காரன் கடன் காரனா ஆயிட்றான்! உண்டா இல்லியா? ம்! கையிலே ரொக்கம்—கழுத்திலே தங்கம், கால்லே வெள்ளி, தூத்தேறி! மாப்பிள்ளைங்களாடா இவனுங்க...''

''அது சரிடா! இதைவிட ஆவேசமாப் பேசினவன் எல்லாம் காலம் வர்ரப்போ ''அம்மாவுக்காகத்தான்''னு வளைஞ்சிட்டவனுங்கதான்!''

''என்னை உனக்குத் தெரியாதுடா ஆனந்த்! நான் சொல்ல மாட்டேன்; சொல்லிட்டதைச் செய்யாமே விடவும் மாட்டேன்...''

''சரி... சரி... இப்பக் கல்யாணம் பத்தி எதுக்குடா பேச்சு? ஒரு வேலை கிடைச்ச பாடில்லை''

''நீ ஒண்ணு! நமக்கு அறுபதாம் கல்யாணம் ஆறதுக்கு ரெண்டு வருஷம் முந்திதான் வேலையே கிடைக்கும் போலே இருக்குது. கல்யாணமாம் கல்யாணம்!''

''அடப்பாவி! அம்பத்தி எட்டாவது வயசிலியாடா வேலை கிடைக்குங்கறே? அது 'ரிடையரிங் ஏஜ்'டா!''

குபீலென்று வந்த சிரிப்பில் கவலைகள் ஒதுங்கிப் போயின—தற்காலிகமாகவாவது!

சாலையில் இரண்டு பையன்கள் முன்னால் போன பெண்ணைக் கிண்டல் செய்து பாடிக்கொண்டு போனார்கள்.

தியாகு மவுனமாக அவர்களையே பார்த்தான். ஆனந்த் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

"இப்பத் தெரியாதுடா இவனுங்களுக்கு! பீ ஏ., பி.எஸ் ஸி படிச்சி முடிச்சதுமே ஐ.ஏ.எஸ். வேலை கிடைக்கும்னு இல்லே ஆட்டம் போட்றானுங்க... ஆத்தா அப்பன் காசு இல்லே! அப்படித்தான் பாடச் சொல்லும்!"

"விடு ஆனந்த்! சின்னப் பசங்க! நம்ம கிண்டல் பண்ணதில்லையா அந்த வயசிலே?"

"என்னவோ தியாகு! எனக்கு எதை எடுத்தாலும் கோபம் வருதுடா. அப்படி ஒரு ஆத்திரம். இயலாமை யாலே வர்ர ஆத்திரம். இன்னும் கொஞ்சம் நாள்லே எனக்கு வேலை கிடைக்கலைன்னா, சாராயக் கடையிலே 'கிளாஸ்' கழுவற வேலைக்குக் கூடப் போயிடுவேன்! அப்படி ஒரு எரிச்சல் மண்டிக்கிட்டு வருது."

"இன்னொரு மாணிக்கமா வந்துடாதே!"

"சொல்றதுக்கு இல்லேடா தியாகு! அதைவிட மோசமா வந்தாலும் வந்துடுவேன்"

சிரிக்கும்போது ஆனந்தத்தின் பற்கள் வெள்ளை வெளேர் என்று மின்னின.

பாவம்! ஆனந்த்! உற்சாகமாக இருக்கும் போது தான் மனிதனின் அழகே எடுபடுகிறது. சிரிக்கிறபோது எப்படி இருக்கிறது இவன் முகம்?

காத்துக் காத்து, பொறுமை இழந்தவனாக, ஆனந்த் அவன் சொன்னது போல, கண்ட வழிக்கும் போய் விட்டால்...

நினைக்கவே தியாகுவுக்குப் பயமாக இருந்தது. அந்தப் பயம் ஒரு நாளைக்கு நிஜமாகப் போகிறது என்று அப்போது அவனுக்குத் தெரியாது...

□

தியாகு ஒரு காட்டில் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். சுற்றிலும் பச்சைப் பசேல் என்று மரங்கள்... மல்லிகைப் புதர்களில் பூத்த பூக்கள் அவனைப் பார்த்துச் சிரிக்கின்றன.

வேப்ப மரத்தில் சாய்ந்து உட்கார்ந்து கொள்கிறான். குயில்களின் பாட்டில் உற்சாகம் கொப்பளிக்கிறது. திடும்மென்று மான்களின் கூட்டம் ஒன்று புதருக்குப் பின்னாலிருந்து, 'பம்பம்பம்' தாள லயத்தோடு எகிறிப் பாய்கிறது.

என்ன இது? இத்தனைக் கிளிகள் எப்போது வந்து எதிர் மரத்தில் உட்கார்ந்தன? பச்சை வெல்வெட்டில் ரத்தினத்தைப் பதித்தாற் போன்ற மூக்கு... அடேயப்பா... என்ன அழகு? கொள்ளை அழகு?

"தியாகு... தியாகு..."

திடுக்கிட்டுப் பார்க்கிறான் தியாகு. அட! இதென்ன? மடியில் யார் படுத்திருப்பது? இந்தப் பேரழகி யார்? செதுக்கி வைத்த சிலை போல இருக்கிற இவள் எப்படி இவ்வளவு சொந்தமாக என் மடியில் படுத்திருக்கிறாள்?

தியாகு குழம்புகிறான்... அவளைக் கூர்ந்து பார்க்கிறான் .. தென்றல் காற்றில் முல்லைக்கொடி இப்படித்தான் ஒசிந்தாடுமா? நாணம் கலந்த புன்னகையால் அவள் பட்டுக் கன்னம் மெல்ல சிவந்து போகிறது... அவன் திகைக்கிறான்.

"என்ன தியாகு?"

"யார் நீ?"

"என்னையா தெரியலை? நான்தான் தியாகு! நல்லாப் பாரு."

கிட்டே குனிகிறான். மடியில் இருக்கிற முகம் மத்தாப்புப் போல ஒளிர்கிறது. அந்தக் கண்கள்—கன்றுக் குட்டியின் கண்களைப் போல் அழகான அந்தக் கண்கள் படபடத்து விரிகின்றன.

''நிஜம்மாவே தெரியலையே...''

''நல்லாப் பாரு! பாரு தியாகு! நான்தான்...''

அந்த உதடுகள் என்ன இப்படிப் பளபளக்கின்றன? இரத்தச் சிவப்பில் இப்படி ஓர் அழகு இருக்குமோ? ஆமாம்! இவை உதடுகள்தானா? இல்லை... பவளத் துண்டுகளா?

''ஏண்டாப்பா தியாகு! எழுந்திரு! மணி ஆறாகுது. இன்னுமா தூக்கம்?''

அம்மா எழுப்பினாள்.

ஓ! தூக்கமா? விடியற்காலைத் தூக்கமா? அந்தத் தூக்கத்தில் வந்த சொப்பனமா? அப்படி என்றால் பலிக்குமா?

ஆமாம்! யார் அந்தப் பெண்?

ஆசைகளின் வெளிப்பாடே கனவுகள் என்பார்கள். அப்படி என்றால், இப்படி ஓர் அழகியின் அன்பையும், அண்மையையும் நான் மனதுக்குள் விழைந்திருப் பேனோ?

அதுதான் கனவாக வெளிப்படுகிறதோ? ம்! சம்பாதிக்கத் துப்பில்லை! ஒரு வேலை கிடைத்து விட்டாற்போலக் கனவு வருகிறதா? இல்லையே! அழகான பெண் மடியில் படுத்திருப்பது போல் மட்டும் எப்படி வந்தது கனவு? தாத்தா மேல், அம்மா மேல் நிஜமான அக்கறை இல்லை தியாகு உனக்கு! அதுதான் 'இன்பக் கனா' வருகிறதோ! பொறுப்புள்ள பிள்ளை

யாய் என்றைக்கடா நூறு ரூபாய் கொண்டு வந்து நீட்டப் போகிறாய்? ஏங்கி ஏங்கி உன் அம்மா செத்துப் போவதற்குள், நீ ஆசைப்பட்டது போல ஒரு புடவை வாங்கித்தர முடியுமா உன்னால்! அட! கோயில் குளத்துக்காவது கூட்டிப் போவாயா?

நீண்ட பெருமூச்சுடன் பாயைச் சுருட்டி வைத்து விட்டு எழுந்தான் தியாகு.

''கண்ணப்பா! இன்னிக்குப் பத்து மணிக்கு ராம் அண்டு ராம் கம்பெனியிலே உன்னை வரச் சொல்லி இருக்காங்க... ஞாபகம் இருக்கில்லையா? சிவராமன் மாமா ஆபீசுக்குக் கிளம்பறதுக்கு முன்னாடி அவரைப் போய்ப் பாத்துட்டு வந்துடு...''

அம்மா ஞாபகப்படுத்தினாள்.

சிவராமன் சார்தான் அக்கறையுடன் கேட்டு வந்து சொல்லியிருந்தார்.

''சரிம்மா...'

அம்மா அவனை ஆசையுடன் அழைக்கும்போது 'கண்ணப்பா,' 'ராஜையா,' 'செல்லப்பா' என்றெல்லாம் தான் சொல்வாள்.

எனக்காகவே உயிரை வைத்திருக்கிற ஜீவன். அட! அப்பாதான் இல்லை! மகனாவது நல்ல வேலையில் பொறுப்புடன் அம்மாவைக் கவனித்துக் கொள்கிறான் என்று ஊர் பாராட்ட வேண்டாமா? ச்சே! அதற்காவது ஒரு வேலை கிடைக்கக் கூடாதா?

பட்டும் பீதாம்பரமும் வேண்டாம். நல்லதாய் இரண்டு கைத்தறிச் சேலை வாங்கிக் கொடுக்க வேண்டாமா ஒரு மகன்?

மூன்று வேளை வயிறாரச் சோறு கிடைத்தால், அதுவே அம்மாவின் கவலையைத் தீர்க்கும்.

இப்போதெல்லாம் முட்டிவலி வேறு அடிக்கடி வந்து அவள் உயிரை எடுக்கிறது.

தியாகு அம்மாவின் மெலிந்த உருவத்தையே பார்த்தபடி பல் விளக்கப் போனான்.

யார் அந்தச் சொப்பனச் சுந்தரி? கல்லூரியில் பியூட்டி குயீன் அம்லா தீப்தி நினைவுக்கு வந்தாள். தியாகு என்றால் அம்லா தீப்திக்கு ஒரு மயக்கம்—இலேசான மயக்கம்—எப்போதுமே உண்டு.

எந்தச் சந்தேகம் என்றாலும், முதலில் தியாகுவைத்தான் வந்து கேட்பாள்.

எந்தப் பெண் இந்தச் சொப்பனச் சுந்தரி? முகம் இலேசாக அடையாளம் தெரிகிற மாதிரியும் இருந்தது. மசமசப்பாக, மங்கலாக, அடையாளமே கண்டு பிடிக்க முடியாத அளவிலும் இருந்தது, உஷாவைப் போல... ஓ! உஷாதானா? ம்! பெண்கள் மீது நினைவு திரும்புகிறதா? ஒரு முழம் பூ வாங்கித் தர யோக்கியதை வரவில்லை... கல்யாணத்துக்கு ஆசைப்படுகிறாயா?

ஒரு வேளைச் சோறு கூடப் போட முடியாத புருஷனை எந்தப் பெண்தான் சகித்துக் கொள்வாள்?

மரகதம் நினைவுக்கு வந்தாள். சிவராமன் சார் பொழுதுக்கும் உழைக்கிறார்; வருகிற சம்பளத்தை விள்ளாமல், விரியாமல் அப்படியே கொண்டு வந்து கொடுக்கிறார்.

மரகதம் என்ன மகிழ்ச்சியா அடைகிறாள்?

வெடுவெடுக்கிற அவள் முகமும், சிடுசிடுப்பான சொற்களும், கணவனைக் கண்டதுமே எகத்தாளமாகக் கடுகடுக்கிற அவள் இயல்பும்... சீ! பொண்ணா அவள்?

கனவு மயக்கங்கள் கலைந்து போக, மொட்டை மாடிக்குத் தன் கர்லாக் கட்டையுடன் விரைந்தான் தியாகு.

கல்லூரி நாள் பழக்கம்... எது எப்படி ஆனாலும், காலையில் அரை மணி நேரம் கட்டாயம் தேகப் பயிற்சிக்காக ஒதுக்கியே தீரவேண்டும் என்பது அவன் கொள்கை...

□

தெரு விளக்குகள் பளிச்சென்று எரியத் தொடங்கின. தியாகு நிதானமாக நடக்க ஆரம்பித்தான்.

வழியில் சந்தித்த நண்பன் எதிர்த்திசையில் நடக்க ஆரம்பித்தான்.

தியாகு கல்லூரி நாளின் இனிமையை எண்ணிய படியே வேகமாக நடக்க, குப்பைத் தொட்டியின் ஓரம் பதுங்கியிருந்த நாய்க்குட்டி ''என்ன ஆச்சு இவனுக்கு?'' என்கிற மாதிரி பார்க்க ஆரம்பித்தது.

சாலையில் அவ்வளவாகக் கூட்டம் இல்லை.

''அண்ணா! அண்ணா!''

தியாகு யார் இத்தனைப் பதட்டத்தோடு அழைப்பது என்று திரும்பிப் பார்த்தான்.

பொன்னி...

தலைவிரி கோலமாக ஓடிவந்து கொண்டிருந்தாள். இடது கையில் பாவாடையைத் தூக்கிப் பிடித்திருந்தாள். வலது கையில் இரண்டு செருப்புகள்.

"என்ன பொன்னி? என்னம்மா?"

ஓநாயின் வேகத்தோடு பின்னே ஒருவன் ஓடிவந்து, தியாகுவைப் பார்த்து, சடன் பிரேக்குப் போட்டு நின்றான்.

பொன்னி 'ஸ்ஸ்ஸ்ஸ்' என்று மூச்சிரைக்க நின்று கொண்டிருந்தாள்.

"அ... அண்... அண்ணா! அவன்... அவன்... என்னை..."

தியாகு புரிந்து கொண்டான்.

எட்டி ஒரு பாய்ச்சல் பாய்ந்ததில் வந்தவன் கிராப்பு தியாகு கையில் பிடிபட்டது.

"ஆ..." அந்தப் போக்கிரியின் கத்தல் நாயின் ஊளையொலி போன்றே இருந்தது.

"ஏண்டா? பொண்ணு தனியா வந்தா, இப்படில்லாம் துரத்திக்கிட்டு வரச் சொல்லுதா? ராத்திரி ஏழு மணிக்கே பொம்பிளைங்க தனியா வர முடியாதா? என்ன திமிருடா?"

ஒரு கையால் தலையை நிமிர்த்தி, மறுகையால் "ர்ர்ர்ரப்ப்" என்று அறைந்தான் தியாகு. மிருதங்கத்தின் அதிர்வு அவன் கன்னத்தில் கேட்டது.

அந்தத் தரங்கெட்ட வாலிபனுக்குப் பயப்படுகிற பெண்கள் பின்னாடியே துரத்திப் போய்க் கிண்டல் செய்துதான் பழக்கம்.

இப்படி அடிபட்டுப் பழக்கமில்லை... பெரும்பாலான சோம்பேறிகள் இப்படித்தானே? நெருக்கிப் பார்ப்பது—இடித்துப் பார்ப்பது—ஆவேசமாய் அவள் பொங்கி

எழுந்தால், அடுத்த ஸ்டாப்பிங்கில் இறங்கிக் கொள்வது...

வார்த்தை தருகிற வலிக்கே பயப்படும் ஈன ஜென்மங்கள் அடி தருகிற அவஸ்தையை அனுபவிப் பார்களா?

தியாகு பிடியிலிருந்து திமிறி வெளிவரப் பார்த்தான் அந்தப் போக்கிரி. மேலும் அறைகள் விழுந்தன.

தேகப்பயிற்சியும், முறையான பழக்க வழக்கங்களும் அவன் உடம்பைத் தேக்கு மரமாய்த் தீட்டி வைத்திருப் பது வாங்கிய ஒன்றிரண்டு அடிகளிலேயே புலப்பட்டு விட்டதால், அந்தப் போக்கிரி வாலிபன் திருதிரு என்று விழிக்கத் தொடங்கினான்.

கண்ணோரம் தண்ணீர் தத்தளிக்கக் கெஞ்சினான். "சார்! சார்! விடுங்க சார்! இந்தப் பொண்ணு யாருன்னே தெரியாமே கலாட்டா பண்ணிட்டேன்"

வெறுப்பில் உதட்டைச் சுழித்த தியாகு பிடியை விட்டான். சற்றுத் தொலைவு போனதும்தான் அவன் பயமே தெளிந்தது.

"ஏண்டா டேய்! அப்பன்காரனும், புள்ளைக்கார னும் டிராமாவாடா ஆட்றீங்க? அவன் என்னன்னா கால் மேல கால் போட்டுக்கிட்டு, சீமான் கணக்கா, தொழில் பண்றான். ஊருப் பொண்ணுங்க அவ்வளவு மலிவா ஆயிட்டாங்களா உங்களுக்கு? உன் தங்கச்சியை மட்டும் நீ உத்தமியாவே நிக்க வெச்சுடுவியா? ஏன்? ஒங்கப்பனே ஒரு நாள் லாட்ஜுக்குக் கூட்டிக்கிட்டுப் போயி, பெரிய கைக்கு வுடப் போறான் பாரு..."

"அடி செருப்பாலே..."

தியாகு பாய்ந்தோடினான்.

''அண்ணா! வேண்டாம்னா! விடுண்ணா!''

விக்கலும், வேதனையுமாகப் பொன்னி வழி மறித்தாள்.

தியாகுவின் வேகம் கண்ட அந்தத் தறுதலை பாய்ந்து குதித்து, எந்தத் தெருவிலோ புகுந்து மறைந்து போனான்.

''வா பொன்னி;''

நடக்கத் தொடங்கினான் தியாகு. நான்கு அடிகள் எடுத்து வைத்ததும்தான் தெரிந்தது. பொன்னி பின்னால் வரவில்லை என்பது...

''பொன்னி! வாம்மா!''

''அண்ணா! அவன் என்ன சொல்லிட்டுப் போனான்? ஏண்ணா அப்படிச் சொல்றான்? நான் என்ன தப்புன்னா பண்ணினேன்? ஏன் இவன் என்னை வெறிநாய் மாதிரி பின்னாடியே தொடர்ந்து வந்துக்கிட்டிருக்கிறான்?''

தியாகு எதுவும் சொல்லவில்லை; தலை குனிந்து நின்றிருந்தான்.

''எங்கப்பாவைப் பத்தி என்ன சொன்னான் அண்ணா? எனக்கு எதுவும் புரியலையேன்னா? நான் என்ன தப்புண்ணா பண்ணேன்?''

''நீ அயோக்கியச்சிகாமணி மாணிக்கத்துக்கு மகளாப் பொறந்தியே அதுதாம்மா நீ செய்த பெரிய தப்பு... ஆமாம்மா. இப்போ ஒரு நிமிஷம் முந்தி, அந்தப் பாவத்துக்கே நான் ஏழுதரம் கங்கையிலே முழுகணும்!''

''அண்ணா? என்னண்ணா சொல்றீங்க?''

பொன்னியின் உதடுகள் ஒன்றுடன் ஒன்று பகை கொண்டு பிரிந்து நின்றன. விழிகள் வியப்பால் விரிந்தன.

தியாகு ஒரு முடிவுக்கு வந்தான். சமுதாயத் தீமை களை அழிக்க எவனோ ஒரு யுகப் புருஷன் வருவான் என்று ஊரும், உலகமும் எதிர்பார்த்துக் காத்துக் கிடப்பது மடமை.

நாமே வாளைத் தூக்குவோம்! ஓ சாத்தானே! வா! என் எதிரில் வா! நான் தீர்மானித்து விட்டேன். என் கையில் வாளேந்தத் தீர்மானித்து விட்டேன். வாடா! வா!

"பொன்னி! அவன் சொன்னது உனக்கு விளங் கிச்சா?"

"என்னமோ அப்பாவைக் கேவலமாச் சொன்னான். அது தெரியுது, ஏண்ணா? அப்படிச் சொல்றான்?"

"ஒங்கப்பாவுக்கு என்ன வேலைம்மா?"

"கமிஷன் மண்டின்னுவார்... கொத்தவால் சாவடி யிலே..."

"ம்ம்"

வெறுப்பாகச் சிரித்தான் தியாகு.

அதே நேரம் பொன்னியின் தாய் சுந்தரவல்லியின் நினைவு வந்தது.

மஞ்சள் பூசிய முகம், நெற்றியில் பெரிய குங்குமப் பொட்டு, கண்ணியமான பேச்சு—அன்பான அணுகு முறை—எவரிடமும் அன்பாக, மரியாதையாகப் பேசுகிற குணம்.

தியாகுவுக்குச் சிரிப்பு வந்தது, மாணிக்கத்துக்குத் தான் என்றில்லை.

ஊரைச் சுருட்டி உலையில் போடும் அயோக்கியச் சிகாமணிகளுக்கெல்லாம் அன்பான, அருமையான மனைவிகள்!

கடவுளுக்கு ஏனோ இந்த வக்கிரபுத்தி. ஏன் அவர் இப்படிப் பண்ணுகிறார்?

''பொன்னி! நீ என்ன இப்பப் பிளஸ் ஒன் படிக்கிறியா?''

''ஆமாம் அண்ணா.''

தியாகுவுக்கு அவள் பத்தாண்டுகளாக இதே பாசத்துடன், இதே மாதிரி அண்ணா என்கிற வார்த்தையை நீட்டி முழக்கிக் கூப்பிடுவது நினைவுக்கு வந்தது.

''பொன்னி!''

''அண்ணா!''

அவன் நடந்தபடி மெல்லிய குரலில் அவள் அப்பாவின் ''கமிஷன் மண்டி''யைப் பற்றிச் சொல்லத் தொடங்கினான்.

ஆந்திராவின் ஒரு குக்கிராமத்தில் இருந்து, கமல் ஹாசனைப் பார்க்க வந்த இரு சிறுமிகளை—என்ன ஒரு பத்தாம் வகுப்புப் படிக்கிற பெண்களாக இருக்கலாம்...

மடக்கிக் காரில் போட்டு எடுத்துப் போய், பம்பாய்க் காரிக்கு விற்றதைப் பற்றிச் சொன்னான். போலீசுக்குப் பலமுறை தகவல் தெரிவித்த போதிலும், கையெழுத்தில்லை என்பதால் அவர்கள் அலட்சியப்படுத்துகிறார்கள் என்கிற கவலையைத் தெரிவித்தான். போலீசுக்கும் மாமூல் போவதால், அவர்கள் பிடிக்க விரும்பவில்லையோ என்கிற சந்தேகத்தையும் விளக்கினான். பழமையான அவரின் தொழிலை விவரித்தான்.

கற்சிலைப் போல இறுகிப் போயிருந்தாள். அப்பாவா? வெள்ளி, செவ்வாய் வாரம் தவறாமல் கருமாரியம்மன் கோயிலுக்குப் போகிற தன் அப்பாவா? அவரா இப்படிச் செய்திருக்கிறார்?

அம்பாள், சரசுவதி, லட்சுமி படங்களுக்குத் தீப தூப நைவேத்தியம் காட்டும் அந்த அப்பாவா? அவரா? அவரா இப்படி ஒரு வழியில் பணம் சம்பாதித்து வருகிறார்? த்தூ? மூட்டை தூக்கிப் பிழைக்கலாமே! எதற்கு இப்படிப் பாவ மூட்டையைச் சேர்த்துக் கொள் கிறார்?

வீட்டுக்குப் போவதற்குள் பொன்னி வெகுவாக மாறிப் போயிருந்தாள்.

□

தியாகு சூரிய உதயத்தையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

அப்...பா! இந்த விடியற்காலைப் பொழுது என்ன இனிமையாக இருக்கிறது? பறவைகள் ஒலியும், மேகத் தின் வண்ணக் கோலமும், ஆரஞ்சுப் பந்துப் போன்ற சூரியப் பிழம்பின் தோற்றமும்... அடாடா!

இந்தச் சூரியன் இந்தியா முழுமைக்கும் புதுநாளை ஆரம்பித்திருப்பான் இல்லையா? உண்மையில் புதுநாள் தானே? அல்லது போன நாளின் மிச்சமா?

அதே தீமைகள்— அதே கொடுமைகள்— அதே அழுகைகள் இல்லாத புத்தம் புதுநாள் என்றைக்கு விடியும்?

தியாகுவுக்கு மாணிக்கத்தின் நினைவு வந்தது. இவனை மாதிரி ஆட்கள் திருந்துவார்களா? மாணிக்கம் ஊர்ப் பெண்களை எல்லாம் கொண்டு போய் விற்று

விடுகிறான். தன் பெண்ணைக் கோவில் சிலையைப் போல வைத்துக் காப்பாற்ற எண்ணுகிறான்! என்ன சுயநலம்?

போன வாரம் நடந்த நிகழ்ச்சி கண் முன்னே விரிந்தது.

பொன்னி பயந்து ஓடிவந்தது—அந்த வாலிபனைத் தியாகு துரத்தியது—அடிபட்ட ஆத்திரத்தில் அவன் உளறிவிட்டு ஓடியது—பொன்னி விளக்கம் கேட்டது—தான் விரிவாக எல்லாவற்றையும் சொன்னதும், அதிர்ச்சியில் பொன்னி உறைந்து போனது—

ம்ம்! அன்று என்னவோ சொன்னாளே!

''பாருண்ணா! எங்க அப்பாவை மாத்திக் காட்டறேன் பாரு! 'ஒழுங்கா, நல்லபடியா கைவண்டி இழுத்தாவது உங்களைக் காப்பாத்தறேன்'னு சொல்ல வைக்கிறேன் பாரு!''

தியாகுவுக்கு நம்பிக்கையே இல்லை.

''பொன்னி! சினிமாலே வேணும்னா எதுவுமே நிமிஷத்துலே நடக்கலாம்! ஒரே நொடியிலே வில்லன் நல்லவனா ஆயிடுவான். வாழ்க்கையிலே அத்தனைச் சுலபம் இல்லேம்மா! ஒநாய்ங்க ஒநாய்ங்களாவேதான் இருக்கும்!''

''பாருங்களேன்...''

சவால் விட்டாள் பொன்னி.

அன்று அவர்கள் இந்த விதமாகப் பேசிக்கொண்டு ஓட்டமும் நடையுமாக வீட்டுக்கு வந்தபோது, ஒன்றிரண்டு குடித்தனக்காரர்கள் ஒரு மாதிரியான புன்னகையை வீசிவிட்டு நகர்ந்தார்கள்.

''அண்ணா! வரேன்!''

என்றபடி பொன்னி தங்கள் போர்ஷனுக்குள் போனாள்.

தியாகு திரும்பினான்.

''நீயும், பொன்னியும் ஒண்ணா வந்தீங்க போல இருக்குது...''

''ஆமாம்! வழியிலே பாத்தேன். கூட்டிக்கிட்டு வந்தேன் ஆன்ட்டி!''

''ஆமாமாம்! தற்செயலா வழியிலே பாத்துட்டா, பின்னே விட்டுட்டா வந்துட முடியும்?''

நமுட்டுப் புன்னகையுடன் கோடிப் போர்ஷன்காரி நகர்ந்தாள்.

தியாகுவுக்குப் பற்றிக்கொண்டு வந்தது. 'த்தூ! என்ன ஜென்மங்களோ? கூடப் பொறந்த அண்ணன் தங்கையாவே இருந்தாலும் ஒரு மாதிரி பாத்தே பழக்கப்பட்டுட்ட புழு ஜென்மங்களா இதுங்க? அக்கம் பக்கம் வீடுங்கள்லே இருக்கிற பையனும், பொண்ணும் காதலர்களாத்தான் இருக்கணும்னு இதுங்களே முடிவு பண்ணிடறதா?'

தியாகுவுக்குப் பத்திரிகைகள், சினிமாக்கள் மீது கோபம் வந்தது.

பின்னே என்ன? அண்டை அயல் போர்ஷனில் இருப்பவர்கள் அண்ணன் தங்கையாகவும் பழகலாம் என்று எவன் இங்கே எழுதுகிறான்?

ஒரு காமப் பார்வை—இரண்டு காதல் பாட்டு—உடனே காதல் கடிதம்—அடுத்த நாள் மாமல்லபுரத்திற்

குப் பிக்னிக்—இப்படிக் கதை எழுதி எழுதி மனிதமனங் களை வக்கரித்துப் போகச் செய்கிறார்களே!

அம்மா வயதுக்காரியைக் கூட எழுத்தாணியால் குலைத்துப் பார்க்கிற வினோத வக்கிரம்தானே இவர்கள் எழுத்துக்களில் துள்ளி விளையாடுகிறது?

இப்படிக் கதை எழுதி எழுதி, இப்படிப் படம் எடுத்து எடுத்து, ஒன்றிரண்டு பாசப்பூக்களும் அண்டை அயல் பார்வையில் பொசுங்கி அல்லவா போய் விடுகின்றன?

"என்ன தியாகு? முகத்திலே எள்ளும், கொள்ளும் வெடிக்குது?" அம்மா வியப்புடன் கேட்டாள்.

தியாகு நடந்தவற்றை விவரித்தான்.

"பாவம் பொன்னி!" என்று அந்தத் தாயும் அனுதாபக் கண்ணீரைத்தான் அஞ்சலியாக்கினாள்.

இளம் வயதுப் பெண்ணுக்கு—அதிலும் அப்பா மீது ஏகப்பட்ட மரியாதை வைத்திருக்கும் ஒரு பெண்ணுக்கு, இது எப்படிப்பட்ட இடியாக வந்து இறங்கியிருக்கும்?

அம்மாவால் அந்தக் கஷ்டத்தைப் புரிந்து கொள்ள முடிந்தது.

தியாகு வெளியில் போகலாம் என்று சட்டையை எடுத்து அணிந்து கொண்டான்.

"அம்மா! கொஞ்சம் வெளியிலே போய்ட்டு வந்துட்றேன்! தாத்தா வந்தா சொல்லுங்க..."

"சரிப்பா..."

அழுகையும் புலம்பலுமாக ஓர் ஆவேசப் புயல் வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தது.

யார் அது? ஏன் இங்கே உள்ளே நுழைகிறாள்? தியாகு எட்டிப் பார்த்தான். பொன்னி... பொன்னி என்று தெரிந்ததும் வார்த்தையில் எழுத முடியாத சோகமும், அதிர்ச்சியும் அவனை ஆட்கொண்டன.

என்னவோ நடந்திருக்கிறது... என்ன விபரீதம்?

ஏன் பொன்னி இப்படிப் புலம்பிக் கொண்டே உள்ளே வருகிறாள்? என் நடந்தது?

பொன்னி விடுவிடுவென்று உள்ளே வந்து, தியாகு வின் எதிரே, சுவரில் சாய்ந்து உட்கார்ந்து காலைக் கட்டிக் கொண்டாள். முழங்கால் மேல் முகம் பதித்து அவள் உட்கார்ந்த தோரணையே, "இதோ அவள் அழப் போகிறாள்" என்று அறிவித்தது.

உள்ளே வந்தபோது இருந்த அத்தனை ஆவேசமும், அத்தனைக் கோபமும் வடிந்து விட்டதைப் போல, ஒரு சோர்வு வந்து கப்பிக் கொள்ள, பசி வேளையில் தாயை விட்டுப் பிரிந்து, திருவிழாக் கூட்டத்தில் தேடி அலையும் சிறுமியைப் போலத் தேம்பியழத் தொடங்கினாள்.

"பொன்னி! என்னம்மா? என்ன ஆச்சு?" தியாகு கேட்டான்.

உள்ளே சமையல் அறையிலிருந்து தியாகு அம்மா ஓடோடி வந்தாள்.

"என்ன கண்ணு? என்ன ஆச்சும்மா?"

அவள் பதில் பேசவில்லை.

மாணிக்கமும், சுந்தரவல்லியும் உள்ளே பரபரப் புடன் நுழைந்தார்கள்.

"பொன்னி! பொன்னி! என்னம்மா இது?"

"எது?"

பொன்னியின் ஆத்திரம் முழுக்க "எது?" என்று கேட்ட விதத்திலேயே தெரிந்தது.

"நீ பண்றதுதான்! உனக்கே இது நல்லா இருக்கா?"

"ஏம்பா? என்னைப் பாத்தா கேக்கறீங்க? நீங்க பண்றது, முதல்லே உங்களுக்கு நல்லா இருக்கா?"

எதிர்க் கேள்வி கேட்ட மகளை மாணிக்கம் பார்த்த பார்வையில் குழப்பமும், தயக்கமும் தெரிந்தன. ஓர் அவமானத்தின் ரேகை ஓடி மறைந்தது.

"சரி! அதுக்காக..."

"ஆமாம்ப்பா! உங்க பழக்க வழக்கத்தை நீங்க மாத்திக்க விரும்பலைன்னா, நானும் என் பழக்க வழக்கத்தை மாத்திக்க விரும்பலை!"

பாவாடை, தாவணியில் தங்கப் பதுமையைப் போலப் பளபளக்கும் மகளைத் தயக்கத்துடன் பார்த்து விட்டு குனிந்து கொண்டான் மாணிக்கம்.

பொன்னி அன்றைய விவகாரத்தைத் தெளிவாக விவரித்திருக்கிறாள். தந்தையின் சிறுமைக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தி இருக்கிறாள்.

"என்னமோ நீதான் பெரிய இவ மாதிரிப் பேசறியே. அவன் அவன் ஆயிரம் தொழிலு செய்வான். குடும்பத்தைக் காப்பாத்த நூறு தில்லு முல்லு பண்ணுவான். அப்புறம் வயித்துக்கு எப்படிக் கொட்டிக்க முடியும்?"

"அப்பா! நீங்க இந்த மாதிரி ஈனத்தொழில் பண்ணி எங்களைக் காப்பாத்த வேண்டாம். அந்த மாதிரியான அசிங்கப் பணத்துலே நாங்களும் எங்க வயித்துக்குக் கொட்டிக்க வேண்டாம்!"

திடமாகத் தீர்மானமாகச் சொல்லி முடித்தாள் பொன்னி.

சுந்தரவல்லி திகைத்துப் போயிருந்தாள். இப்படியா சம்பாதிக்கிறார்? இதுதானா இவர் தொழில்? 'கொத்த வால் சாவடியில் கமிஷன் மண்டி' என்று இதற்குத்தான் பெயர் வைத்து விட்டாரா?

"அடப்பாவி! மூட்டை தூக்கியாவது பொழைக்கக் கூடாதா? இதுவும் ஒரு பொழைப்பா? பாவப்பட்ட ஜென்மமாப் போயிட்டனே! சமயம் கெடைச்சா, என்னையும் கொண்டு போயி இல்லே வித்திருப்பீங்க?"

சுந்தரவல்லி வாழ்க்கையில் ஆவேசப்பட்டது இது தான் முதல் முறை.

சிரித்த முகத்துடன் வகைவகையாகச் சமைத்துப் போட மட்டுமே தெரிந்த இவளுக்குக் கோபப்படவும் தெரியுமோ?

ஆத்திரத்தையும், அவமானத்தையும் தாங்கிக் கொள்ள முடியாத மாணிக்கம் தன் தவறை மறைக்க எகிறிக் குதிக்க ஆரம்பித்தான்.

"இந்தா! என்னங்கடி ரெண்டு பேரும் ஒப்பாரி வெச்சி மயான காண்டம் நடத்தறீங்களா? ஆம்பிளை இஷ்டம். அவன் குடிப்பான், கூத்தியா வெச்சிப்பான். என்ன தொழிலு புடிக்குதோ அதைச் செய்வான்! அதுலே பொட்டைக் கழுதைங்களுக்குத் துணிச்சல் எங்கேருந்து வருது, இதை மாத்து, அதை மாத்துன்னு சொல்ல... அவ்வளோ பெரீய ஆளாயிட்டீங்களா?"

அன்று ஆரம்பித்தது அவனுக்கு அவஸ்தை. கோப மான வார்த்தைகள் இருதரப்பிலும் வீசப்பட்டன.

''ஏன்யா? நீயெல்லாம் ஒரு அப்பன்தானா? ஊர்ப் பொண்ணுங்க பாவம் உன் பொண்ணை வாழ விடுமா? கொஞ்சமாவது ஒடம்புலே நல்ல ரத்தம் ஓடினா இந்த வேலை செஞ்சி, காசு சம்பாதிப்பியா? த்தூ!''

சுந்தரவல்லி கிணற்றில் விழவே போய்விட்டாள். ஓடிப்போய், பொன்னி அவள் காலைக் கட்டிக் கொண்டு கேவினாள்.

''என்னை விட்டுட்டாம்மா? என்னை விட்டுட்டா? இந்த மாதிரி ஒரு அப்பாக்கிட்டே என்ன தைரியத்துலே விட்டுட்டுப் போறேம்மா?'

கதறினாள் பொன்னி. அவள் அழுகையைப் பார்த்ததும், சுந்தரவல்லியின் தாய்மை மேலோங்கியது. ஒரு வார்த்தை கூடப் பேசாமல், உள்ளே வந்துவிட்டாள் சுந்தரவல்லி.

அழுதும், தொழுதும் ஒரு வாரமாக, மாணிக்கத்தின் மனத்தை மாற்றப் பார்த்தார்கள் இரண்டு பெண்களும்!

''எல்லாம் சரி பொன்னி! நீ பாட்டுக்கு வீட்டோடு இருக்க வேண்டியதுதானே? என்னை வேவு பாக்க நீ ஏம்மா அங்கெல்லாம் வந்தே?''

''எங்கேல்லாம்...'' பொன்னி கிண்டலாகக் கேட்டாள்.

''அதுதான்! அ... அந்த... அந்த இடங்களுக்கெல் என்னைத் தேடிக்கிட்டு ஏன் வரே?''

ஒன்று கிடக்க ஒன்று ஆகிவிடப் போகிறதே என்கிற பயத்தை வெளிப்படையாகச் சொல்லிவிட முடியுமா என்ன?

மாணிக்கம் பயந்ததெல்லாம் அவன் கூட்டாளி பாலசுந்தரத்துக்குத்தான்.

பாலசுந்தரம் ஒண்ணாம் நம்பர் அயோக்கியன். காசு கிடைக்கிறதென்றால் எந்த அக்கிரமும் செய்யக் கூடியவன்.

பம்பாயில் சம்பா "வேறு பெண்களைக் கொண்டுவா! லட்டாட்டம் பெண்களைக் கொண்டு வா" என்று ஆள் மேல் ஆள் அனுப்பிக் கொண்டிருக்கிறாள்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில், பாலசுந்தரம் பார்வையில் பொன்னி பட்டுவிட்டால்...

ஒன்றையும் புரிந்து கொள்ளாமல், இந்தப் பெண் என்னடா என்றால், குடுகுடுவென்று அங்கே ஓடிஓடி வருகிறதே! மக்கு! ஒன்று கிடக்க ஒன்று நேர்ந்து விட்டால்...?

மாணிக்கம் வெளிப்படையாகச் சொல்ல முடியுமா?

"சரிசரி! எழுந்து வாம்மா! நம்ம வீட்டுக்குப் போவோம்..."

தியாகு தங்களை வேடிக்கைப் பார்ப்பதை எரிச்சலுடன் ஓரக் கண்ணால் ஒரு பார்வை பார்த்துக் கொண்டான் மாணிக்கம்.

இவன்தான்... இவனால்தான் எல்லாம் ஆரம்பம். இருக்கட்டும். எங்கே போய்விடுவான்? வேளை வராமலா போய்விடும்?

மனசுக்குள் கறுவிக் கொண்டான் மாணிக்கம்.

"அண்ணனைப் பாத்து ஏம்ப்பா முறைக்கறீங்க? அண்ணன் என்ன தப்பு பண்ணிச்சு? ஒரு அயோக்கியன்

என் பின்னாலியே கலாட்டா பண்ணிக்கிட்டு வந்தானே, அவனை அடிச்சி விரட்டினது தப்பா?''

''அதைச் சொல்லலேம்மா''

''உங்க விஷயம்லாம் அந்தக் கழுதைக்குத் தெரிஞ்சிருக்குது, ம்! இன்னும் எவன் எவனுக்குத் தெரிஞ்சிருக்குதோ? ஆனா ஒண்ணு! ஊர்ப் பொண்ணுங்க பாவத்தைக் கொட்டிக்கறீங்களே. அது எல்லாம் சும்மா விடுமா என்ன? உங்க பொண்ணு மட்டும் நல்லா வாழ்ந்துடுவளா என்ன?''

குரோதமாக அவளைப் பார்த்தான் மாணிக்கம்.

இரத்தம் தெறிக்க எப்படிப் பேசுது பார்? இந்தப் பொண்ணு கட்டின பசு மாதிரி இல்லே இருக்கும் முன்னெல்லாம்! இப்போப் பாரு...

''ஏம்மா? சீக்கிரம் எழுந்து வாம்மா வீட்டுக்கு.''

''ஏன் வரணும்? அங்கே வரமாட்டேன். அம்மா தலையெழுத்து அந்த வீட்டுலேதான் இருந்தாகணும்!''

''எங்கே இருக்கப் போறே?''

''ஏன்? இங்கே இருக்கப் போறேன்! எந்தப் பொறுக்கியாவது வாலாட்டினா அண்ணன் சும்மா இருக்காது. படீர் படீர்னு நாலு குடுக்கும்''

''ஏன் அதை நான் குடுக்கமாட்டனா? என் கை மட்டும் புல்லுப் பறிக்கவா போயிருக்கும்?''

''உங்க கைக்கு... ம்! உங்க கைக்கு அடி குடுக்கிற ஆக்ரோஷம் வராதுப்பா. கமிஷன் காசு கிடைக்கிற மாதிரி இருந்தா, டக்குன்னு கை கமிஷனுக்கு நீண்டுடும். என்னையே ஏதாவது ஒரு பலவீனமான நிமிஷத்துலே பலி குடுத்துட்டு, பத்தாயிரம் பன்னண்டாயிரம்

கிடைச்சா வாங்கிக்கிட்டு திரும்பி வந்திடுவீங்க, சொல்ற துக்கில்லே.''

துடித்துப் போனான் மாணிக்கம், நடுத்தெருவில் யாரோ அவனை நிறுத்தினார்கள். யாரோ இடுப்பு வேட்டியை உருவிக் கொண்டார்கள். யாரோ சவுக்குக் கொண்டு வந்து வைத்தார்கள்.

யாரோ அதை எடுத்து அடிக்க ஆரம்பித்தார்கள்.

சுளீல்... சுளீல்... சுளீல்... துடித்துப் போனான் மாணிக்கம்.

''அய்யோ... அய்யோ... தாங்கமுடியலையே! கடவுளே!''

மாணிக்கம் வாய்விட்டு அழுதான்.

தியாகு பிரமித்து நின்றான், அம்மாவைத் திரும்பிப் பார்த்தான். அவளும் பெரும் வியப்பில் இருப்பது தெரிந்தது.

பிறகு என்ன? இவ்வளவு சின்னப் பெண்ணுக்குள் இப்படி ஒரு போராடுகிற குணமா? பரவாயில்லையே... விடாமல், பிடித்த பிடியை விடாமல் துணிச்சலோடு போராடுகிறாளே!

ஒரு கணம் தியாகுவுக்குச் சந்தேகம் வந்தது.

இந்தப் போராட்டத்தில் பொன்னி ஜெயிப்பாளா? அடுத்த நிமிஷம் அவனுக்கு மிகமிகப் பிடித்த விவேகானந்தர் உருவம் மனத்துக்குள் எழுந்தது. கையைக் கட்டிக்கொண்டு தீர்க்கமாகப் பார்க்கிற அந்த மகான்...

''உன்னைப் பலவான் என்று நினைத்தால், பலவான் ஆவாய். உன்னைப் பலவீனன் என்று நீ நினைத்துக் கொண்டால், பலவீனன் ஆவாய்.''

விவேகானந்தர் மந்திரம் போல் உச்சரித்தார். தியாகு சிலிர்த்தெழுந்தான்.

இவள்-நியாயத்திற்குப் போராடுகிறாள். தன்னைப் பலசாலி என்று திடமாக நம்பிக்கொண்டு இந்தப் போராட்டத்தை ஆரம்பித்திருக்கிறாள். இதில் நிச்சயம் ஜெயிப்பாள்.

விதி, விதி என்று பொறுத்துப் போக இவள் பழைமைவாதி இல்லை. விதியைத் தன் மதியால் மாற்ற முயலும் இளைய கரம் இவளின் கரம்...

இவள் சொல்வதுதான் நியாயம்!

தியாகு பெருமித உணர்ச்சியோடு, பொன்னியைப் பார்த்துப் புன்னகைத்தான்.

தன் பிரச்சினையைத் தானே தீர்த்துக் கொள்வோம் என்கிற தன்னம்பிக்கை, உற்சாகம், விடாமுயற்சி ஒவ்வொரு மனிதனுக்கும் வரவேண்டும்.

அர்ச்சனை மட்டும் செய்து விட்டால், ஆண்டவன் மகிழ்ந்து விடுவாரா என்ன?

கம்பீரமாக உயர்ந்து நிற்கிற பொன்னியைப் பார்த்துப் பூரித்து நின்றான் தியாகு.

எப்படியும் இவள் ஜெயித்து விடுவாள். இன்று... இல்லையேல், நாளை! நிச்சயம் இது நிச்சயம்!

□

''ஏண்டா தியாகு? ஆனந்த் எங்கே?''

''இது என்னடா கேள்வி? நான் பாத்தே ஒரு மாசம் இருக்கும்டா வாசு!''

''இப்பல்லாம் ஆனந்துப்பய எங்கேன்னே தெரிய மாட்டேங்குது! வேற ஏரியாவிலே வீட்டை மாத்திக்

கிட்டாங்களா? எப்பப் போனாலும் "அவன் எங்கே போயிருக்கான்னு தெரியாதுப்பா"ன்னு இந்த பதிலையே சொல்லிக்கிட்டிருக்காங்க அவங்க வீட்டுலே!"

"அடேய் வாசு! உன் கதையும் இதுதாண்டா! நீயும் ஏரியா மாறிப் போய்ட்டேன்னு வெச்சிக்கோ, அப்புறம் உன்னையும் கண்ணுலியே பாக்க முடியாது."

"ச்சீ! நான் ஒண்ணும் அப்படி இல்லேடா! என்னைச் சொல்லாதே! எங்கே போனாலும், எப்போன்னாலும், வாரத்துக்கு ஒரு தடவையாவது வந்து பாத்துட்டுத் தான் போவேன். இல்லேன்னா எனக்கு வேலையே ஓடாதுடா தியாகு."

வாசு தியாகு கையை அன்புடன் பற்றி இறுக்கிக்கொண்டான்.

அவனுடைய உள்ளார்ந்த பிரியமும், பாசமும் தியாகுவை நெகிழ வைத்தன.

உண்மையில் வாசு அப்படிப்பட்டவன்தான்.

"ஏன் தியாகு? நான் ஒண்ணு சொல்வேன். நீ கோவிச்சுக்கக் கூடாது, என்ன?"

"அப்படின்னா, நிச்சயமா, கோவிச்சுக்கக் கூடிய விஷயம்தான்! என்னடா வாசு? சொல்லுடா!"

"நீ... வந்து... நம்ப ஆனந்த் பத்தி ஒண்ணுமே கேள்விப்படலையா?"

"இல்லையேடா!"

"சத்தியமா?"

"இவன் ஒண்ணு. ஏண்டா? எல் கே.ஜி. பையனாடா நீ? ஒரு தடவை சொன்னா, புரியாதா?"

"நிஜமாவாடா தியாகு!"

"அட! ஆமான்டாங்கறேன்!"

"மூங்கில் முறிஞ்சு போகலாம்! தேக்கு முறியலாமா தியாகு?"

"நீ ஒதைபடப் போறே! ஒண்ணும் புரியலைடா!"

"நம்ம ஆனந்த்ங்கற தேக்கு முறிஞ்சு போயிட்டு தப்பா..."

"எ...எ...என்னடா? என்னடா பாவி சொல்றே?"

"ஆமாம்! தியாகு! 'நாளை'ங்கற ஒரு நாள் வரும்ங்கற நம்பிக்கையிலே நாம நிக்கறோம். எம்.காம். முடிச்சிருக்கேன்—டைப்பிங் தெரியும்—ஷார்ட்ஹாண்ட் தெரியும்—அட! நாளைக்கு, இல்லேன்னா அடுத்த நாளைக்கு—இல்லேன்னே வெச்சுக்கோ, அதுக்கும் அடுத்த நாளைக்கு—நிச்சயமா கிடைக்கும்னு நம்பி, நான் காத்துக்கிட்டு இருக்கிறேன். நீயும் அப்படித்தான்! ஆனா!"

"ஆனா என்னடா ஆனா?"

"ஆனந்த் காத்திட்டிருக்கத் தயாரா இல்லேடா... அவன் தன் பாதையிலே போகத் தயாராயிட்டான்."

"என்ன வாசு? என்னடா சொல்றே?"

"கள்ளச் சாராயம் சுந்தர மூர்த்தி கடையிலே அவன் இப்போ வேலை பாக்கறான். இன்னும் கொஞ்ச நாள்லே, அவனும் ஒரு கள்ளச் சாராய வியாபாரியா மாறினாலும் ஆச்சரியம் இல்லே!"

"நிஜம்மாவா? நிஜம்மாவாடா?"

"ஆமாம்! டெய்லர் கடைக்கு வருவானே குரு! அவன்தான் சொன்னான். நான்கூட முதல்லே நம்பலை. குரு என்ன மாதிரியான நல்ல பையன்னுதான் உனக்குத்

தெரியுமே! அவன் சத்தியம் பண்ணிச் சொல்றப்போ, நம்பாமே எப்படிப்பா இருக்க முடியும்?''

''இன்னொரு மாணிக்கமா மாறிடப் போறே'' தான் கிண்டல் செய்தது ஞாபகத்துக்கு வந்தது. தியாகுவுக்கு நெஞ்சு வலித்தது.

ஓ! ஆனந்த்! நீயா இப்படிப் பாதை மாறிவிட்டாய்? கஷ்டங்களால் மனிதர்களின் மனம் மாறலாம்; மறவர்களின் மனம் மாறலாமா?

''இன்னிய தேதிக் கஷ்டத்துக்குப் பயந்துக்கிட்டு, இன்னும் பெரிய கஷ்டத்தைச் சுமக்கத் தயார் ஆயிட்டானே? படுபாவி! அவங்க அப்பா, அம்மாவுக்குத் தெரிஞ்சா?''

வாசுவும், தியாகுவும் வருத்தப்பட்டுக் கொண்டிருக்க, அங்கே ஆனந்த் மனசாட்சியை அடகு வைத்துவிட்டு, சுந்தரமூர்த்தியின் காரில் கள்ளச் சாராயக் கேன்களைப் பட்டுவாடா செய்யக் கிளம்பிக் கொண்டிருந்தான். அவன் நடையில், செயலில் தடுமாற்றமோ, தயக்கமோ கொஞ்சமும் இல்லை...

□

''என்ன தியாகு?''

''ஒண்ணும் இல்லேம்மா! உலகத்தைப் பாத்தா எரிச்சல் எரிச்சலா இருக்கும்மா. என்னம்மா உலகம் இது? எவன்மா அவன் கடவுள்? ரொம்பவே கொடுமையா இல்லே இந்த உலகத்தோட சட்டங்களும், தீர்மானங்களும்!''

''ஏன் ராஜா இன்னிக்கு இப்படி ஒரு கோபம்?''

''என்னம்மா பின்னே? கை நிறைய சர்டிபிகேட்ஸ். பதக்கங்கள், படிப்பு இவ்வளவும் வெச்சிக்கிட்டு நாங்க காத்துட்டிருக்கிறோம். என் கூட டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட்டுக்கு வந்துக்கிட்டிருந்த பையன், சரியாவே அடிக்க வரலைன்னு வெறுத்துப் போயி, நின்னுட்டாம்மா அவன். நாலு இங்கிலீஷ் வார்த்தை எழுதினா, ஏழு தப்பு இருக்கும். இன்னிக்குப் பாக்கறேன். ஒரு பெரிய தனியார் கம்பெனியிலே அஸிஸ்டெண்ட் மானேஜரா வேலை பாக்கறாம்மா. அதே 'திருதிரு' பார்வை, ஒட்டைச் சிவிங்கி நடை...ம்! பி. ஏ. கூட இன்னும் முடிக்கலைன்னு நினைக்கறேன், அவன் அதிர்ஷ்டத்தைப் பாரும்மா!''

''ஒருத்தொருத்தரோட நேரம் அப்படிப்பா. பெத்தவ வயிறு புண்ணியம் பண்ண வயிறா இருக்கும். நீ இருந்திருந்து என் வயித்திலே இல்லே வந்து பொறந்தெ! உன் நேரம் என்னிக்குத் தொடங்குமோ?''

''நீ ஒண்ணும்மா. சரி...சரி... நாளைக்கு ஒரு இன்டர்வியூ இருக்குது, கொஞ்சம் ஜெனரல் நாலட்ஜ் பாத்துக்கணும். சோறு போடும்மா. பசிக்குது, வேலை கிடைக்குதோ இல்லியோ, வயிறு அதோட வேலையைத் தொடங்கிடுது...''

''சீ! நீயும் உன் பேச்சும். வாடாப்பா. உனக்குப் பிடிச்ச கத்தரிக்காய்த் துவட்டல் பண்ணியிருக்கிறேன். உருளைக்கிழங்கு வறுவல் எப்படி 'மொறுமொறு'ன்னு வறுத்திருக்கிறேன் தெரியுமா? வா! வந்து சாப்பிடு...''

அம்மாவின் அன்பு ததும்பி வழியும் கண்கள் நிலவின் கிரணங்கள் போல, அவன் மீது கவிந்தன...

ம்ம்! இந்தப் பாசத்திற்கு ஈடு இணை ஏது? அம்மா! நான் சம்பாதிச்சிட்டு வந்து நூறு நூறா உன்கிட்டே கொடுக்கணும். நீ உன் இஷ்டப்படி செலவு பண்ணனும். நல்லதா நாலு புடவை வாங்கிக்கிட்டு வந்து தருவேன், ஒன் கைக்குத் தங்க வளையலுங்க நாலு நாலு செய்து போடுவேன். மூக்குக் கண்ணாடி மாத்தணும்னு சொன்னியே... அழகா ரோல்டு கோல்டு பிரேமிலே மாத்தித் தருவேன்... அப்புறம்...''

''வாடாப்பா! கண்ணா!''

அம்மாவின் குரல் அழைத்தது. ம்! இவ்வளவு கனவுகளும் நிறைவேறுமா? நிச்சயம் நடக்குமா?

அம்மாவிடம் சம்பளத்தைத் தருகிற பாக்கியம் எனக்குப் போட்டு வைத்திருக்கிறதோ இல்லையோ?

பெருமூச்சா? அனல் மூச்சு... அம்மா! நீ பொறுமையின் இருப்பிடம். எப்படி நீ இவ்வளவு பொறுமையா இருக்கிறாய்? எனக்காக இல்லையென்றாலும், உனக்காகவாவது ஒரு வேலை எனக்குக் கிடைக்கக் கூடாதா?

தியாகு எழுந்து உள்ளே போனான். கண்கள் கசிவதை அம்மா பார்க்காத விதத்தில் துடைத்துக் கொண்டான்.

''ஏம்மா? பொன்னி ஒரு ரெண்டுநாள் அடமா நம்ம வீட்டுலேயே ஒக்காந்துக்கிட்டு இருந்ததே போன வாரம்... அப்புறம் என்ன ஆச்சி?''

''நீ வெளியூர் போயிருந்தே இல்லியா? அதுதான் தெரியலே... பிடிவாதமா இருந்தாப்பா பொன்னி... சுந்தரவல்லி தாலி கட்டின தோஷத்துக்கு, மாணிக்கம் கூப்பிட்டதும், தயங்கித் தயங்கிப் போனா... இந்த ஒரு

வாரமா மாணிக்கம் பழைய ஜபர்தஸ்துலே இல்லை. எவனும் காரைப் போட்டுக்கிட்டு வரவும் இல்லே..."

"மந்திரி மச்சான்னு ஒருத்தன் வருவானே..."

"ஊகூம்! எவனையும் காணோம்."

"பொன்னி இன்னுமா சாப்பிடாம இருக்கிறா?"

"அவதான் "போராட்டம் தொடங்கியிருக்கிறே"ன்னு தீர்மானமாக சொல்லிட்டாளே... நம்ம வீட்டுலே இருந்தாளே! சாப்பிடவே மாட்டேன்னுட்டாப்பா! நான்தான் பிடிவாதம் பிடிச்சி, ஒரு வேளையாவது சாப்பிடுன்னு சாப்பிட வெப்பேன்! இப்போ எப்படியோ?"

அநீதியை எதிர்த்து துணிச்சலாகக் குரல் கொடுக்கத் தொடங்கி விட்டதா பெண் இனம்? அட! சவலைக் குரலாகவே இருக்கட்டும்! நாளைக்குக் கொஞ்சம் கொஞ்சமாகக் குரல் உயர்ந்தால் உலகின் தீமைகள் உலுக்கப் படாதா?

"பொன்னி சொல்லிவிட்டாளாம் தியாகு... இன்னும் கொஞ்சம் நாள்தான் பாக்கப் போறாளாம், அப்பன்காரன் தன்னோட தொழிலை மாத்திக்கலைன்னா, தன்னோட போராட்டத்தை மாத்திக்கப் போறாளாம்!"

"என்னம்மா பண்ணப் போறாளாம்?"

"போலீசுலே சொல்லி, மாணிக்கத்தை மாட்டிவிட்டுடறதுன்னா நிமிஷத்துலே அதைச் செய்துடலாமாம். பெத்தவனாச்சேன்னு பாக்கறாளாம், மாணிக்கம் தன் வழியை மாத்திக்கலைன்னா, அவ தன் வழியை மாத்திக்குவாளாம், எங்கியாவது போயிடுவாளாம், அப்

புறம் கண்ணிலேயே காண முடியாதாம். முடிவாவே சொல்லிட்டா.''

பொன்னியின் போராட்டத்தையும், மன உறுதியையும் மனத்திற்குள் பாராட்டியபடியே அம்மாவைப் பின் தொடர்ந்தான் தியாகு...

☐

ஒன்றிரண்டு மாதங்களில் முருங்கை நன்றாக வளர்ந்திருந்தது... கணுவுக்குக் கணு பச்சைப் பசேல் என்று முருங்கைக் கீரை பளபளத்தது.

மேலும் இரண்டு மூன்று மாதங்கள் நகர்ந்தன.

முருங்கை செழிப்பாக வளர்ந்து விட்டது. குச்சியாக இருந்த அடிப் பகுதி இலேசாக அடி கனத்துத் தெரிந்தது. கப்பும் கிளையுமாகப் பச்சை இலைகளின் பரவசமான சாம்ராஜ்ஜியம்...

ஆனந்த் வீட்டின் வறுமை சுத்தமாகக் காணாமல் போயிருந்தது. ஆனந்த் தங்கை உஷா பட்டுப் பாவாடையில் ஜொலித்தாள். ஆனந்த் அம்மா இரட்டைவடம் சங்கிலியைக் கழுத்தை விட்டுக் கழற்றுவதே இல்லை. ஆனந்த் இப்போதெல்லாம் 'யமஹா'வில்தான் வீட்டுக்கு வருகிறான்... போகிறான்...

தியாகுவைப் பார்க்க நேரும்போது மட்டும் ஒரு தயக்கப் பார்வையுடன் தலையைத் தாழ்த்திக் கொள்கிறான்...

தியாகுவின் இதழ்க் கடையில் ஓர் ஏளனப் புன்னகை...

பாவி! படுபாவி! இப்படியாடா நீ மாறுவே? புலி எங்கேயாவது புல்லைத் தின்னுமா? ச்சே! இப்படி ஒரு

ஆபாசப் புழுதியிலே புரள்றதுக்கு எப்படிடா மனசு வந்தது? காலம் வராமலா போயிடும்? இப்படியாடா மனசு தளர்ந்து போயிடறது?

கோபப் பார்வையில் பகல் நேரச் சூரியன் தெரிந்தான். இதை விடவே அதிர்ச்சியூட்டுகிற செய்தியைக் கேட்கப் போகிறோம் என்பது தியாகவுக்குத் தெரியாது.

"ஏண்டாப்பா தியாகு, உன் பிரெண்டு ஆனந்த் இந்த அஞ்சாறு மாசத்துலே பெரிய ரவுடியா ஆயிட்டிருக்கிறான்ப்பா! ஆளைப் பாத்தா உனக்கு அடையாளம் தெரியவே தெரியாதுப்பா...அப்படி ஒரு குண்டாயிட்டிருக்கிறான். எந்த நேரமும் கூட நாலு ஆளுங்க... சகவாசம்லாம் ஒண்ணும் சொல்லிக்கிறா மாதிரி இல்லே!"

தாத்தா மெல்லிய குரலில், வருத்தத்துடன் சொன்னார். பல வருடங்களாகக் கூட்டுக் குடித்தனத்தில் வாழ்ந்து வருபவர்களாயிற்றே! கண்ணெதிரே ஒரு பிள்ளை வழி தவறிப் போகிறதே என்ற நிஜமான வருத்தம் அவர் குரலில் தொனித்தது.

தியாகுவுக்கு ஆனந்த் பற்றிய சங்கதிகள் உடம்பில் திராவகத் துளிகளாகப் பொசுக்கி எடுத்தன...

நாளைய உலகின் நம்பிக்கைப் பிரதிநிதிகள் ஒவ்வொருவராகப் போய்விட்டால் என்ன ஆகும்.

மண்ணிலே நீர் வறண்டு போனால், செடிகள், கொடிகள், மரங்கள் என்ன ஆவது? அட? புல்லுக்கும் அல்லவா பஞ்சம் வந்துவிடும்?

வெயிலின் கடுமை அவர்கள் குடியிருந்த வீட்டுப் பக்கம் அதிகமாகவே தெரிந்தது.

எங்கே இந்த மனிதர்கள் துண்டு இடத்தை விட்டு வைக்கிறார்கள்? வளைத்து, நெளித்து ஒரு போர்ஷன் கட்டி விடுகிறார்கள்...

காற்று எங்கிருந்து வரும்? மழை எங்கிருந்து வரும்? மரங்கள் நடுகிற பழக்கமே மறந்து போனால், இயற்கை தான் என்ன செய்யும்?

''ஏம்மா? ஆனந்த்தோட அம்மா, அப்பாவுக்குத் தங்களோட மகன் என்ன பண்ணி, எப்படிச் சம்பாதிக்கிறான்ங்கறது தெரிஞ்சிடிச்சின்னா என்னம்மா ஆகும்? மானத்தோட வாழறவங்களாச்சே!''

''ஆமாம்ப்பா! அவங்களாலே தாங்கிக்கவே முடியாதுதான்! எந்த அப்பா அம்மாவுக்குத்தான் தாங்கிக்க முடியும்?''

அம்மா முன்பு வேறு மாதிரியாக எண்ணம் ஒன்று வைத்திருந்தாள். அவளுக்கு எப்போதுமே உஷாவை மிகவும் பிடிக்கும். இந்தப் பையனுக்கு மட்டும் ஒரு வேலை கிடைத்துவிட்டால் போதும், நிம்மதியாக தைரியமாகப் பெண் கேட்டுப் போய் நிற்கலாம். தியாகு மாதிரி ஒரு பையன் கிடைக்கிறது என்றால், கசக்கிறதா?

இப்போது எல்லாமே கனவு போல் ஆகிவிட்டது... எந்த அப்பா அம்மாவால் தாங்கிக் கொள்ளவே முடியாது என்று நினைத்தார்களோ, அந்த அப்பாவும், அம்மாவும் யதார்த்தமாகச் சிந்தித்துப் பார்த்து, மிகச் சாதாரணமாகத் தாங்கிக் கொண்டார்கள்.

முதலில் அதிர்ச்சியாக இருந்திருக்குமோ என்னமோ, பிறகு சுகமான வாழ்க்கையை நினைத்துப் பார்த்து, நெய்யும் பருப்புமாகச் சாப்பிடும் உணவை நினைத்துப் பார்த்து உஷாவுக்கு அவன் செய்து போடுகிற கல்

வளையல்களைப் பார்த்து, வாய் மூடி மவுனிகளானார் கள்.

இதை வேண்டாம் என்றால், முன்பு போல் ரேஷன் வாங்கவே காசில்லாமல் தயங்கி நிற்கிற நிலைதான்! எண்ணி ஏழே நாளில் சம்பளப் பணம் தீர்ந்துவிட, யாரைக் கடன் கேட்பது என்று முகவாயைச் சொறிந்து கொண்டு, கிடக்க வேண்டும்.

இதயம் என்னவோ துடித்தது; ஆனால் வயிறுதான் ஜெயித்தது.

சத்தியங்களோடு, தேவதைகளோடு வாழ்ந்த அவர் கள் பேய்களோடு கூடிக் குலவி வாழக் கற்றுக் கொண் டார்கள்...



இரண்டு மூன்று ஆண்டுகள் ஓடி மறைந்தன...

வானத்தில் சூரியன் தெம்பாகப் பவனி வந்து கொண்டிருந்தான். பூமியில் மரங்கள் இலைகளை உதிர்த்து, இலைகளைச் செழித்து என்று மாறிமாறி காய்ந்தும், பூத்தும் காரியங்களை ஆற்றிக் கொண் டிருந்தன.

மக்கள் ஓர் ஆண்டு மழையின்றி தவித்தார்கள். அடுத்த ஆண்டு மழையாலேயே தவித்தார்கள்.

"அப்பா...! இந்த வருஷத்து வெயில் மாதிரி எந்த வருஷமும் இருந்தது இல்லைப்பா" என்று வருஷா வருஷம் பேசிக் கொண்டார்கள்.

தியாகு பால்கனியில் நின்று வெளியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். தெருவில் ஒரு பையன் சைக்கிளில் போய்க் கொண்டிருந்தான்.

ஓ! என்ன உல்லாசமான பருவம்! கவலையே இல்லாமல், பட்டாம்பூச்சிப் போல், பறந்த காலம்... அந்தக் காலம் திரும்ப வருமா? ஏக்கத்துடன் அவனையே பார்த்தபடி இருந்தான் தியாகு...

பட்டாம்பூச்சி என்று நினைத்ததும் உஷாவின் ஞாபகம் வந்தது தியாகுவுக்கு. ஊமை ஒருவன்—அதுவும் கையில்லாதவன் கண்ணால் பார்த்தபடி காவல் இருக்கிறான்! எதற்கு? வெண்ணெய்க்கு! அந்த வெண்ணெய் வெயில் கடுமையால், உருக ஆரம்பித்தால், அவன் எப்படித் துடிப்பான்? வாயோ கிடையாது. அதனால் பிறரை உதவிக்கு அழைக்கவும் முடியாது.

உருகும் வெண்ணெயைப் பாறை மேலிருந்து எடுக்கலாம் என்றால், கையோ இல்லை...

வகுப்பில் தமிழ் ஆசிரியர் பாடம் நடத்தியது நினைவுக்கு வந்தது.

அந்தக் கையில்லாத ஊமையைப் போலத்தானே தானும்... உஷா... உன் பெயரைச் சொன்னால், உதடுகள் தித்திக்கும். உன்னை ஒரு முறை பார்த்தால் உள்ளத்துக்குள் சந்தோஷ ஊற்று 'குபுக்' என்று பொங்கத் தொடங்கும். நாம் பக்கத்துப் பக்கத்துப் போர்ஷனில் இருந்தபோது, வழியில் சந்தித்தால், விழியில் உன்னை அள்ளிக் கொள்வேன்.

சம்பாத்தியமே இல்லாதவனுக்கு, காதல் ஒரு கேடா? அறிவு தடைபோடும். அகன்று போய் விடுவேன்...

உன் அண்ணன் ஆனந்த் எங்கள் நட்பு வளையத்தை விட்டே வெளியில் போய்விட்டானே! திருத்தவே முடியாத தீய சகவாசத்தில் அழிந்துவிட்டானே. இனி

எப்படி நான் என் ஆசையை அம்மாவிடம் சொல்வேன்? இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்னாலேயே மனப் பெட்டகத்தில் உன் சுகந்த நினைவுகளைப் போட்டு மூடிவைத்து விட்டேனே... இனி அந்தப் பெட்டகம் இறுகிய பெட்டகம்...

தியாகு என்னென்னவோ சிந்தித்தபடி நின்றிருந் தான்.

இப்போதுதான் காலச் சக்கரம் மாறிவிட்டதே! அம்மாவிடம் ஆசையைச் சொன்னால் என்ன? அண்ணன் வழி தவறிய ஆடாக மாறிவிட்டதற்கு உஷாவா பொறுப்பு?

தியாகுவுக்குப் புதிய உற்சாகம் ஊற்றுப் பறித்தாற் போலக் கிளம்பியது.

"அம்மா! அம்மா! டயம் ஆயிட்டுதும்மா..."

"வந்துட்டேம்ப்பா."

தியாகு வெளியில் வந்த அம்மாவை மனநிறைவுடன் பார்த்தான்.

வெள்ளை நிறக் காஞ்சீபுரம் பட்டுப்புடவை— ஆரஞ்சு வண்ணப் பார்டர்—அம்மா கையில் நான்கு தங்க வளையல்கள். காதில் புஷ்பராகம் வைரம் போல் ஜொலித்தது. எப்போதும் ஒரு சோர்வு கப்பியிருக்குமே- அந்தப் பனி மூட்டம் விலகி, இப்போது பளிச்சென் றிருந்தாள்.

சில ஆண்டுகளுக்கு முன்னால் முந்நூறு ரூபாய் வாடகையில் ஒண்டுக் குடித்தனத்தில் இருந்த அம்புஜமா என்ன?

ம்கூம்! அப்படிப் பெயரைச் சொல்லி விசாரித்தால், அக்கம்பக்கத்தில் இருக்கிறவர்களே கூட அடிக்க வந்து விடுவார்கள்.

இப்போது வெறும் தியாகுவின் அம்மாவா என்ன?

பதிப்பாளர் தியாகராஜனின் அம்மாவாயிற்றே! அதுமட்டுமா? இரத்தத்தில் பிறந்த சமூக சேவை உணர்வு அவனை இப்போது முன்னிலும் தெம்போடு நான்கு பேருக்கு உதவ வைத்தது. அதனால் அந்தப் பகுதி பாரதிதாசன் நற்பணி மன்றத்தினர் அவனைக் கெஞ்சிக் கூத்தாடித் தலைவராக இருக்கச் சொல்லிக் கேட்டுக் கொண்டார்கள்.

அம்மா முகம் இருள் படிந்தாற் போல் ஆயிற்று. உள்ளே கூப்பிட்டாள்.

''ஏம்ப்பா தியாகு? இதெல்லாம் தேவையா?''

''ஏம்மா?''

''இல்லே... இப்பத்தான் ஒரு நிலைக்கு வந்திருக்கிறே இந்த நேரத்திலே எதுக்கு வீண் வம்புன்னுதான்!''

''பொய்யி! ஏம்மா! மாமாவைத்தானே நினைச்சிக்கிட்டீங்க? உண்மையைச் சொல்லுங்க...''

அம்மா திரும்பிக் கொண்டாள். தியாகு பார்க்காத நேரம் முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டாள்.

''இதோ பாருங்கம்மா! மாமாவை நினைச்சிப் பெருமைப்படுங்க! நம்ம ரத்தத்திலே சமூக சேவைன்றது கலந்து போயிருக்கும்மா.''

''அதுக்கில்லேடா...''

''மாமாவுக்கு ஏற்பட்ட கதி எனக்கு ஆயிடுமோன்னு பயப்படறீங்களா? அப்படி ஆகணும்னு சட்டமா என்ன?

இப்பல்லாம் ரொம்ப பேரோட முதுகெலும்பு நிமிர்ந்து டிச்சிம்மா! தைரியமா கேள்வி கேக்க ஆரம்பிச்சிட் டாங்க. அதனாலே, மாமாவைத் தனியா யுத்த களத்திலே அனாதரவா விட்டுட்டாங்களே, அது மாதிரி யான நிலைமை இனிமே வராதும்மா! நீங்க அந்தப் பயம்லாம் மனசிலே வெச்சிக்காதீங்க...''

அம்மாவால் என்ன சொல்ல முடியும்? தியாகுவின் பிடிவாதம் அவளுக்குத் தெரியாத ஒன்றா என்ன? மூன்று நான்கு ஆண்டுகளுக்கு முன் சான்றிதழ்களைக் கிழித்துப் போட்டானே, அப்போதும் இதே மாதிரி தானே தீர்மானமாகப் பேசினான்?

''அடேய்! அடேய்! என்னடா காரியம் இது?''

'''காரியம்' தாம்மா! இந்தப் பேப்பருங்களை வெச்சிக்கிட்டு ஒண்ணும் சாதிக்க முடியாதுன்றது இப்பத்தாம்மா புரியுது... வெறுமனே குமாஸ்தாக்களை உருவாக்கற கல்வித் திட்டம்தானேம்மா இது? போதாத துக்குப் பணக்கார அப்பனுங்க ரொக்கம் கொடுத்துப் புள்ளைங்களுக்கு வேலையும், பொண்ணுங்களுக்கு மாப்பிள்ளையும் புடிக்கிற நாடா இது கேடு கெட்டுப் போயிட்டுது. இந்தச் சூழ்நிலையிலே நான் பைத்தியக் காரனா இல்லே இத்தனை நாளும் ஒக்காந்துக்கிட்டு இருந்துட்டேன்...இவன் யாரும்மா எனக்கு வேலைதர... நான் தருவேன் பாருங்க நாலு பேருக்கு வேலை...''

தியாகுவை அச்சத்தோடு பார்த்தாள். பெற்றவளா யிற்றே. சொல்ல முடியாத பலப் பல கவலைகள்...

என்ன இது? வருத்தப்பட்டு, வருத்தப்பட்டு இவனுக்கு மூளை கலங்கி விட்டதா? பேய்ச் சிரிப்புச் சிரிக்கிறானே! அய்யோ... புருஷனால் சுகப்படத்தான்

கொடுத்து வைக்கவில்லை. கூடப் பிறந்தவன் அன்பும் தான் பறிபோய்விட்டது...

பெற்ற பிள்ளையாவது கடைசி வரைக்கும் கண் கலங்காமல் வைத்துக் கஞ்சி ஊற்றுவான் என்று நினைத் திருந்தால்... கடவுளே!

''என்னம்மா அப்படிப் பயந்து பாக்கறீங்க? என்னடா நம்ம புள்ளைக்குப் பயித்தியம் கியித்தியம் புடிச்சிட்டுதோன்னு நடுநடுங்கி நின்னுட்டீங்களா? எனக்கு ஒண்ணும் இல்லேம்மா. நான் நல்லாத்தான் இருக்கிறேன் ''

''அதெல்லாம் ஒண்ணும் இல்லைப்பா... திடீர்னு நீ டிகிரி சர்டிபிகேட்டு எல்லாத்தையும் கிழிச்சிப் போடற தைப் பாத்ததுமே, ஒரு மாதிரி ஆயிட்டேன்.''

''என்னிக்கோ நான் இதுங்களைக் கிழிச்சிப் போட் டிருக்கணும்மா! ஆமாம்மா! நான் கூட இல்லே ஒரு தொடை நடுங்கியா, அரசாங்க வேலை வேணும், இல்லேன்னா ஒரு கம்பெனி வேலை வேணும், மாசம் பொறந்தா சம்பளத்தை வாங்கிக்கிட்டு, கையை வீசிக் கிட்டு நடக்கணும்னு நினைச்சேன்!''

''இதென்னடா இது? அவன் அவன் ஆசைப்படறது தானே? ஒரு வேலை கிடைக்கணும்னு ஆசைப்படறது என்ன தப்பான விஷயமா என்ன?''

''அம்மா! ஒண்ணு புரிஞ்சுக்கணும். ஏன் தொண் ணூறு சதவீதம் ஆளுங்க மாசச் சம்பளம் வர்ரா மாதிரி வேலை தேட நினைக்கிறான்? பொறுப்பு கம்மி. நமக் கெதுக்கடா அலைச்சல். நமக்கெதுக்கு மூட்றதும் மோத றதும் போராடறதும்... ஏதோ போவோம், ரெண்டு பைலு பாப்போம். மாசம் பொறந்தா, சம்பளம்

வாங்கிக்கிட்டு நடையைக் கட்டுவோம்—அப்படின்னு நினைக்கறான். எவனுக்குமே முதுகெலும்பில்லே. தைரியம் இல்லே, உழைக்கத் தெம்பில்லே. பொறுப்பு இல்லே, அதனாலதான் சொந்தமா ஒரு தொழில் பண்ணத் தயங்கறான். வேலை இல்லாத் திண்டாட்டம் இருக்கக் காரணமே, இளைய தலைமுறையோட இந்தச் சோம்பேறி மனப்பான்மையாலேதான். 'ரிஸ்க்' எடுக்கவே நடுங்கறான். எம்.எல்.ஏ.கிட்டே இருபதாயிரம் குடுக்கத் தயாரா இருக்கிறான். அதே இருபதாயிரம் வெச்சிக் கிட்டு, சின்னதா ஒரு தொழில் தொடங்க நினைக்கற தில்லே...''

அம்மா திறந்த வாய் மூடாமல் கேட்டிருந்தாள்.

தியாகு அவளிடம் முழங்கியதோடு நிற்கவில்லை. வங்கியின் உதவியோடு ஒரு பிரிண்டிங் பிரஸ் வைத்தான்.

உரிமையாளர் என்கிற அந்த ஒரு சுகம் இருக்கிறதே, அடாடா, அது தந்த உற்சாகத்தில், இரவு பகல் பார்க் காமல், உழைக்க ஆரம்பித்தான்.

நண்பர்களின் நிறுவனங்களுக்கு நேரில் சென்று, ஆர்டர் பிடித்தான்; அவர்களின் பரிந்துரையோடு, மற்ற நிறுவனங்களின் பணிகளையும் பொறுப்பாகச் செய்து கொடுத்தான்.

தொழிலாளிகளோடு தொழிலாளியாகப் பொழு துக்கும் உழைத்தான். அந்த உழைப்பு—அந்தத் தன்னம் பிக்கை—அந்த முயற்சி அவனை முன்னேற்றத்துக்குப் படிப்படியாக அழைத்து வந்தன.

அன்று தெருத் தெருவாக இன்டர்வியூவுக்கும், அலுவலகங்களுக்கும் போய்ப் போய் ஏமாற்றத்துடன் திரும்பிக் கொண்டிருந்த தியாகு இன்றைக்கு ''நீலவான் பதிப்பகம்'' தியாகராஜன்...

காலம் கனிந்து விட்டது... அவன் நாள் வந்து விட்டது... தூக்கம் இல்லாமல், பசி, சோர்வு மறந்து உழைத்தான், உழைத்தான்.

''அம்மா! என்னம்மா? அப்படியே நிக்கறே? போலாமா?''

''நீதாண்டாப்பா என்னைக் கூப்பிட்டுட்டு அப்ப டியே பாத்துக்கிட்டு இருந்தே.''

''சரி சரி! வாம்மா! பொன்னியும் அதோட வீட்டுக் காரரும் எத்தனைப் பிரியமா வந்து, கூப்டுட்டுப் போயி ருக்காங்க? முதல் குழந்தை பொறந்த நாளுக்குக் கூப்பிட்டு இருக்காங்கம்மா! நாம பாட்டுக்கு ரெண் டாவது குழந்தை பொறந்த நாளுக்குப் போயி நிக்கப் போறோம்.''

''சரிதாண்டா போக்கிரி... வாயடிச்சிக்கிட்டு நிக்கறது யாரு? நீதான் கிளம்பு...''

பொன்னியின் சிறிய பங்களா பளபளவென்று ஜொலித்தது. வண்ண விளக்கு அலங்காரத்தில் தேவ லோகம் தரைக்கு இறங்கி விட்டாற்போல் காட்சியளித் தது. சுவையான விருந்துச் சாப்பாட்டின் மணம் கலவை யாக வந்து மூக்கைத் துளைத்தது.

தியாகு காரை விட்டு அம்மா இறங்கும்வரை, பொறுமையாகக் காத்திருந்தான். பரிசுப் பொருளை எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தபோது, பொன்னி சிட்டுப் போல் பறந்து வந்தாள்.

''என்னண்ணா? இவ்வளவு லேட்டு?''

மாணிக்கமும், சுந்தரவல்லியும் மெல்ல வந்து புன் சிரிப்புடன் தியாகு கையைப் பற்றிக் கொண்டார்கள்.

''வாங்க!''

பொன்னியின் கணவன் பாசத்துடன் வரவேற்றான்.

''நல்லா இருக்கீங்களா? முன்னே பாத்ததுக்கு ஒரு சுத்து இளைச்ச மாதிரி தெரியறீங்க!''

''நீங்க என்னங்க? உங்க தங்கச்சி ''இன்னும் கொஞ்சம் போட்டுக்குங்க! இன்னும் கொஞ்சம் போட்டுக்குங்க''ன்னு தொணப்பியே, என்னை ரெண்டாள் பருமனுக்குக் கொண்டாந்துட்டுது... நீங்க என்னடான்னா இளைச்சுட்டதாச் சொல்றீங்க! கிண்டலா?''

''எங்கண்ணன் கிண்டல்லாம் பண்ணாது. தெரியுமில்லே. அது ஆசையாக் கேக்குது...''

எப்போதுமே பொன்னி நீட்டி முழக்கி அண்ணா என்று கூப்பிடும்போது, பாசம் கொப்பளித்துக் கிளம்பும். இப்போது கல்யாணம் ஆகி, குழந்தைக்குத் தாயாய் ஆன பிறகும், அந்த வார்த்தையைப் பழைய படியே நீட்டி முழக்கிக் கூப்பிடுகிற பழக்கம் மாற வில்லை. அந்தப் பழைய பாசமும் மறையவில்லை.

''வாங்கண்ணா! வாங்க...''

கூடம் நிறைந்திருந்தது. மாணிக்கத்தைப் பார்த்தாள் அம்புஜம். தியாகுவின் தோளில் கையை வைத்தபடி அன்பாகப் பேசிக் கொண்டிருக்கும் மாணிக்கத்தைப் பார்க்கப் பார்க்க வியப்பாக இருந்தது.

இந்த மாணிக்கமா? இந்த மாணிக்கமா ஒரு காலத்தில் ''அப்படி'' அலைந்தவன்?

எப்படி ஒரு போராட்டம் நடத்தி, பொன்னி இவன் போக்கை மாற்றினாள்? இப்படி ஒவ்வொரு பிரச்சினைக்கும், சவுக்கைத் தாங்களே கையில் எடுத்துக் கொண்டால், எவ்வளவு நன்றாக இருக்கும்?

ஆனால், பொன்னி சவுக்கையா எடுத்தாள்? அகிம்சை ஆயுதத்தை அல்லவா கையில் எடுத்துக் கொண்டாள்? தன்னை வருத்திக் கொண்டாள்—உண்ணாவிரதம் என்றும், பேசா விரதம் என்றும்! அந்த வருத்தம் சவுக்கடியாய் அவர்களைத் தாக்கிற்று.

மாணிக்கத்தின் முன்னாள் நடவடிக்கைகள் நினைவுக்கு வந்தன...

நழுவும் சரிகைத் துண்டை இழுத்துப் பிடித்தபடி கம்பீரமாக ஊருக்குப் பெரிய மனிதனாகப் பேசிக் கொண்டிருக்கும் இந்த நேரத்தில், பழைய கதையைச் சொன்னால் யாராவது நம்புவார்களா?

"என்னம்மா யோசனை?"

அருகில் வந்து நின்ற தியாகுவை வாஞ்சையாகப் பார்த்தாள் அம்மா.

"ஒண்ணும் இல்லே ராஜா... ஏதோ பழைய நினைப்பு... ப்ச்... விடு!"

அம்மாவின் பார்வை போன திக்கைப் பார்த்ததும், தியாகுவுக்கு விஷயம் புரிந்தது.

"அடடே! வாங்க சார்!"

"ஓ! ராகவனா? நல்லா இருக்கீங்களா?"

தியாகுவும், அந்த விருந்தினரும் நகர்ந்தார்கள்.

சாப்பிடாமல் போக விடுவாளா பொன்னி?

அவள் உபசரிப்பில் திண்டாடித் திணறிப் போனார்கள்

அப்படி இப்படி என்று வீட்டை விட்டு ஒரு வழியாகக் கிளம்பும்போது இரவு மணி பதினொன்று ஆகிவிட்டது.

நிதானமாக, கடற்கரைச் சாலையில் வண்டியைச் செலுத்திக் கொண்டிருந்த தியாகுவுக்கு அந்த இருட்டும், குளிர்ச்சியும் பொன்னியின் கள்ளமில்லாப் பாசத்தில் குளித்து வந்த நிலையில் மேலும் இனிமை சேர்த்தன.

தியாகுவின் கிராப்பைக் கடற்காற்று குறும்புக்காரக் குழந்தையாக வந்து, வந்து கலைத்தது.

''ஏம்மா?''

''என்னப்பா?''

''நீ நிம்மதியா இருக்கியாம்மா?''

''என்னடா கேள்வி இது? அதுவும் இந்த நேரத்துலே?''

''சொல்லேம்மா...''

''நல்லாத்தாம்ப்பா இருக்கிறேன். மனசு நிம்மதி யோடதாம்ப்பா இருக்கிறேன்.''

''அப்பா படத்துக்குப் பூச் சாத்திட்டு, பின்னே ஏம்மா அப்படி மலைச்சிப் போயி நிக்கறே மணிக் கணக்கா?''

''ம்ம்''

அம்மா சிரித்தாள்.

''அதையெல்லாம் நீ கவனிக்கிறியா?''

''பேச்சை மாத்தாதேம்மா! ஏன்னு சொல்லேம்மா''

''ஒரு கஷ்டமும் இல்லேடா தியாகு... நீ ஒரு வேலை யிலே அமரமாட்டியான்னு நான் தவிச்ச காலம் ஒண்ணு உண்டுப்பா. இப்போ, நீ அமோகமா இருக்கிறே. என் கஷ்டம் எல்லாம்...''

''சொல்லும்மா...''

''ஒரு வேளைச் சோத்துக்குக் கஷ்டப்பட்ட காலத்துலே, கூட இருந்த ஒங்கப்பா இப்போ உசிரோட இருக்கக்கூடாதா? வயிறாரச் சோறு போட்டுப் பாத்துப் பாத்து நான் சந்தோஷப்பட்டிருப்பேனே! கூட ஒக்காந்து, சாப்பிட்ற பாக்கியம் கிடைக்காமே போயிட்டுதேங்கற கஷ்டம்தாம்ப்பா! அட! தாத்தா வாவது கொஞ்சநாள் அனுபவிச்சிட்டுப் போயிருக்கக் கூடாதா?''

உண்மைதான். அம்மா சொல்வது உண்மைதான். நடுத்தட்டு மக்களுக்கு நல்ல சோறே கூட ஒரு கனவு தானே? அதைப் பெறுவது எவ்வளவு கஷ்டம் என்பது அவர்களுக்குத்தானே தெரியும்?

அம்மாவை அனுதாபத்துடன் பார்த்துவிட்டுத் திரும்பிக் கொண்டான் தியாகு.

சிவப்பு நிற மாருதி ஒன்று வேகமாக இவர்கள் காரைத் தாண்டிச் சென்றது.

முன் சீட்டில் இருப்பது யார்? தியாகு பிரமித்துப் போனான்.

அம்மாவும் கவனித்து விட்டிருக்கிறாள்,

''ஏம்ப்பா தியாகு? அந்தச் சிவப்புக் கார்லே முன் சீட்டுலே ஒக்காந்துக்கிட்டுப் போறது...''

ஓ! அம்மாவும் பார்த்திருக்கிறாள்...

''யாருன்னு தெரியலையேம்மா...''

''தெரியலையா?''

''ஆமாம்...''

தயங்கினான் தியாகு. மனம் அவனைக் கேலி செய்தது. நிஜமாகவே தெரியவில்லையா என்ன? ம்ம்!

"என்ன தியாகு? அந்த உஷா மாதிரி இல்லே? அது தாம்ப்பா அந்த ஆனந்த் தங்கச்சி உஷா... அவ மாதிரி இல்லே?"

"அப்படித்தாம்மா தெரியுது..." பதில் சொல்லும் போதே குரல் ஈனசுரத்தில் தழுதழுத்தது.

உஷாதான்... குத்து விளக்காக இருந்த உஷா இல்லை இப்போது.

கண்டபடி ஆடையணிந்து கொண்டு, கூத்தடிக்கிற உஷா... கண்டவனுடனும் கைகோத்துக் கொண்டு திரிகிற உஷா... நீளமாய்க் குஞ்சலம் வைத்துப் பின்னிய கூந்தலை வெட்டிக்கொண்டு, பாப் தலையில் சுற்றுகிற உஷா...

தொண்டை கசந்தது. த்தூ... உஷா! நீயா? நீதானா? எப்போதிருந்து இப்படி ஆனாய்?

தியாகு மனத்தில் ஓர் ஆவேச வெள்ளம் புறப்பட்டுக் கொண்டிருந்தது.

என்ன கேடு உனக்கு? உன் அண்ணன் சம்பாதித்துக் கொண்டு வந்து கொட்டுகிற பணம் போதவில்லையா? இல்லை, ஒரு வேளை, அந்தப் பாவப் பணம் உன்னைச் சும்மா இருக்க விடாமல் கிளப்பி அடிக்கிறதா?

இந்தக் கேவலத்தையும் உன் அப்பா, அப்பா இயல்பாக ஏற்றுக் கொண்டு விட்டார்களா? எது காரணம்? ஏன் ஊமையாக நிற்கிறாய்? சொல்லேன் நாகப்பாம்பே.

கற்பனையில் உஷாவை எதிரில் நிறுத்தி வைத்துக் கொண்டு, சாட்டையால் விளாசிக் கொண்டிருந்தான் தியாகு.

பல குடித்தனங்களில் ஒன்று என்கிற அளவிலா பழக்கம்? ஆனந்த் நெருங்கிய நண்பன். அது மட்டும் தானா?

மனசுக்குள் ஊதுவத்திப் புகையாய் ஓர் எண்ணம்...

இன்னும் கூட, ஏன் இன்றும் அதன் சுகந்தம் தியாகுவைப் பரபரப்படையச் செய்தது...

பளபளக்கும் முகம், சாட்டையைப் போல் நீண்ட பின்னல், எதிரில் நிற்பவரிடம் இரண்டு வார்த்தை பேசுவதற்குள், மான் போன்ற அந்தக் கண்களில் மருட்சி நிழலாடும்.

கழுத்திற்குக் கூட ஓர் அழகு உண்டு என்பதை உஷாவைப் பார்கிறவர்கள் புரிந்து கொள்வார்கள்.

அமைதியான நடை, காகிதத் தேர் ஒன்று காற்றிலே நகர்வது போல், அப்படி ஒரு நடை...

எல்லாம் கனவாய்ப் பழங்கதையாய்ப் போய் விட்டது...

கல்லூரியில் படித்த காலத்தில் பேரழகிகள் கூட அவன் பின்னே ஏங்கி நின்றார்கள். தியாகுவின் மனமோ உஷாவின் பின்னால் மவுனமாய்ப் போய்க் கொண் டிருந்தது.

அப்படி ஒரு பந்தம்—அப்படி ஓர் எண்ணம்—வாயால் தன் காதலை அவன் வர்ணித்துக் காட்டிய தில்லை. ஆனால் காதல் மகாராணியின் பின்னால் தளபதியாக அவன் மனம் தொடர்வதை அவனாலேயே தடுத்துக் கொள்ள முடியாததால், ஓர் ஊமை நாடகம் அரங்கேறிக் கொண்டுதான் இருந்தது.

அவளைப் பார்த்துவிட்டால் ஒரு பரபரப்பு—நினைத்துவிட்டால் ஒரு நெகிழ்வு.

அந்த ஊமை நாடகம் அப்படியே பேச்சு மூச்சற்று எங்கோ ஆழத்தில் அமிழ்ந்து போய் விட்டிருந்தது...

ஆனந்த் போக்கு மாறிப் போன பிறகு, கனவுகள் எல்லாமே கலைந்து போய் விட்டன...

இன்று இந்தக் கோலத்தில் உஷா... எப்படி மாறிப் போனாள்? ஏன் இவள் மாறிப் போனாள்? ஆனந்த் என்ன ஆனான்?

உள்ளம் எழுப்பிய வினாக்களுக்குக் குழப்பம்தான் பதிலாயிற்று.

காரின் வேகத்தைக் கூட்டினான் தியாகு...



''என்னப்பா? இவ்வளவு சீக்கிரமா வந்துட்டே?''

''ஒரு போராட்டம்... ஊர்வலமா நாங்க கோட்டை வரைக்கும் போறோம்!''

''ஏம்ப்பா?''

''ரெண்டு மூணு வருஷமா அரசு புத்தகங்களை நூலகத்துக்காக வாங்கலைம்மா! பெரிய பதிப்பாளர் சமாளிச்சுப்பாரு. சின்னப் பதிப்பாளர் என்ன ஆவாரு? அவங்களோட போற விஷயமா? ஒரு புத்தகம்னா அச்சுக் கோக்கிறவங்க, 'பைண்ட்' பண்றவங்க, லாமினேஷன் பண்றவங்க, அப்புறம் அச்சகத்துலே இருக்கிற மெஷின்மேன், இன்னும் மத்தத் தொழிலாளிங்க எவ்வளவு பேரு இதனாலே பாதிக்கப்படறாங்க தெரியுமா? எழுத்தாளருங்க உற்சாகம் குறைஞ்சி போயிடுது... இந்தத் தொழிலை விட்டா, வேறு எந்தத் தொழிலுக்கு இத்தனைப் பேரும் இனிமே போக முடியும்? பெரிய போராட்டமா ஆரம்பிச்சிருக்கிறோம்...''

தியாகு பேசப் பேச, கண் முன் சுந்தரம்தான் தெரிந்தார். அம்புஜம்மாள் கண்கள் கலங்கின.

இந்தத் தியாகு படிக்கும்போதும் அக்கம்பக்கத்து ஏழைச் சிறுவர்களை அழைத்து வைத்து, பாடம் சொல்லித் தருவான். சேரிகளுக்கு நண்பர்களுடன் போய், தெருக்களைச் சுத்தப்படுத்திவிட்டு வருவான். ரேஷன் கடைக்காரன் எந்த ஏழையையாவது ஏமாற்று வதைப் பார்த்தால், அவன் திமிரைத் தட்டிக் கேட்டு, அடக்காமல் வரமாட்டான்...

அம்புஜம்மாவுக்கு இனம் புரியாத கலவரம்தான் தோன்றும்... இப்படிப் பொதுச் சேவை செய்யப் போய், ஒரு அண்ணா போனது போதாதா? இவன் வேறு கிளம்புகிறானே—அதே வழியில்...

தாய் வயிறு கலங்கித் தவித்தது.

"ஏம்ப்பா? நீயுண்டு, உன்..."

"வேலையுண்டுன்னு இருக்கச் சொல்றியாம்மா? ஏம்மா? மனுஷனாப் பொறந்தவனுக்குக் கடமைகளே கிடையாதா? அப்புறம் இந்தச் சிலுவைகளைச் சுமக்க யார்தான் வருவாங்கம்மா?"

அம்புஜம்மாளால் ஒன்றும் பேசமுடியவில்லை.

"அதுக்கில்லேப்பா... என்னவோ ஊர்வலம் கீர்வலம்னு சொல்றியே... பயமா இருக்குதே..."

"நம்ம எதிர்ப்பை அமைதியான வழியிலே காட்டறோம். அவ்வளவுதானேம்மா! அதுலே பயம் எதுக்கு?"

சிரித்துக் கொண்டே தியாகு கிளம்பினான்.

"என்னம்மா? இன்னும் என்னன்னவோ சொல்லணும்னு நினைக்கிறே போல..."

''அது இல்லேடா தியாகு... இன்னும் மூணு நாள்லே, உனக்குப் பிறந்தநாளு வருது தெரியுமில்லே? எத்தனையாவது பிறந்தநாளு? சொல்லு பாக்கலாம்...''

யோசித்தான் தியாகு.

''ஆமாம் தியாகு! இருபத்தி ஒம்பது வயசு முடிஞ்சி, முப்பதாவது வயசு ஆரம்பிக்குதுப்பா... நீ என்னவோ கடை கடைன்னு ஓடிடறே! இல்லேன்னா அச்சகத்துக்குக் கிளம்பிடறே! போதாக்குறைக்கு இதுமாதிரி ஊர்வலம் லாம் வேற... நானும் சொல்லிச் சொல்லி அலுத்துப் போயிட்டேன்! ஒரு கல்யாணம் பண்ணிக்கோன்னு எத்தனை ஆயிரம் தடவை சொல்லிட்டேன்!''

''அம்மா! ப்ளீஸ்! ராத்திரி பேசலாம். இப்ப நான் கிளம்பறேன். ஊர்வலம் தொடங்கற நேரம் ஆயிட்டுது. உங்க புள்ளைக்குக் கல்யாணம் பண்ணிப் பாக்கணும்னு ஆசை வருது பாரேன், எந்த மாதிரியான நேரத்துலே?''

சிரித்துக் கொண்டே தியாகு கிளம்பினான். ஊர்வலம் புறப்படத் தயாராக இருந்தது. சங்க உறுப்பினர்கள், பொறுப்பாளர்கள், நண்பர்கள் என்று ஏக மாய்க் கூட்டம்...

ஊர்வலம் சிறப்பாக நடந்து முடிந்தது. கோட்டை வாசலில் மற்றவர்கள் தடுத்து நிறுத்தப்பட, நிர்வாகி கள் உள்ளே சென்று தங்கள் கோரிக்கைகளை விளக்கும் மனு கொடுத்து விட்டு வந்தார்கள்.

சங்கத்தின் நிர்வாகிகள் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''அப்ப நான் வரட்டுங்களா?''

தியாகு விடைபெற்று கிளம்பினான். வழியெல்லாம் அம்மாவின் தாபம் நிறைந்த முகமே கண் முன்னாடி நின்றது.

எண்ணங்களின் சுமை அதிகமாகவே நரம்புகள் தெறித்து விழுவதைப் போல வலித்தன...

ஒரு ஹோட்டலின் முன்னே காரை நிறுத்தினான்.

சூடாக ஒரு காபி குடித்துவிட்டு வெளியே வந்த தியாகு திகைத்துப் போனான்.

யார்... யார் இது? உஷாவா? உஷாவா அவன் காருக்குப் பக்கத்தில் காத்திருக்கிறாள்?

ஆர்வத்துடன் அருகில் சென்றான் தியாகு.

தன் அருகில் நிற்பவள் அதே உஷாவா? அழகு மேலும் செயற்கைச் சாதனங்களால் டாம்பீகமாக வெளிச்சம் போட்டுக் காண்பிக்கப்பட்டுக் கொண் டிருந்தது.

ஆனாலும், எதையோ தொலைத்து விட்டுத் தேடு பவளின் சோகம் அவள் கண்களில் தெரிந்தது. என்ன அது?

"உஷா நீயா?"

"தியாகு... நல்லா இருக்கீங்களா?"

அத்தனை ஆண்டுகள் அண்டை வீட்டுக்காரர்களாக இருந்த போதெல்லாம் பேசி அறியாதவர்கள் முதன் முதலாகப் பேசிக் கொண்டார்கள்.

"உஷா..."

"தியாகு..."

உணர்ச்சித் தளும்பலில் வார்த்தைகளே வர வில்லை.

"ஆனந்த் என்ன ஆனான்? நீ... நீ..."

"நீ ஏன் இப்படித் திரிகிறாய்?" என்று கேட்க, தியாகுவின் உள்ளம் முன்வரவில்லை.

உதட்டை வெறுப்பாகச் சுழித்தாள் உஷா.

"தியாகு... ஆனந்த் அத்தியாயம் முடிஞ்சி போச்சி, அவன் கள்ளச் சாராயக்காரனாவே மாறிப் போய்ட்டான்... தொழில் போட்டியிலே, ஒருத்தனைக் கொலை பண்ற அளவுக்கும் போயிட்டான். இப்போ வேலூர் ஜெயில்லே இருக்கிறான்..."

"எப்போ இருந்து உஷா?"

"இந்த ரெண்டு வருஷமா..."

"சரி... அப்புறம்! நீ வந்து, என்னை..."

வார்த்தைகள் சிக்குப் பிடித்த நூல் கண்டாக மாறின.

"நானா தியாகு? ஆடம்பரமா வாழ்ந்துட்ட என் அப்பா அம்மாவுக்கு ஆனந்த் இல்லாமலே சமாளிக்க முடியலை. ஆனந்த் இல்லாமேன்னு கூடச் சொல்லக் கூடாது. அவன் சம்பாத்தியம் இல்லாமேன்னுதான் சொல்லனும். மறைமுகமா, இந்த வழிக்கு என்னை அவங்கதான்—அவங்களேதான் தயார் பண்ணி அனுப்பினாங்க. நான் திரும்பி வரவே முடியாத அளவுக்கு, எங்கியோ போய்ட்டேன் தியாகு... கெட்டழிஞ்சி போயிட்டேன்! வேண்டாம்னு திரும்பி வரவே முடியாத அளவுக்குப் போயிட்டேன் தியாகு..."

முகம் மூடி அழுதாள் உஷா.

சிவப்பு மாருதியில் எவனோ ஒருவன் அணைப்பில் உஷாவைப் பார்த்தது நினைவுக்கு வந்தது. தியாகுவின் உடம்பெல்லாம் ஓர் எரிச்சல்.

"உஷா... எதுவுமே மீண்டு வர முடியாத தூரம் இல்லே... நான்..."

"ப்ளீஸ் தியாகு! நான் பொன் முட்டை இடற வாத்து... என்னை இழக்க அந்தப் பேராசைப் பிசாசுங்க ஒரு நாளும் சம்மதிக்க மாட்டாங்க. உலகத்தோட

எந்தக் கோடிக்குப் போனாலும், இழுத்துட்டு வந்துடு வாங்க...''

''உஷா...''

''ஆமாம் தியாகு! ஒரு காலத்திலே எனக்கும் மனசுன்னு ஒண்ணு இருந்தது. அதுலே ஆராதிக்கிற விக்கிரகம் ஒண்ணு இருந்தது. இப்போ, எல்லாத்தையும் இழந்துட்டேன்...''

''உஷா! என்னைப் பத்தி உனக்குத் தெரியும். கொள்கைகளைப் பேசறவன் மட்டும் இல்லே நான்.''

''எனக்குத் தெரியும் தியாகு! ஆனா, அழுகிப்போன பழத்தை அப்பாவிக் குழந்தைக்கு யாராவது தின்னக் குடுப்பாங்களா?''

''உஷா ..''

''ஆமாம் தியாகு! நான் வரேன். என்னமோ உங்களைப் பாத்துப் பேசணும் போல இருந்தது. இந்த ஓட்டல் மாடியிலேதான் தங்கி இருக்கிறேன்—ரெண்டு மணி நேரத்துக்கு. உங்க காரைப் பாத்ததும் இறங்கி ஓடி வந்தேன். சின்ன வயசுக் கனவை, காதலைச் சொல்லாமே விட எனக்கு மனசில்லே.''

பையிலிருந்து ஒரு கைக்குட்டையை எடுத்தாள் உஷா.

அட! இந்தக் கைக்குட்டையைத் தோய்த்து உலர்த்திவிட்டு, பிறகு காணாமல் போய்விட்டது என்று தோட்டம் முழுக்கத் தேடினோமே! தியாகு பரவசமாய் அந்தக் கைக்குட்டையைப் பார்த்தான்.

''ஆமாம் தியாகு! உங்க கைக்குட்டைதான், எப்பவும் இதைப் பத்திரமா என் கூடவே வெச்சிருப்பேன்.''

''உஷா...''

உணர்ச்சித் தளும்பலில், வார்த்தைகள் திணறின.

"வரட்டுமா தியாகு?"

தியாகு அவளுடனேயே நடந்தான்.

"இல்லை தியாகு! நம்ம வழிங்க எதிர் எதிர் வழிங்க. நீங்க அந்தப் பக்கம் போகணும். நான் இந்தப் பக்கம் போகணும். உங்க கிட்டே விளக்கமாச் சொல்லத்தான் காத்துக்கிட்டிருந்தேன். இனிக் கவலையே இல்லை. என் மனசு அந்தப் பட்டாப்பூச்சி மாதிரி லேசா ஆயிட்டுது தியாகு...

அவள் காட்டிய பட்டாம்பூச்சி விர்ரென்று மேலே பறந்தது.

தியாகுவின் கண்கள் கலங்கின.

"இல்லே உஷா... இப்பவும் நாம..."

"இப்ப மட்டும் இல்லே, எப்பவுமே இணைய முடியாத தண்டவாளங்கள்... எனக்காகக் காத்துக் கிடக்காதீங்க. நீங்க கிளம்புங்க. எனக்கும் தியாகு, ரொம்பவே சலிச்சுப் போச்சி... அப்பா அம்மாவோட பேராசை, சுயநலம், கண்டவனோடவும் கூடிக் குலாவறது, அந்தக் காசுலே எங்கப்பா அம்மா நடத்தற டாம்பீகமான வாழ்க்கை அத்தனையுமே சலிச்சுப் போச்சி...

"ஆமாம் தியாகு! எல்லாத்தையும் விட்டொழிச்சிட்டு, எங்கேயாவது ஒரு கிராமத்துக்குப் போயிட மாட்டமான்னு இருக்குது... காலார ஆத்தங்கரைக்குப் போயி, குடத்துலே தண்ணி எடுத்துக்கிட்டு வரணும், புல்லு நுனியிலே சிம்மாசனம் போட்டு ஒக்காந்திட்டிருக்கிற பனித் துளியைப் பாத்துப் பார்த்து இரசிக்கணும், அணில் வேக வேகமாக மரக்கிளையிலே ஏறி இறங்குமே அந்த அழகைப் பாக்கணும், அகத்தி மரத்துலே பூவுங்க பூத்திருக்கிறப்ப, கிளிங்க கூட்டங்கூட்டமா வந்து ஒக்காரும் இல்லையா? அந்தக் கிளிக்கூட்டத்தைப்

பாத்துப் பாத்துப் பரவசப்படணும். அம்மாக்கோழி பின்னாடி அணி வகுத்துப்போகுங்களே கோழிக் குஞ்சுங்க அந்த நடையழகை நிதானமாப் பாத்து ரசிக்க ணும், பெரிய பெரிய மாவுக்கோலம் போட்டு காவி இழை தீட்டி தெருவை அலங்கரிக்கணும். அஞ்சு முகக் குத்துவிளக்கைப் பளபளன்னு தேச்சி, திரிபோட்டு எண்ணெவிட்டு ஏத்தி வைக்கணும்...''

''இவ்வளவுதானா? ஏன் உஷா? இவ்வளவுதானா உன் ஆசைங்க...''

''இல்லை தியாகு! இன்னும் இருக்கு...''

அவன் கண்களுக்குள் என்னவோ தேடினாள். அவள் கண்கள் கலங்கியிருந்தன.

''நமக்குன்னு ஒரு வீடு... நீங்க வேலை முடிஞ்சி வீட்டுக்கு வரீங்க... ''என்னங்க இன்னிக்கு இவ்வளவு நேரம்''னு கேட்டுக்கிட்டே, நான் காபி கொண்டு வந்து கொடுப்பேன். 'முகங் கழுவிக்கிட்டு வாங்க'ன்னு சொல்லுவேன். நானே சீப்பு எடுத்து, தலையை வாரி விடுவேன்... அப்படியே உங்க தோள் மேலே சாய்ஞ்சுப் பேன்! நீங்க ஆசையா, என்னை அப்படியே அணைச்சிப் பிடிச்சிப்பீங்க... ஆனா...''

கேவினாள் உஷா.

''இதுக்கெல்லாம் வாய்ப்பே இல்லையே தியாகு... இந்த ஜென்மத்திலே வாய்ப்பு இல்லே. ஒருவேளை அடுத்த ஜென்மத்துலே வேணும்னா நடக்கலாம்... அந்த ஜென்மத்திலயாவது பொறுப்பான அம்மா அப்பா வுக்குப் பொண்ணாப் பொறக்கணும் நான்...''

அழுதபடியே நகர்ந்தாள் உஷா...

கல்லால் அடித்த சிலை போல் நின்றிருந்தான் தியாகு... எத்தனை நிமிடங்கள் கரைந்தனவோ? பித்துப் பிடித்தவனைப் போல நின்றிருந்தான்.

பெருமூச்சுடன் காரைக் கிளப்பினான்; வாசலுக்குக் கூட வந்திருக்க மாட்டான்... ஓட்டல் வாசலில் எழுந்த பரபரப்பு, ஓலமும் அவனை அப்படியே ஓடி வர வைத்தன.

ஆங்காங்கு வாசலில் நின்றிருந்த அத்தனைப் பேரும் பயத்தால் உறைந்து போயிருந்தார்கள். பார்வைகள் ஓட்டலுக்கு முன்பக்கம் இருந்த புல்வெளியையே மொய்த்துக் கொண்டிருந்தன. அங்கே... அங்கே... அய்யோ!

பட்டுப்பூச்சி ஒன்று மேலேயிருந்து கீழே வந்து விழுந்திருந்தது. உஷா ரத்தக் களறியாய் விழுந்து, சிதறியிருந்தாள். செக்கச் செவேல் என்று ரத்தம் குளம் கட்டி நின்றது...

பதறி ஓடி, அருகில் சென்று பார்த்தான் தியாகு...

உஷா முகத்தில் மரண பயமோ, கலவரமோ, திகிலோ எதுவும் தெரியவில்லை.

அதற்குப் பதிலாக ஒரு வகையான விடுதலை உணர்ச்சிதான் அவள் முகத்தில் தெரிந்தது.

தியாகு அவளைப் பார்த்துக் கொண்டே நின்றான். தலைகுப்புற விழுந்திருந்தாள்— ஒரு கை முன்னும், ஒரு கை சற்றே பின்னுமாக— பூமியை அணைத்துக் கொண்டிருப்பவளைப் போல விழுந்திருந்தாள்.

அவள் கையில் தியாகுவின் கைக்குட்டை...

தியாகுவுக்கு மேற்கொண்டு பார்க்க முடியவில்லை. கண்களுள் அமிலம் சுரந்தது.

உஷா... உன் வாழ்க்கை இவ்வளவு சீக்கிரமாகவா முடிய வேண்டும்? சற்று முன்னால் உயிரோவியமாய் என் முன்னால் நின்றாயே... என்ன அழகாக, என்ன

அறிவாகப் பேசினாய்! இதோ, இப்படி நொடியில் இரத்தச் சேற்றில் மண்டியத்தானா?

தியாகுவுக்குத் தாங்க முடியவில்லை.

□

விடிந்தும் விடியாத காலைப் பொழுது... கையைத் தலைக்குப் பின்னால், மடக்கி வைத்தபடி படுத்திருந் தான் தியாகு,..

கண்கள் சிவந்திருந்தன... கையில் காசு இல்லாமல் போஸ்டல் ஆர்டருக்கு அலைந்த நாட்கள் நினைவுக்கு வந்தன...

ம்! ஆனந்த் பொறுமையில்லாமல் குறுக்கு வழியைத் தேர்ந்தெடுக்கப் போய்த்தானே இத்தனை விபரீதங் களும்?

உஷா கண் முன்னே வந்து நின்றாள்...

''தியாகு .. தியாகு...''

அவன் பக்கத்தில் அமர்ந்தவள், ஆசையாகத் தோளில் சாய்ந்து கொண்டாள். தியாகு அவளை அணைத்துக் கொண்டான்.

ஓ! என்னது? பக்கத்தில் இடம் வெற்றிடமாக இருந்தது.

''உஷா! உஷா!''

நீ ஏன் எதிர்த்துப் போராடவில்லை? சுலபமாக ஏன் நீ சரிந்துவிட்டாய்? அண்ணன் கொண்டு வந்த அமோக வருமானம் ஆடம்பரங்களை உங்கள் வாழ்க்கையில் பழக்கப்படுத்திவிட்டதா? அந்த மயக்கத்தில் தான் மேய்ப்பர்களே இங்கு ஆட்டை வெட்டி விட்டார்களா?

கண்ணீர் கன்னத்தினின்று இறங்கி, தலை யணையை நனைத்தது.

தேவதையாக வாழ்க்கையைத் தொடங்கியவள், மோகினியாக முற்றுப் பெற்று விட்டாளே...

தியாகுவின் உள்ளம் விம்மியது. ''தியாகு! தியாகு! எழுந்திருக்கவில்லையாப்பா?'' அம்மாவின் குரல் கேட்டது.

அவன் எழுந்தாக வேண்டும். ஆமாம்! எழுந்து தான் ஆகவேண்டும். கடமைகள் அவனுக்காகக் காத் திருக்கின்றன...

உஷா! உன்னை மறக்க முடியுமா என்னால்? இனி என் வாழ்க்கையில் என்ன இருக்கிறது? கனவுகள் எல்லாமே கலைந்து போய் விட்டனவே..,

பளீர் என்று மின்னல் போல் அந்த எண்ணம் நெஞ்ச வானில் நெட்டி நிமிர்ந்தது.

உஷாவைப் போன்ற ஒரு வனிதைக்கு வாழ்க்கை தந்தால் என்ன?

நடக்கக் கூடியதா? ஏன் நடக்காது? மனம் இருந் தால் மார்க்கம் உண்டு...

தீர்மானத்துடன் எழுந்தான்.

அம்மா அழுவாள்; எதிர்ப்பாள் வார்த்தை களால் அவளை வழிக்குக் கொண்டு வரமுடியாதா என்ன?

ஒரு பொன்னியால் தீயவனான தந்தையையே மாற்ற முடிந்தபோது, என்னால் இதில் ஜெயிக்க முடி யாதா? இந்தப் போராட்டம் நடத்திக் காட்டுகிறேன்...

''நாளைக்கு நான் ஜெயிப்பேன்'' என்று சொல்லிய படி, கதவைத் திறந்த தியாகு அம்மாவைப் பார்த்துப் புன்னகைத்தான்...

□□□

